# காவிய அரங்கில்

அ. சீநிவாசராகவன்
பேராசிரியர், முதல்வர்,
வ. உ. சி. கல்லூரி, தூத்துக்குடி.



பழனியப்பா பிரதர்ஸ்

சேப்பாக்கம்,
சென்னை-5.

தெப்பக்குளம்,
திருச்சிராப்பள்ளி-2.

சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்

**டாக்டர் ஆ. லக்ஷ்மணஸ்வாமி முதலியார்**

அவர்களுக்கு



அன்புடன்



# முகவுரை

**செ**விக்குந் தேன் என இனிக்கும் செந்தமிழ்க் காவியம் ஒன்று தருளினர் கவிக்கு நாயகராகிய கம்பர். அக் காவியத்தை ஓதி யுணர்ந்தும், பிறர்க்குரைத்தும் இன்புறுகின்ற செஞ்சொல் அறிவாள ருள் ஒருவர் திருவாளர் அ. சீனிவாசராகவன்.

காவிய அரங்கம் ஒன்று அமைக்கின்றார் இவ் அறிஞர்; அந்த அரங்கத்திற்கு நம்மை அழைத்துச் செல்கின்றார்; கம்பர் காவியத் தில் உள்ள பதினொரு பாத்திரங்களை ஒன்றன்பின் ஒன்றாய் அவ் வரங்கில் ஏற்றுகின்றார்; கலையின் ஒளியை அப் பாத்திரங்களின் மீது பாய்ச்சுகின்றார்; அரங்கத்தின் மருங்கே நின்று அவற்றின் பண்புகளை விளக்கிக் கூறுகின்றார். இடையிடையே "எப்படி இருக் கிறது; பார்த்தீர்களா?" என்று கேட்கின்றார். "அடாடா என்ன விருந்து, என்ன விருந்து" என்று வியக்கின்றார்; 'பேஷ் பேஷ்' என்று ஆவலம் கொட்டுகின்றார். 'அவசரப்பட வேண்டாம்' என்று கையமர்த்துகின்றார்.

காவிய அரங்கிலே அன்பு விளக்காகக் காட்சியளிக்கின்றான் கங்கை வேடனாகிய குகன். அவ் விளக்கின் ஒளியிலே "இலக்குவனது அன்பின் தனிப் போக்கைப் புரிந்து கொள்கிறோம்; பரதனுடைய அற்புதமான பக்தியை நேருக்கு நேராகக் காண்கிறோம்; உல கனைத்தையும் அணைக்கும் கோசலையின் தாய்மையைக் கண்டு தலை வணங்குகின்றோம்; எல்லாவற்றிற்கும் மேலாக அறத்தின் மூர்த்தி யாகிய இராமன் அருளின் வடிவமாகவும் உள்ள அருமையை உணர்ந்து அனுபவிக்கிறோம்" என்று விளக்குகின்றார் ஆசிரியர்.

அரங்கத்தை விட்டு விலகுகின்றது அவ்விளக்கு. கோட்ட முடைய பாத்திரம் ஒன்று ஏறுகின்றது. உடற் கோட்டமும் உட் கோட்டமும் வாய்ந்த அப் பாத்திரத்தை,

> **"இன்னல்செய் இராவணன் இழைத்த தீமைபோல்**
> **துன்னரும் கொடுமனக் கூனி தோன்றினாள்"**

என்று அறிமுகப்படுத்துகின்றார் கவிஞர். அவள் செய்த சூழ்ச்சி யாலேயே கைகேசியின் தூய உள்ளம் திரிந்தது. தலைமகனை இராமன் மணிமுடி துறந்து மரவுரி அணிந்தான்; நாடு விட்டுக் காடு புகுந் தான். எல்லார்க்கும் இனியனாகிய இராமன் இளம் பருவத்தில் விளை

யாட்டாக அவள் கூனை நோக்கி ஒரு மண்ணுருண்டையை எய்தான். அந்த விளையாட்டு வினையாக முடிந்தது. ஊனமுள்ள தன் உடம்பைப் பார்த்து ஏளனம் செய்தான் இராமன் என்று எண்ணினுள் மானமுள்ள கூனி. அவன் குறும்பை நினைத்து நினைத்துக் குமுறிக்கொண் டிருந்தாள். சமயம் பார்த்துச் சூழ்ச்சி செய்து இராமனுக்கும் கோசல நாட்டிற்கும் எல்லையற்ற இடர் விளைத்தாள்.

**" சிறியர் என்றிகழ்ந்து நோவு செய்வன செய்யல் மற்றிந்**
**நெறியிகந்து யானோர் தீமை யிழைத்தலால் உணர்ச்சி நீண்டு**
**குறியதாம் மேனியாய கூனியால் குவவுத் தோளாய்**
**வெறியன எய்தி நொய்தின் வெந்துயர்க் கடலின் வீழ்ந்தேன்"**

என்று கூனியால் விளைந்த கொடுமையை வானர மன்னனுகிய சுக்ரீவ னுக்கு இராமனே அறிவுறுத்துகின்ருன். இத்தகைய கேடு விளைதலால் அன்றே,

**" உருவு கண்டு எள்ளாமை வேண்டும் "**

என்று உணர்த்தினர் திருவள்ளுவரும்.

காவிய அரங்கிலிருந்து கூனி இறங்கிய பின்பு ஒன்பது பாத்திரங்கள் ஒன்றன் பின் ஒன்ருய்க் காட்சி யளிக்கின்றன. அவற்றின் பண்புகளை யெல்லாம் நூலாசிரியர் தமது நுண்ணிய மதி நலத்தால் ஆராய்ந்து காட்டும் பொழுது "காட்டுவித்தால் யார் ஒருவர் காணுதாரே" என்னும் திருவாக்கை நினைந்து திளைக்கின்ருேம். பல்லாற்ருனும் சிறப்பு வாய்ந்த கம்பராமாயணத்தின் நயங்களைப் பழகு தமிழில் அழகுற எழுதி உதவிய அன்பர் சீநிவாசராகவன் பல்லாண்டு நலமுற்று வாழ்க.

சென்னை
25-7-'56

**ரா. பி. சேதுப்பிள்ளை**

## நன்றியுரை

பத்திரிகையில் வெளிவந்த கட்டுரைகளை இங்கு வெளியிட அனுமதித்த 'தினமணி' ஆசிரியர் அவர்கட்கும், முன்னுரை நல்கி ஆசி வழங்கிய பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கட்கும், நூலைப் புத்தக வடிவில் சிறப்புற அமைத்த பழனியப்பா நிலையத்தாருக்கும் என் மனமார்ந்த நன்றி.

வ.உ.சி. கல்லூரி,
தூத்துக்குடி.
26-7-'56

அ. சீ. ரா.

# உள்ளுறை

# நம்மைப் பற்றிய கவலை

"ஆமாம், லாபம் உண்டா?" என்றார் நண்பர்.

"யாருக்கு?" என்றேன்.

"எங்களுக்குத்தான், ஐயா, எங்களுக்குத்தான். உங்களைப்பற்றி என்ன கவலை?" என்று படபடத்தார்.

"எதிலே லாபம் எதிர்பார்க்கிறீர்கள்?" என்று கேட்டேன். கேட்காமல் என்ன செய்வது? அவருக்கிருந்த கோபத்தில் கேள்வி போட்டால்தான் ஏதாவது சொல்வார் போல் இருந்தது.

"எதிலேயா? கம்பராமாயணப் பாத்திரங்களை நாம் சந்திப்பதில்தான். ஏதோ பொழுது போகாமல் கம்பன் எழுதி வைத்தான் என்றால்..."

திரும்பிப் பார்த்தேன். பொழுது எங்கள் பேச்சைக் கவனித்ததாகத் தெரியவில்லை. அது படுவேகமாகச் சாய்ந்துகொண்டிருந்தது. மேற்கு வானத்து நெருப்பு

அணைந்து விட்டது. எதிரே, சீறிப் புரண்டு நிமிர்ந்த கடல் அலைகளின் நுரைவாயிலே கனற்பொறிகள் பளிச் சிட்டன.

"கம்பனுக்கு எப்படியோ, நமக்குப் பொழுது தலை தெறிக்கத்தான் போய்க்கொண்டிருக்கிறது. அவன் எழுதி வைத்ததை நினைந்து, போகின்ற பொழுதைக் கொஞ்சம் நிறுத்த முடியாதா என்று பார்க்கிறேன்" என்று சொல்லிவிட்டுச் சிரித்தேன்.

"சிரிப்பதற்கென்ன, சிரிக்கலாம். ஆனால், நான் கேட்ட கேள்விக்குப் பதில் இல்லை" என்றார் நண்பர், கசப்பாக.

நான் யோசனையில் ஆழ்ந்தேன்...

கம்பனுடைய காவியத்திலே வரும் பாத்திரங்களைச் சந்திப்பதில் என்ன லாபம் என்பது நண்பர் கேட்ட கேள்வி. இதற்கு அவ்வளவு சுலபமாகப் பதில் சொல்ல முடியாதே என்று திகைத்தேன். அப்போது வால்டர் பேடர் என்ற ஆங்கில ஆசிரியன் சொன்னது ஞாபகத் திற்கு வந்தது.

நாற்பது அல்லது ஐம்பது வருஷம் வாழ்ந்து மறைந்த மனிதன் ஒருவன்; நானூறு வருஷமாக மறைய வழிதெரியாமல் திண்டாடும் கருங்கல் மதில் ஒன்று. இந்த மனிதனையும், அந்த மதிற்சுவரையும் ஒன்றாக வைத்து, "இவன் நீர்மேற் குமிழியாய் அழிந்துபோனான். சுவரோ நிலைத்து நிற்கிறது. இன் னும் குறைந்தது நானூறு வருஷத்திற்கு நிற்கும். ஆகவே, மனிதன் வாழவே இல்லை; சுவர்தான் வாழ் கிறது" என்று யாராவது சொல்வார்களா? எவ்வளவு காலம் இருந்தோம் என்பதைக் கொண்டன்று, எப்படி இருந்தோம் என்பதைக் கொண்டல்லவா வாழ்ந்தோமா இல்லையா என்பதை நிர்ணயிக்கவேண்டி இருக்கிறது? எவ்வளவு காலந்தான் நின்றபோதிலும் சுவரை வாழ்ந்ததாக நாம் கருதுவதில்லை. அது வாழவில்லை, இருக்கிறது. மனிதனே வாழ்கிறான். அவன் உள்ளே, உணர்ச்சிகளும், கருத்துக்களும், எண்ணங்களும் ஊற்

றெடுத்துப் பெருகி வெள்ளக்காடாய் மண்டிவிடுகின்றன. இந்த உள் உலகத்தை வைத்துத்தான் வாழ்க்கையை அளவிடுகிறோம். எவனுக்கு இந்த உலகம் வளம் பொருந்தியதாக இருக்கிறதோ அவன் வாழ்பவன். உள் உலகம் ஒன்றுமில்லாத வெறும் சூன்யமாக இருந்தால், அந்த மனிதனிடம் மற்ற எது இருந்தாலும் அவன் வாழவில்லை. இதைத்தான் வால்டர் பேடர் சொன்னான்.

உண்மைதானே! குருடனைப் பார்த்து இரக்கப்படுகிறோம். ஐயோ, பாவம், வெயிலையும், மழையையும், நிலவையும் இவனால் அனுபவிக்க முடியவில்லையே! உலக முழுதும் அழகுத் தெய்வம் நர்த்தனம் புரிகிறாளே, இவனுக்கு என்ன பயன்! குழந்தை சிரிக்கிறது; இளம் பெண் ஒருத்தியின் மதர்த்த விழிக்கடலில் நாணம் படர்கிறது; காயாம்பூ மலர்கிறது; கொன்றை தழல்சொரிகிறது; தாயின் அரவணைப்பை நோக்கிக் கன்று துள்ளி ஓடுகிறது; வானமும் வயலும் வர்ண மேலாப்பின்கீழ் அழகைப் பயிர் செய்கின்றன. இவற்றையெல்லாம் குருடன் கண்டானா? இல்லை. என்றாலும் அவன் காதின் வழியாகவாவது பிரபஞ்சத்தின் சப்த விசித்திரங்களை அனுபவித்து மகிழலாம். ஆனால், உள்ளமே மரத்துப்போய், உணர்ச்சியை இழந்து ஒருவன் இருக்கிறானே, அவனைப் பார்த்துத்தான் உண்மையில் இரக்கப்படவேண்டும்.

மேல்நாட்டுக் கவிஞன் ஒருவன் சொன்னான்:

'அழுகிறாயா? நல்லது, வெட்கப்படாதே,
நன்றாகக் கண்ணீர்விடு.
யாருக்காக வருந்துகிறாய்?
ஏழைகள்,
கும்பி துடிக்கக் கொடுமையில் வாழும்
இந்த நகரத்து ஏழைகள், இவர்களுக்கா?
அன்பும், அருளும், நம்பிக்கையும்
இன்னும் சாகவில்லை...
இரக்கப்படுகிறாய், இல்லையா?
அதில் என்ன வெட்கம்?

அதோ, இரங்குவதற்குப்
பயப்படுகிறான், பேதை!
சாவில் துடிக்கும் மக்களைக் கண்டும்
கண்ணில்லாதவன் போல
முகத்தைத் திருப்பிக்கொள்கிறான்.
உண்மையில் சாவது அவர்களா ?
இல்லை, தம்பி, அதற்கு முன்
இவன் செத்துவிட்டான்...
கூச்சப்படாதே, இரக்கங் காட்ட
பயப்படாதே.'

இரக்கம் இல்லாதவன் செத்தவன்தான். அவன் உள்ளம் உணர்ச்சி இல்லாத மரக்கட்டையாகிவிட்டது. அவனும் மூச்சுவிட்டுக் கொண்டு நம்மிடையே மனிதன் போல் உலாவலாம். ஆனாலும் என்ன, அவன் வாழ வில்லை.

இப்போது தெரிகிறதல்லவா ? உள்ளத்தை உணர்ச்சிக் களஞ்சியமாகச் செய்துகொள்வதுதான் பூரணமாக வாழ்வதற்கு வழி. மிக மிக மெல்லிய தந்திகள் கொண்ட வீணை ஒன்று உண்டு. தென்றலின் மிருதுவான அசைவிற்கூட அந்த வீணையின் தந்திகள், துடித்து இசை எழுப்புமாம். இந்த வீணையைப் போலவே நமது உள்ளமும் அமைந்துவிட்டதானால், வெளியிலே எவ்வளவு சாதாரணமான சம்பவம் நடைபெற்றாலும் சரி, நமக்குள்ளே உணர்ச்சி நாதம் உதயமாகும் ; நாமும் வாழ்வோம்.

இதை வேண்டாம் என்று யார் சொல்லப்போகிறார்கள்? வேண்டியதுதான். ஆனால், பெறுவது எப்படி? அதுதான் கேள்வி. இதை ஆராய்வதற்கு முன், எதைப் பெற விரும்புகிறோம் என்பதை முதலில் இன்னும் தெளிவுபடுத்திக் கொள்வது நல்லது.

ஒன்று : உணர்ச்சி நிறைந்த உள்ளம். உணர்ச்சி என்று சொல்லும்போது சிந்தனை, கருத்து, பார்வை, இலட்சியம் இவற்றையும் சேர்த்தே குறிப்பிட்டுவிடலாம்.

இரண்டு : ஒவ்வொரு உணர்ச்சிக்கும் பூரணமான அழுத்தமும் வடிவும். இலேசாக, புகைபோலத் தோன்றி

மறையும் உணர்ச்சி, தோன்றினாலும், தோன்றாவிட்டாலும் ஒன்றுதான்.

மூன்று: உணர்ச்சிகள் யாவற்றையும் அனுபவித்த காரணத்தினாலேயே நல்லுணர்ச்சிகள் மட்டுமே தோன்றக் கூடிய பண்பு. இது மிக மிக அவசியம். உணர்ச்சிக் களஞ்சியமாக இருக்கிறேன் என்று சொல்லிவிட்டு, மனக் குகையிலே கொடிய மிருகங்களுக்கு இடந் தருவது பேதைமையாக முடியும்.

இம் மூன்றையும் பெறுவதே ஒருவன் வாழ்கிறான் என்பதற்கு அடையாளம். பெறுவதற்கு வழி, காவியப் பயிற்சி. இப்படியா, இதற்குத்தானா இவ்வளவு பீடிகை என்று நினைக்கிறீர்களோ, என்னவோ?

காலை வெயில், துள்ளி வருகிறது. சாதாரணமான விஷயம். எத்தனையோ தடவை பார்த்திருக்கிறோம். அது காரணமாகவே, பார்க்காமலும் இருந்து விடுகிறோம். உள்ளத்திலே ஏதாவது உணர்ச்சி ஏற்படுகிறதா என்றால், இல்லை. அப்படி ஏதாவது தோன்றினாலும் அதற்கு அழுத்தமும், வடிவும் இல்லாத காரணத்தால் உடனேயே அழிந்துபோகிறது. அதிகமாகப் போனால் "இன்றைக்கு வெயில் எப்படி?" என்று கேட்டுவிட்டு, அதற்குள் காபி ஞாபகம் வந்து விடுவதால், அந்த அமுதத்தைத் தேடிச் செல்கிறோம். அதுவாவது, அமுதம் என்ற உணர்ச்சியை வடிவாக எழுப்புகிறதா? இல்லை. அதற்குள் தபால் வருகிறது, குழந்தை அழுகிறது, கடன்காரன் வருகிறான், ஆபீசுக்கு நாழிகையாகிவிடுகிறது. ஒன்றன் பின் ஒன்றாக, அல்லது ஒரே காலத்தில் உள்ளே, நமக்குள்ளேதான், ஒரே குழப்பம். தண்ணீரின்மேல் பல கோலங்களை வேகமாக வரைந்த கதை தான். காலை வெயிலைப் பார்த்து அனுபவித்து உணர்ச்சியைப் பெறுவதா, அது நடக்கக் கூடிய காரியமா? அப்படி ஏதாவது பெற்றாலும், அது பிஞ்சிலே பழுத்ததைப் போல் உடனே வெம்பி விழுந்து விடுகிறது. என்ன செய்வது?

பாரதி வருகிறார், கேட்போம். "காலை வெயிலா, அடடாவோ, அடடா, அது அற்புதம். தம்பீ கேள்:

'தங்கம் உருக்கித் தழல்குறைத்துத் தேனாக்கி
எங்கும் பரப்பியதோர் இங்கிதம்'

அல்லவா?" என்கிறார். காலை வெயிலின் அழகு நமது நெஞ்சிலே வடிவாகிறது, நிலைத்தும் நிற்கிறது. இந்த அழகின் பல்வேறு சாயைகளை ஒவ்வொரு கவிஞனும் ஒவ்வொரு விதமாக—ஆகவே புது அனுபவமாக, புதிய உணர்ச்சியாகத் தருகிறான். காலை வெயில் மாத்திரமா, இயற்கை நிகழ்ச்சிகள் ஆயிரம் ஆயிரம், நீங்களும் நானும் கவனிக்கத் தவறியவை கோடானுகோடி—காவியத்தின் மூலம் நம்முடைய அனுபவமாக மாறிவிடுகின்றன. இப்படிப் பெறுகின்ற அனுபவம் ஒவ்வொன்றும் ஒரு உணர்ச்சிப் பொக்கிஷம்; ஒவ்வொரு உணர்ச்சியும் புதுமை மெருகும் சலியாத வலிமையும் கொண்ட அமர தீபம்.

மனிதர்களோடு பழகுகிறோமே நாம், அங்கேயும் இதே கதைதான். சந்திக்கும் ஒவ்வொருவனையும் முழுவதும் புரிந்துகொள்ள நமக்கு நேரம் இல்லை, சக்தியும் இல்லை. போதாதற்கு நம்முடைய சொந்த உணர்ச்சிகள்-தெளிவில்லாத அந்தக் கலவை-கிளம்பி மற்றவர்களைக் காணவொட்டாமல் தடுத்து விடுகின்றன. நம்முடைய உணர்ச்சி சக்தியைப் பெருக்கிக் கொள்ள ஆசைப்படுவது உண்மையானால், நம்மை மறந்து, பிறரோடு ஒட்டி நிற்கப் பழக வேண்டும். இது நம்முடைய தினசரி வாழ்க்கையில் சாத்தியமா? பஸ் கண்டக்டர் முகத்தில் சோகத்தின் இருட்டை நான் பார்த்திருக்கிறேன். ஏன் இந்தச் சோகம்? அவனைக் கேட்பதற்கு நான் துணிய வேண்டும். துணிந்தாலும் அவன் சொல்வானா? சொன்னாலும், அது அவனைப்பற்றிய முழு உண்மையாகுமா? வேண்டுமென்று எவ்வளவு மறைக்கிறானோ? அவனுக்கே அவனுடைய சோகம் அழுத்தமற்ற உணர்ச்சியானால், அதைப் பற்றி நமக்கு எப்படிச் சொல்லப்போகிறான்?

உணர்ச்சியே அழுத்தமுடையதாக இருந்தாலும், சொல்லிலே அழுத்தம் இருந்தால்தானே நம்முடைய இதயம் வரை அந்தச் சோகம் எட்டும்? பஸ் கண்டக்டர் சொல்லின் செல்வனு? இத்தனைக்கும் மேலாக, எனக்கு நேரம் ஏது? இதோ, ஸம்ஸ்க்ருத கல்லூரி வந்துவிட்டது. நான் இறங்கிப் போக வேண்டும். எனக்கு வயிற்றுப் பிழைப்பு இருக்கிறதே!

காவிய உலகத்திலே, சாவதானமாக மனிதத்துவத்தைக் காணச் சந்தர்ப்பம் கிடைக்கிறது. நம்மை மறந்து—அதாவது நம்முடைய நிஜ வாழ்க்கையில் நமக்குள்ள பொறுப்பு, கௌரவம், கவலை, பெருமை, சிறுமை இவற்றை யெல்லாம் ஒதுக்கிவைத்துவிட்டு—மற்றவர்களோடு பழகவும், அவர்கள் மன நிலைகளில் நம்மை இழந்துவிடவும் முடிகிறது. அதுமாத்திரமல்லை. எத்தனையோ விதமான மனிதர்களைச் சந்திக்கிறோம். ஒவ்வொருவரோடும் உறவாடுகிறோம். அவர்கள் வாழ்க்கையில் பங்கு கொள்ளுகிறோம். கூனியோடு சென்று கைகேசியின் மனத்தைக் குலைக்கிறோம். கைகேசியாக நின்று வரங்கேட்கிறோம். தசரதனை மாறித் துடிக்கிறோம். இராமனைக் காட்டுக்குப் போகிறோம். சீதையாகத் தவம் புரிகிறோம். இராவணனைக் காமத்திற்கு பலியாகிறோம். எத்தனை, எத்தனை பண்புகளோடு ஒட்டி நிற்கிறோம், எத்தனை எத்தனை காரியங்களை மேற்கொள்ளுகிறோம், எத்தனை எத்தனை அனுபவங்களைப் பெறுகிறோம்! அதோடு ஒவ்வொரு உணர்ச்சியும் எவ்வளவு பிரம்மாண்டமான ஆகிருதியோடு நம்முடைய நெஞ்சில் வளர்கிறது! எவ்வளவு தெளிவாக அதன் நன்மையும் தீமையும் காரண காரிய அமைதியோடு நமது நெஞ்சில் உருவாகி விடுகின்றன!

நமது நிஜ உலகிற்கு—மௌன்ட் ரோட்டின் சஞ்சலத்திற்கு, வயிற்றுப் பிழைப்பின் சிறுமைக்கு—நாம் திரும்பும்போது உணர்ச்சி விசாலமும், அனுபவ அழுத்தமும், நன்மை தீமைத் தெளிவும் பெற்று, வாழும் மனிதர்களாக வருகிறோம். உண்மையாக வாழவும் சக்தி பெற்று விடுகிறோம்......

இப்படியெல்லாம் எண்ணி அலைந்த பிறகு, என்னிடம் கேள்வி கேட்ட நண்பர் பக்கம் திரும்பினேன். "கம்ப ராமாயணப் பாத்திரங்களை ஏன் சந்திக்க வேண்டும் என்றல்லவா கேட்டீர்கள்? நான் ஒரு கேள்வி கேட்கிறேன். வாழ வேண்டாமா?" என்றேன். ஆனால், நண்பரைக் காணவில்லை. நான் யோசனையில் அழுந்தி இருந்தபோது, பஸ் கிடைக்க வேண்டுமே என்ற கவலையில் அவர் நழுவியிருக்க வேண்டும். அவர்தான் சொல்லிவிட்டாரே முதலில் 'உங்களைப்பற்றி என்ன? என்னைப் பற்றித்தான் கவலை" என்று. அதன் பிறகு பேச்சு ஏது? தன்னைப் பற்றியே கவலைப்படும் குருடனுக்கு வாழ்க்கைதான் ஏது?

# அன்பு விளக்கு

இரவு வந்தது. அந்தி வானத்தில் எங்கும் சிதறிக் கிடந்த மாதுளை முத்துக்கள் மறைந்தன. எங்கிருந்தோ புகைபோல வந்து படர்ந்து உலகத்தையே வளைத்துக் கொண்டது இருள். ஏதேதோ குருட்டு யோசனையில் அழுந்தி இருந்தவன், 'என்ன பைத்தியக்காரத்தனம்! வேலை கொள்ளையாகக் கிடக்கிறதே' என்று சொல்லிக் கொண்டே என் மேசைப் பக்கம் திரும்பினேன். திரும்பினால் என்ன, நான் தேடிய கம்ப ராமாயணப் புத்தகத்தை அவ்வளவு சுலபமாக எடுத்துவிட முடிந்ததா? என்னைக் கேட்காமல் உள்ளே புகுந்து நிறைந்த அந்த இருட்டைத் திட்டினேன்.

'என்ன மொண மொணக்கிறாய்?' என்று கேட்டுக் கொண்டு வந்தாள் என் சகோதரி. அவள் கையிலே, கார்த்திகை மாசம் பிறந்து விட்டதற்கு அடையாளமாக சிறு அகல் விளக்கொன்று இருந்தது; அதைச் சன்னல் ஓரத்தில் வைத்துவிட்டு என்னைப் பார்த்துச் சிரித்தாள். நான் அதை யெல்லாம் கவனிக்க வில்லை. மேசை மேலே கிடந்த புத்தகக் காட்டிலிருந்து 'இதோ இருக்கிறது'

என்று சொல்லிக் கொண்டே ராமாயணப் புத்தகத்தை எடுத்தேன்.

'இருக்கிறதா, இல்லாமல் எங்கே போய்விடும் ?' என்றாள் அவள். ஏதோ பதில் சொல்ல வாயெடுத்தவன், சன்னல் விளிம்பில் நிமிர்ந்து எரிந்த விளக்கின் சுடரைப் பார்த்தேன். 'என்னால் அல்லவா உன்னால் புத்தகத்தைக் கண்டு எடுக்க முடிந்தது ?' என்று பேசியது விளக்கு. உண்மைதான். ஆனாலும் இந்த விளக்குக்கு இவ்வளவு பெருமை ஆகாது. இது என்ன, கம்ப ராமாயணத்தைச் சிருஷ்டி செய்ததா ? பிரதியாவது செய்ததா, அச்சிட்டதா ? ஒன்றும் இல்லையே ! இருந்தாலும் இந்த விளக்கு இல்லாவிட்டால் புத்தகம் என் கைக்கு அகப்பட்டிருக்குமா ? புத்தகத்தை அது உண்டாக்கவில்லை. புத்தகத்தின் தன்மையை அது மாற்றவில்லை. புத்தகம் இருந்த இடத்தை எனக்குக் காட்டியது; புத்தகத்தின் உள்ளே இருக்கும் எழுத்தையும் எனக்குக் காட்டத் தயாராய் இருந்தது. இந்த விளக்கைப் போலவே, தான் ஒன்றிலும் சம்பந்தப்படாமல், சுற்றியுள்ள மற்றவர்களை இனம் காட்டும் மனிதனை எங்கேயாவது பார்த்தது உண்டா என்று நினைத்தேன். அவ்வளவுதான், குகனுடைய ஞாபகம் வந்தது.

குகனை முதன் முதலில் 'கங்கை என்னும் கடவுள் திருநதி'யின் வடகரையில் சந்திக்கிறோம். பாறை ஒன்றை அப்படியே செதுக்கிவைத்தது போன்ற உடல்; திரண்ட தோள்; விசாலமான மார்பு; முன் கையில் பனை மரச்சிரும்புபோல அடர்ந்த ரோமம். தலைமயிரில் நெற் கதிர்களை ஆபரணமாகச் செருகிக்கொண் டிருக்கிறான். இடையிலே சிவந்த தோலால் ஆன உடை; புலியின் வாலைக்கொண்டு கட்டி இருக்கிறான். கையிலே வில்லும் உடுக்கும் ; காலிலே தோல் செருப்பு ; கணணிலே தீ ; குரலிலே இடியின் குமுறல். வரும்போதே அவனைத் தொடர்ந்து புலால், மீன் இவற்றின் நாற்றம் வீசுகிறது. அவன் பேச்சோ, பித்தர் சொல்லும் வார்த்தையாய், பொருத்த மில்லாமல் தட்டுத் தடுமாறி வருகிறது.

'ஊற்ற மென்னறவு ஊனெடு மீன்நுகர்
நாற்ற மெய்யன் நகையில் முகத்தினன்
சீற்றம் அன்றியும் தீயெழ நோக்குவான்
கூற்றம் அஞ்சக் குமிறும் குரலினன்'

அசல் காட்டு மனிதன் என்றுதான் தோன்றுகிறது. நாகரிகமற்ற முரட்டுக் காட்டுமிராண்டி, இவன் எங்கே இங்கே வந்தான் என்றும் எண்ணுகிறோம்.

ஆனால், நாகரிகம் என்பது தோற்றத்தையும், உடையையும் பொறுத்த விஷயமா? அது உள்ளத்தைப் பொறுத்த காரியமல்லவா?

'பெயக்கண்டும் நஞ்சுண்டுஅமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்'

என்று வள்ளுவர் பேசினரே, பண்புடைய மனத்தை யல்லவா நாகரிகத்தின் அடையாளமாக அவர் குறிப்பிட்டார்? இருக்கட்டுமே, அப்படித்தான் இந்தக் காட்டுக்குள்ளே என்ன பண்பு மலர்ந்து விடப்போகிறது? அவசரப்பட வேண்டாம். பாரதி சொன்னது ஞாபகமிருக்குமே?

'சிப்பியிலே நல்ல முத்து விளைந்திடும்
செய்தி அறியாயோ?
குப்பையிலே மலர் கொஞ்சும்
குருக்கத்திக் கொடி வளராதோ?'

அப்படியானல், இந்தக் குகன் என்ன செய்கிறன், பார்ப்போம்.

இராமன் கங்கைக் கரையில் உள்ள முனிவர்களோடு தங்கி இருக்கிறன். அவன் இருக்கும் பர்ணசாலையை நெருங்குவதற்குமுன், தன்னுடைய பரிவாரங்களை அப்புறம் நிறுத்திவிட்டு, தன் வில்லையும் வாளையும் அவற்றோடு தன் மனத்தில் உள்ள குற்றத்தையும் களைந்துவிட்டு வருகிறன் குகன் :

'சுற்றம் அப்புறம் நிற்கச் சுடு கணை
வில் துறந்து அரை வீக்கிய வாள்
அற்றம் நீத்த மனத்தினன் அன்பினன்
நற்றவப் பள்ளி வாயிலை நண்ணினன்.'

முனிவர்களுடைய ஆசிரமத்தை 'நற்றவப்பள்ளி வாயிலை' நெருங்குகிறோம் என்ற உணர்ச்சியுடைய இந்தக் குகனிடந்தான் எவ்வளவு வினயம்! இவனை நாகரிகம் இல்லாதவன் என்று எப்படிச் சொல்லுவது? வினயம் மாத்திரம் இல்லை, உண்மையான அன்பும் அவனோடு வருகிறது. அதன் அடையாளமாகக் கையில் உள்ள காணிக்கைப் பொருள்கள் நிற்கின்றன. அவை என்ன தெரியுமா? தேனும் மீனும். நல்ல வேடிக்கை, கோசல நாட்டு அரசையே ஒரு பொருட்டாக எண்ணாத வள்ள லுக்குத் தேனும் மீனுமா காணிக்கை? இந்த எண்ணம் முதலில் குகனுடைய மனத்தில் தோன்றியிராது. அவன் 'அற்றம் நீத்த மனத்தினன்; அன்பினன்.' உடைந்த பொம்மையைத் தன் காணிக்கையாக உங்களுக்குத் தரும் குழந்தை, மூளிப் பொம்மையைத் தருகிறோமே என்று எண்ணுகிறதா? தன்னையே உங்களுக்குத் தருகின்ற உணர்ச்சியல்லவா அந்தக் குழந்தையைப் பொம் மையோடு உங்களை நோக்கித் தளர்நடையிட்டுவரச் செய்கிறது? இப்படித்தான் இராமனைக் காண வரு கிறான் குகன். இதை உடனே தெரிந்து கொள்கிறான் லக்ஷ்மணன். பர்ணசாலையின் வாசலில் நிற்கும் குகனைப் பார்த்து, 'நீ யார்? வந்த காரியம் என்ன?' என்று கேட்கும் லக்ஷ்மணன் குகனுடைய தோற்றத்தைக் கவ னிக்காமலா இருந்திருப்பான்? ஆனால், குகனுடைய பதில், இராமபக்தியில் அழுந்திய லக்ஷ்மணனுக்கு உண் மையைப் பளிச்சென்று காட்டி விடுகிறது.

'தேவா நின்கழல் சேவிக்க வந்தனன்
நாவாய் வேடுவன் நாய் அடியேன்.'

இதுதான் குகனுடைய முதற் பேச்சு, லக்ஷ்மணன் கேள்விக்குக் கிடைக்கின்ற பதில். வார்த்தைகளில் உள்ள பணிவும் அடக்கமும் மாத்திரம் இல்லை, குகனு டைய குரலில் உள்ள உண்மையும் கனிவும் லக்ஷ்மணன் மனத்தைக் கவர்ந்திருத்தல் வேண்டும். இடியொத்த அந்தக் குரலில் தொனிக்கும் அன்பையே லக்ஷ்மணன் காண்கிறான். அநாகரிகத் தோற்றத்தின் உள்ளே இருக்கும் உண்மையான நாகரிகப் பண்பே அவன்

கண்ணில் படுகிறது. ஆகவேதான் ராமனிடம் விரைந்து சென்று,

> 'கொற்றவ நின்னைக்காணக் குறுகினன்....................
> ..........................உள்ளம் தூயவன் தாயின் நல்லன்
> எற்று நீர்க் கங்கை நாவாய்க்கு இறை குகன் என்றான்'

என்று பேசுகிறான்.

இராமன் தன்னை ஏற்றுக் கொள்வானா என்ற கவலை கூட குகனுக்கு இல்லை. இராமனுடைய நட்பைப் பெற விரும்பும் சுக்ரீவனும் விபீஷணனும் இதைப் பற்றி எண்ணுகிறார்கள். ஆனால், குழந்தை உள்ளத்தோடு, தன் களங்கமற்ற அன்பையே நம்பிவருகிறான் குகன். அந்த நம்பிக்கை பொய்க்கவில்லை. குகன் உள்ளே போகிறான்; ராமனைக் கண்டதும்,

> 'கனிந்தனன் இருண்ட குஞ்சி மண்ணுறப்
> பணிந்து மேனி வளைத்து வாய் புதைத்து'

நிற்கிறான். 'உட்கார்' என்று இராமன் சொல்லியும் உட்காரவில்லை. தான் கொண்டுவந்த காணிக்கையை, எல்லையற்ற அன்பில் மலரும் நம்பிக்கையோடு இராமனுக்குச் சமர்ப்பிக்கிறான். 'ஏதோ அற்பப் பொருள், ஏற்றுக் கொள்ளவேண்டும்' என்ற உபசார வார்த்தை பேசவில்லை. எப்படிப் பேச முடியும்? தேனும், மீனும் மாத்திரமா, அவற்றோடு தன்னையே தரும் அன்பில் குழைந்து நிற்கும் உண்மைக்கெதிரே உபசாரம் எப்படித் தலைகாட்டும்? இதை இராமன் உடனே உணர்ந்து கொள்கிறான். பக்கத்திலே உள்ள முனிவர்கள் 'தேனையும் மீனையுமா கொண்டுவந்தான்? என்ன பைத்தியக் காரத்தனம்' என்று நினைத்தார்களோ என்னவோ, தெரியாது. ஆனால், அந்த நினைவுக்கு இடமே இல்லாமல், 'அன்போடு பொருந்திய எதுவும் பவித்திரமானது. இந்தத் தேனும் மீனும் அமுதத்தைவிட உயர்ந்தவை. ஏன் தெரியுமா? உள்ளத்திலே இருக்கும் காதலையல்லவா இவை காட்டுகின்றன? பளிச்சென்று எல்லோரும் தெரிந்து கொள்ளும்படி உதவுகின்றன?' என்று இராமன் பேசுகிறான்.

'அரிய தாம் உவப்ப உள்ளத்து அன்பினுல் அமைந்த காதல்
தெரிதரக் கொணர்ந்த என்ருல் அமுதினும் சீர்த்த அன்றே
பரிவினில் தழீஇய என்னில் பவித்திரம்.'

குகனுடைய அன்பை இராமன் ஒரு கணத்தில் தெரிந்துகொண்டு விட்டான். நமக்குத் தெரியும்படியாகவும் அந்த அன்பு பலவகையில் இனம் காட்டிக் கொள்ளுகிறது. "கங்கையைக் கடக்கவேண்டும். நீ இன்று உன் சுற்றத்தாரோடு ஊர் போய்ச் சேர்ந்து நாளை விடியற்காலம் படகுகளோடு வா' என்று இராமன் விடை கொடுத்தனுப்புகிருன். ஆனுல், குகன் போக இசையவில்லை. 'என் அன்பு எவ்வளவு குறைந்தது என்பதை இப்போது உணர்கிறேன். உண்மையான அன்பானுல், உன்னை இந்தக் கோலத்தில் கண்ட பின்னும் கண்ணை வைத்துக் கொண்டிருப்பேனு? மாட்டேன். இருந்தாலும் உன்னை விட்டுவிட்டு ஊருக்குப் போகவா? ஐயனே, அது முடியாது; என்னுல் முடியாது. இங்கேயே இந்த அடிமை இருப்பதற்கு அருள் செய்யவேண்டும்' என்று வேண்டிக்கொள்கிருன். இராமனுடைய மனம் கனிந்து விடுகிறது. கருணையினுலும் வியப்பினுலும் மலர்ந்த கண்களோடு சீதையையும் லக்ஷ்மணனையும் பார்த்து 'இந்தக் குகன் தீராக் காதலன்' என்று சொல்லிவிட்டு, குகனை நோக்கி,

யார் ரிய நண்ப ந்தி ஈண்டு எம்மொடு'

என்று அனுமதிக்கிருன். அவ்வளவு தான்! குகனுக்கு உவகை பொங்குகிறது. தனது படைகளை அமைத்து, இராமன் தங்கியுள்ள இடத்தைச் சுற்றி நின்று காவல் புரியும்படி அமைக்கிருன். அன்றிரவு நாணற்புல் படுக்கையில் இராமனும் சீதையும் துயில் கொள்ளுகிருர்கள். இரவு மு வதும் வரி வில் ஏந்தி கண்ணிமைக்காமல் காவல்புரி ருன் லக்ஷ்மணன். இந்தக் காட்சி குகனுடைய மனத்தில் ஆழமாகப் பதிந்து விடுகிறது. சக்ரவர்த்தியின் மகனுகப் பிறந்தவன், போகத்தின் மடியிலே வளர்ந்தவன் ப்படிக் கோரைப் புல்லின் மேலே படுத்துக் கிடக்கிருனே என்று குக டைய நெஞ்சம் குமுறுகிறது. லக்ஷ்மணனுடைய அன்ட ன் பெருக்கைக் கண்டு அது

குழைகிறது. தனது படைகள் யானைக் கூட்டத்தைப் போலச் சுற்றிச் சுற்றி வந்து காவல் புரிவதையும், தொடுத்த வில்லோடு தானும் இராமனைக் காத்து நிற்பதையும் குகன் மறந்துவிடுகிறான். தனது அன்பின் இலக்கான இராமனுடைய தன்மை, அதன் அரணாக நிற்கும் லக்ஷ்மணனுடைய பக்தி - இவை இரண்டையும் மாத்திரம் கண்டு, கலங்கிய கண்களோடு நிற்கிறான் :

'தம்பி நின்றானை நோக்கித் தலைமகன் தன்மை நோக்கி
அம்பியின் தலைவன் கண்ணீர் அருவிசோர் குன்றின் நின்றான்'

அன்பு தன்னைப்பற்றி எண்ணாது. எண்ணினால் அன்பாகுமா? குகனுடைய எண்ணம் முழுவதும் இராமனைப்பற்றியே. இதன் விளைவே அவனுடையகாவல் முனைப்பும், தொடுத்த வில்லும். இந்த நிலையில், லக்ஷ்மணனைப் பார்க்கிறான். தன் அன்பு எதை இலட்சியமாகக் கொண்டதோ, அது கண்ணெதிரில் லக்ஷ்மணனுடைய செய்கையில், பூரண வடிவம்பெற்று நிற்பதாகவே குகனுக்குத் தோன்றுகிறது. தன்னுடைய இலட்சியத்தைத்தான் லக்ஷ்மணன் நிறைவேற்றுகிறான் என்று கூடக் குகனால் எண்ண முடியவில்லை. அன்புலகிலே தன்னுடையது என்பது உண்டா? இராமனைப் பற்றித் தானே குகனுடைய நினைவெல்லாம்? அவனுக்கு லக்ஷ்மணன் செய்யும் தொண்டின் பெருமைதான் குகனுடைய அன்புக்குத் தென்படுகிறது. அதே தொண்டை, அன்றிரவைப் பொறுத்த வரையில், தானும் செய்கிறோம் என்ற நினைவே குகனுக்கு இல்லை. வில்லை ஏந்தித் தானே அவனும் நிற்கிறான்? விழித்த கண்ணோடு அவனுந்தானே காவல்புரிகிறான்? ஆனால், இதையெல்லாம் எண்ணுகிறானா, இல்லை. தன்னைப் பற்றிய நினைவே இல்லாமல் லக்ஷ்மணனுடைய தியாகத்தைப் பாராட்டிப் பாராட்டி உருகுகிறான்; அதனால் இராமனுக்கு ஏற்படும் நன்மையை எண்ணி எண்ணிக் களிக்கிறான்.

வில்லுங் கையுமாய் நிற்கிறானே இந்த லக்ஷ்மணன், இவனால் இராமனுக்கு என்ன தீங்கு நேருமோ என்று குகன் அஞ்சியதாகவும், அதனால் தானும் இரவு முழுதும்

விழித்திருந்து காவல் காத்ததாகவும் வைஷ்ணவ சம்பிரதாயத்துப் பூர்வாசாரியர்கள் சிலர் கருதுகின்றனர். அவ்வாறு சொல்வதில் சுவை இருக்கிறது. ஆதாரமும் இருக்கலாம். ஆனால், கம்பருடைய காவியத்தில் இதற்கு ஆதாரம் இருக்கிறதா என்பது சந்தேகம்.

இதனால், தான் வகுத்துக் கொண்ட கடமையை விடவில்லை. அதைப்பற்றிச் சிந்தியாமலேயே அதை நிறைவேற்றுகிறான். இரவு முழுதும் தொடுத்த வில்லோடு கண்விழித்துக் காவல் காக்கிறான். அவனுடைய அன்பு அவ்வளவு அற்புதமானது. இறைவனிடத்திலே உண்மையான பக்தி உடையவர்கள் அடியார்களைக் கண்டதும் பரவசம் அடைகிறார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறோம். ஞானசம்பந்தப் பெருமானுடைய பல்லக்கைச் சுமந்து சென்ற அப்பருடைய பேரன்பு நமக்கு ஞாபகம் வருகிறது. குகனுடைய அன்பு இத்தகையது. லக்ஷ்மணனுடைய பக்தி வடிவம் குகனுடைய அன்பு நிறைந்த மனத்தில் எவ்வளவு ஆழமாகப் பதிந்திருக்கிறது என்பதைப் பல படலங்களுக்குப் பிறகு பார்க்கிறோம். இராமன் கங்கைக் கரையில் இரவைக் கழித்த இடத்தைப் பரதனுக்குக் காட்டும் குகன், லக்ஷ்மணனைப் பற்றிப் பேசுகிறான் :

'வில்லை ஊன்றிய கையோடும் வெய்துயிர்ப்போடும் வீரன்
... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... கண்கள் நீர்சோரக் கங்குல்
எல்லைகாண்பளவும் நின்றான் இமைப்பிலன் நயனம்'

இந்தக் காட்டு வேடனுடைய அன்புதான் எவ்வளவு பவித்திரமானது ! இரவு முழுதும் இராமனிடமும் அவன் பக்தனை லக்ஷ்மணனிடமும் அது லயித்திருக்கிறது.

கங்கைக் கரையில் பொழுது புலர்கிறது. ஆற்று வெள்ளத்தைக் கடக்க வேண்டுமே, இதுதான் இராமன் கவலை. 'படகு கொண்டு வருகிறாயா விரைவில்?' என்று குகனிடம் திரும்புகிறான். அங்கே காண்கிறான் இன்னொரு வெள்ளத்தை. அது கங்கையினும் பெரியது, அதனினும் தூய்மையானது. கங்கைப் புனலையாவது

எப்படியோ கடந்துவிடலாம். பொய்யில்லாத இந்த வேடனுடைய உள்ளத்தில் அலைமோதும் அன்புக்கடலை எவ்வாறு தாண்டிச் செல்வது என்று இராமன் பிரமிக்கிறான்.

இத்தனைக்கும் இராமன் சொல்லைக் குகன் நேரடியாக மறுத்துப் பேசவில்லை. 'கங்கையைக் கடக்க வேண்டுமா, வேண்டாமே,எதற்காகக் கடப்பது' என்றெல்லாம் கேட்கவில்லை. 'காட்டில் தானே இருக்கவேண்டும் ? நாங்கள் இருக்கும் இடம் வனப்பிரதேசம்தான்' என்று தொடங்குகிறான் அவன். ஒரு சமயம், ஜன சஞ்சாரமில்லாத இடத்தை ராமன் நாடிச் செல்கிறானோ என்ற எண்ணம் வரவே, அதற்கும் சமாதானம் ஒன்றைத் தேடிவைத்துவிடுகிறான். 'இது வனந்தான். என்றாலும் நாங்கள் இருக்கிறோம் என்பாயோ ? இருந்தால் என்ன ? கள்ளமில்லாத. இயற்கையோடு இசைந்த வாழ்க்கையே வேடர் வாழ்க்கை. உள்ளொன்று வைத்துப் புறமொன்று நடக்கும் பொய்முறை இங்கே இல்லை. ஆகவே நாங்கள் இருப்பதால் உன்னுடைய தவத்திற்குத் தடை ஏதும் இராது.

'பொய்முறை யலரால் எம் புகலிடம் வனமேடாம்'

என்று பேசுகிறான். உண்மையான வினயம் இப்படித்தான் பேசும். 'வனந்தான். இருந்தாலும் இங்கே ஒன்றும் குறைவில்லை. தேவையானதைத் தேடிக்கொள்ளும் வலிமை எங்களுக்கு இருக்கும்போது குறை என்ன வரப்போகிறது? இந்த வலிமையும் உனக்கு அடைக்கலம். உன் அடிமைகளாய் இருந்து உனக்கு ஏவல்செய்வோம். எங்களை உன் உறவினராக ஏற்றுக்கொள். இங்கேயே எங்களோடு நெடுங்காலம் தங்கிவிடு.

'செய்முறை குற்றேவல் செய்குதும் அடியோமை
இம்முறை உறவுஎன்ன இனிதுஇரு நெடிது எம்மூர்'

என்று தழதழத்த குரலில் வேண்டிக் கொள்கிறான். தான் வாழும் காட்டின் பெருமையைக் குழந்தைபோல் உற்சாகத்துடன் விவரிக்கிறான் :

'தேன்உள தினைஉண்டால் தேவரும் நுகர்தற்காம்
ஊன்உள துணைநாயோம் உயிர்உள விளையாடக்
கான்உள புனலாடக் கங்கையும் உளதன்றோ
நான்உள தனையும் இனிதுஇரு நாடுஎம்பால்'

அவ்வளவு காலம் இருப்பதற்கு ராமன் என்ற கவலை வருகிறது. ஒரு நாளாவது எங்கள் குடிசையில் தங்கினால் போதும். அதைவிடப் பாக்கியம் எங்களுக்கு உண்டா ?

'உய்குதும் அடியேம்எம் குடிலிடை ஒருநாள்நீ
வைகுதி எனின்மேலும் வாழ்வில்லை பெரிது'

என்று அழாக் குறையாய் வேண்டுகிறான்.

முதல் சந்திப்பிலேயே குகனுடைய அன்பின் தூய்மையை, அதன் ஆழத்தை உணர்ந்த இராமன் இப்பொழுது அதன் பரப்பைக் காண்கிறான். அவன் மனம் அருளால் நிறைகிறது. குகனுடைய குழந்தை உள்ளத்தை எண்ணும்போது அவனுக்கும் களங்கமற்ற உற்சாகம் உண்டாகிறது. குழந்தைக்கு ஆறுதல் சொல்கின்ற பாவனையில், மெல்ல நகைத்துக்கொண்டு 'கங்கையல்லாத வேறு புண்ணிய நதிகளையும் நான் பார்க்க வேண்டாமா? அங்குள்ள முனிவர்களைத் தரிசிக்க வேண்டாமா ? இதையெல்லாம் செய்து முடித்துக்கொண்டு, சிலநாளில் இங்கே வந்து சேருவேன்' என்கிறான்.

குகன் மறுவார்த்தை பேசவில்லை.இராமன் பேசிவிட்டால், குகனைப் பொறுத்தவரையில், அது தெய்வ வாக்கு. தாய் சொல்லும் சமாதானத்தை ஏற்றுக்கொள்ளும் குழந்தையைப்போல, 'சரி' என்று ஒப்புக்கொள்கிறான். அயோத்தியில் லக்ஷ்மணன் செய்தது நமக்கு ஞாபகம் வருகிறது. கைகேசி ஆற்றிய கொடுமை காதில் விழுந்ததும்,

'கால்தாக்க நிமிர்ந்து புகைந்து கனன்று பொங்கும்
ஆருக்கனல்'

போல் சீறி எழுந்தான் லக்ஷ்மணன். அவனுடைய கோபத்தை ராமனும் எளிதில் தணிக்க முடியவில்லை. இராமன் பேசப் பேச, லக்ஷ்மணனும் தளராமல் தன் கட்சியை ஆத்திரத்தோடு எடுத்துக் காட்டுகிறான்.

இராமனிடத்திலே லக்ஷ்மணனுக்குள்ள அன்பு அற்புத மானதுதான். ஆனால் அது,ஏகபோக உரிமை பாராட்டும் வேகமாய்ப் பரிணமிக்கிறது. இராமனுக்கு எது நன்மை என்று தானே தீர்மானிக்கவும், அதை நிலைநாட்டவும் முற்படுகிறது, தாயின் அன்பைப்போல. குகனுடைய அன்போ எந்த உரிமையையும் பாராட்டவில்லை. இராம னுடைய நிழலில் தங்கி, அவன் இட்ட பணியைச் செய்வது ஒன்றையே கருதுகிறது. 'படகு வேண்டும் என்று சொல்லிவிட்டான் இராமன்; சிலநாளில் திரும்பி வருவேன் என்றும் சொல்லிவிட்டான்; இதற்குமேல் பேச்சேது?' என்று முடிவு செய்கிறது குகனுடைய தீராக் காதல்.

ஓடம் வருகிறது. பல கால்களை உடைய நண்டைப் போல் பரபரவென்று விரைந்து அக்கரை சேர்கிறது. ஓடத்திலிருந்து இறங்கிய இராமன், குகனைப் பார்த்து, 'சித்திர கூடத்திற்குச் செல்லும் வழி எது?' என்று கேட் கிறான். 'காட்டு வழியெல்லாம் எனக்குத் தெரியும். வழி இல்லாத இடத்தில் புதிய பாதையை அமைக்கவும் எனக்குத் தெரியும். கூடவே வந்து விடுகிறேனே! காயும் கனியும் கொணர்வேன். தங்கு வதற்கு இடமும் அமைப்பேன். இருட்டிற்கூட தடங் கண்டு செல்ல என்னால் முடியும். எந்த விதமான கிழங்கும் நொடியிலே தோண்டி எடுப்பேன். என்னிடம் வில் ஒன்று இருக்கிறது. பயமோ கிடையாது' என் றெல்லாம் படபடவென்று கொட்டிவிடுகிறான் குகன். கடைசியில்,

> 'ஒருபோதும் மல்லினும் உயர்தோளாய் மலரடிபிரியேனால்....
> பொருவரு மணிமார்பா போதுவென்

என்கிறான். இராமனுக்கு உண்மை துலங்கிவிடுகிறது. 'என்னை மாத்திரம் ஊருக்கு அழைத்துப் போ. உனக்கு நான் மிட்டாய் வாங்கித் தருவேனே' என்று பேசும் குழந்தையின் துடிப்பும், அளக்கமுடியாத ஆசையும், நம் பிக்கையும் எளிமையும் குகனுடைய அன்பின் அலைகள். இப்போது இராமன் சிரிக்கவில்லை. அவனுடைய மனம்

கனிந்துவிடுகிறது. 'அப்பா, நீ என் உயிருக்குச் சமான மானவன். இதோ நிற்கிருனே லக்ஷ்மணன், இவன் உன் தம்பி. சீதை உன் மதனி. நானே......என்னுடைய தெல்லாம் உன்னுடையது. நானே உன் உடைமை

'என்னுயிர் அனையாய்நீ இளவல்உன் இளையான்இந்
நன்னுதல் அவள்நின்கேள் நளிர்கடல் நிலமெல்லாம்
உன்னுடை யதுநான்உன் தொழில்உரிமையில் உள்ளேன்''

என்று பேசிக் குகனுடைய அன்பு வெள்ளத்தில் தன்னை இழந்துவிடுகிருன். இவ்வளவு கனிந்த இதயம் படைத் தவன் இராமன் என்பது இப்போதுதான் நமக்குத் தெளி வாகிறது. எத்தனையோ தடவை இராமனை இதுவரை சந்தித்திருக்கிறோம். தாடகை நெருப்பென விழித்து ஓடி வருகிருள்: 'பெண் என மனத்திடை' நினைக்கிருன் ராமன்.

'ஆறி நின்றது அறன்அன்று அரக்கியைக் கோறி'

என்று விசுவாமித்திரன் கூறியதும்,

'மெய்ய நின்னுரை வேதமெனக்கொடு
செய்கையன்றோ அறம் செயுமாறு'

என்ற அமைதியோடு வில்லை வளைக்கிருன். வேள்வி காத்ததற்காக விசுவாமித்திரன் பிரமாதமாக இராமனைப் புகழ்கிருன்: இராமனே 'இனி நான் செய்யவேண்டியது என்ன' என்று விசுவாமித்திரன் புகழ்ச்சி காதிலே விழாததுபோல் நடந்துகொள்ளுகிருன். மிதிலையில் சீதை யைக் கண்டு காதல் கொண்டு, விரகதாபத்தில் வருந் தும் போதும், தன்னுடைய நிலை தருமத்திற்குப் பொருந் தியதா என்ற கேள்வியைத் தனக்குள்ளேயே கேட்டுக் கொண்டு,அதற்குச் சமாதானமும் கூறிக்கொள்ளுகிருன். விசுவாமித்திரன் குறிப்பை உணர்ந்து சிவதனுசை ஒடிக் கிருன்; உலகமெல்லாம் இராமனுடைய ஆற்றலைவியந்து பாராட்டுகிறது. இராமன் மட்டும் தான் சாதித்த காரியத் தின் அருமையைப் பற்றியோ, மற்றவர்கள் அதைக் கொண்டாடுவதைப் பற்றியோ எண்ணியதாகத் தெரிய வில்லை. 'அன்னமும் அரம்பையரும் ஆரமிழ்தும் நாண' சீதை கலியாண மண்டபத்திற்கு வருகிருள். அவளைக்

கண்ட இராமன் தன் மனத்தோடு 'அறத்தின் விளைவு ஒத்து அல்லவா இவள் வருகிறாள்' என்று எண்ணுகிறான். பரசுராமனுடைய செருக்கு, பரிகாசம் இவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல்.

'நாரணன் வலியின் ஆண்டவென்றில் தருக'

என்று அடக்கத்தோடு பேசி, வில்லை வாங்கி வளைத்துச் சிறிதும் தற்பெருமையோ, கோபமோ கொள்ளாமல் 'உன்னைக் கொல்வது தருமம் ஆகாது. அம்புக்கு இலக்காக வேறு ஏதாவது ஒரு பொருளைக் குறித்துவிடு' என்று தன் கடமையை மாத்திரம் நிறைவேற்றுகிறான். மகுடம் சூட்டிக் கொள்ளவேண்டும் என்று தசரதன் சொன்னதும்,

'காதல் உற்றிலன் இகழ்ந்திலன் கடன் இது என்றுஉணர்ந்து
யாது கொற்றவன் ஏவியது அதுசெயல் அன்றோ
நீதிஎற்கு'

என்று நீதியை எண்ணுகிறான். அது போலவே 'வனம் போ' என்று கைகேசி சொன்னதும், இதுவே உறுதி என்று அந்தக் கட்டளையை ஏற்றுக்கொள்கிறான். 'காட்டுக்குப் போவதா, நானும் வருகிறேன்' என்று புழுங்குகிறாள் கோசலை. இராமனோ, 'மன்னனோடு இருந்து அவனைத் தேற்றுவதல்லவா கடமை?

'அன்னை நீ அறம் பார்க்கிலையாம்...'

என்று துயரில் துடிக்கும் தாய்க்குத் தருமத்தை எடுத்துக் காட்டுகிறான். அயோத்தி மக்கள் அரற்றுகின்றனர். இராமன் அசையவில்லை. காட்டில் நள்ளிரவில் இராமனைப் பிரியும் சுமந்திரன் 'எப்படிப் பிரிவேன்' என்று கலங்குகிறான்.

'இறப்பினும் திருவெலாம் இழப்ப நேரினும்
துறப்பிலர் அறம் எனல் சூரராவதே'

என்றஉண்மையைத் தருமத்தில்ஊன்றிய இராமனுடைய அசையாத சிந்தை சுமந்திரனுக்குப் பரிசாக அளிக்கிறது. இதையே லக்ஷ்மணனுக்கும் ஆறுதலாகத் தருகிறது. இராமனுடைய மனம் முழுதும் இப்படியாகத் தருமத்

அழுந்தி நிற்பதையே இதுவரை கண்டிருக்கிறோம். இந்த இராமனுக்குக் கனிவோ, கோபமோ ஏற்படாதா, தரு மத்தை நிறைவேற்றும் அப்ராக்ருத சக்தியாகவே நிற் கிறனே,

'பரிவு இகந்த மனத்து ஒருபற்று இலாது ஒருவுகின்றனே!'

என்று சீதை கூசாமற் கேட்டாளே அது உண்மையாய்த் தான் இருக்குமோ, அறத்தின் வழிச் செல்லும் வெறும் இயந்திரமா இந்த இராமன் என்றெல்லாம் நாம் எண்ணு கிறோம். குகன் வருகிறான், விளக்கைப்போல. இது வரை தரும நாட்டத்திலும்,பற்றற்ற கடமை உணர்ச்சியி லும் மறைந்திருந்தது இராமனுடைய கனிவு. இப்போது பளிச்சென்று நமக்குத் தெரிகிறது. கனிவு இல்லாமலா,

'அன்புள இனிநாமோர் ஐவர்கள் உளராளேம்'

என்று ஏழை வேடன் ஒருவனை இராமன் தன் சகோதர னுகச் செய்து கொள்ளுகிறான்? இந்த அற்புதத்தை நமக்குக் காட்டும் குகனுடைய நெஞ்சிலே மட்டும் வேதனை, இராமனைப் பிரிகிறோமே என்று. ஆனல், இராமன் இட்ட கட்டளை இருக்கிறதே 'இந்தச் சிருங்கி பேரத்து ஜனங்கள் என்னுடைய உறவினர். அவர்களை இங்கேயே இருந்து காக்க வேண்டியது உன் பொறுப்பு' என்ற கட்டளை, அதுவும் குகனுடைய நெஞ்சை விட்டு நீங்கவில்லை.

'பணிமொழி கடவதான் பருவரல் இகவாதான்'

ஆக, கண்ணீர் கண்ணை மறைக்க, ராமன், லக்ஷ்மணன், சீதை ஆகிய மூவரும் சித்திரகூடத்தை நோக்கி, காட்டு வெளியிலே சென்று மறைவதைப் பார்த் துக்கொண்டு நிற்கிறான் குகன்.

இந்த அன்பு விளக்கின் ஒளியிலே பரதனும் கோசலையும் வருகின்றனர். இப்போது குகனுடைய அன்பு தளர்வில்லாத வீரமாகப் பொலிகிறது. பரதனைப் பற்றி முதலில் தவருக எண்ணி விடுகிறான் குகன். லக்ஷ்மணனுடைய தியாகத்தைப் பார்த்த அளவிலேயே தெரிந்து கொண்ட குகன், எப்படிப் பரதனைப் பற்றிச் சந்தேகப்படுகிறான் என்பது நமக்கு விளங்கவில்லை.

ஆனால், பரதனைப்பற்றிக் குகன் தெரிந்து கொண்டதெல்லாம், லக்ஷ்மணன் மூலமாகத்தான். லக்ஷ்மணனே பரதனைச் சித்திரகூடத்தில் காணும் வரையில் அவனைப்பற்றி எவ்வளவோ அலட்சியமாகவும் வெறுப்பாகவுந்தான் எண்ணிவருகிறான். 'மண் கொண்டாள்கின்ற பரதனுக்கு நான் சகோதரன் இல்லை' என்று பேசியவன்தானே லக்ஷ்மணன்! குகனிடம் இதைத்தானே சொல்லியிருப்பான்? ஆகவே, பரதனுடைய சைன்யத்தைத் தொலைவில் கண்டதும் குகனுக்குக் கோபம் பொங்குகிறது.

'அஞ்சன வண்ணன் என் ஆருயிர் நாயகன் ஆளாமே
வஞ்சனையால் அரசெய்திய மன்னர்'

என்றே பரதனை மதிக்கிறான். அவ்வளவுதான், பரதனுடைய பெரும்படை குகனுக்குத் துரும்பாய்த் தோன்றுகிறது. இராமன் காட்டிய ஆச்சரியமான அன்பு அவன் நினைவில் பசுமை மாறாமல் நிற்கிறது:

'தோழமை என்று அவர் சொல்லிய
சொல் ஒரு சொல் அன்றோ'

இந்தச் சொல்லைக் காப்பாற்றுவதற்காக உயிரையும்விடத் துணியாவிட்டால் உலகத்தார்தான் ஏசமாட்டார்களா?

'ஏழமை வேடன் இறந்திலன் என்றெனை ஏசாரோ?'

ஏழமை வேடனா? ஆமாம், இருக்கலாம். ஆனால்,

'மன்னவர் நெஞ்சினில் வேடர்விடும் சரம் பாயாவோ?'

ஏன் பாயாது? பாயும். அது மட்டுமா? அது,

'கொன்று குவித்த நிணங்கொள் பிணக்குவை கொண்டு ஓடித்
துன்று திரைக்கடல் கங்கைமடுத்து இடை தூராதோ?'

கங்கையும் இங்கே இந்தப் போரில் விழப் போகும் பிணங்களை இழுத்துச் சென்று கடலைத் தூர்த்துவிடும். ஏழமை வேடனா? யார் சொன்னது? வேடர் கூட்டமல்லவா இந்த அரசர் சேனையை மோதி அழித்து, தருமமூர்த்தியான இராமனுக்கு உரிமையை வழங்கப் போகிறது?

இப்படியெல்லாம் குமுறிச் சுழல்கிறது குகனுடைய கோபத் தீ. 'கோபம் என்பது அன்பின் மறுபுறம்' என்றார் ஆங்கில ஆசிரியர் கார்லைல். இது எவ்வளவு உண்மை என்பதைக் குகனுடைய சீற்றம் காட்டுகிறது. இராமனிடத்திலே உள்ள காதலே பரதன்பேரில் கோபமாகப் பாய்கிறது. பரதனுடைய சேனை எழுப்பிய புழுதிப் படலத்தின் நடுவிலே குகனுடைய அன்பின் ஒளி விழுகிறது; உண்மை, தியாகம், உறுதி, அஞ்சாமை முதலிய வர்ணங்கள் கொண்ட வானவில்லாக மாறி நெஞ்சை அள்ளுகிறது.

பரதனை, நேரிற் கண்டதும், கல்லும் குழைந்து உருகும்படியான துயரத்தை அவனுடைய தோற்றத்தில் குகன் பார்த்து விடுகிறான். மரவுரி, சடைமுடி, அழுக்கடைந்த உடம்பு, இராமன் இருக்கும் திசை நோக்கித் தொழும் கைகள் - இவற்றைக் கண்கொண்டு பார்த்தவுடன்,

'எம்பிரான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு'

என்று கூவுகிறான் குகன். உடனே பழைய குகன் ஆகி விடுகிறான். விம்முகிறான். வில் கையிலிருந்து விழுகிறது. அன்றிரவு லக்ஷ்மணனுடைய பக்தியைக் கண்டு உருகியதைப் போலவே, இன்று பரதனுடைய அன்பைக் கண்டு பரவசமடைந்து,

'ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ'

என்று துள்ளிவிடுகிறான். இராமன் இரவில் தங்கிய இடத்தையும், லக்ஷ்மணன் கண்ணிமைக்காமல் இரவு முழுவதும் காவல் காத்து நின்ற இடத்தையும் பரதனுக்குக் காட்டுகிறான். அதோடு பரதனுடைய பெருமையையும் நமக்குக் காட்டிவிடுகிறான். எப்படி என்கிறீர்கள்? குகன் காட்டிய இடங்களைப் பார்த்ததும், மனம் உருகிப் பரதன் பேசுகிறான். கேளுங்கள். எப்படி என்பது தெரியும்:

'..............................இராமனுக்கு இளையார் என்று
முன்பு ஒத்த தோற்றத்தேயில் யான் என்றும் முடிவில்லாத
துன்பத்துக்கு ஏதுவானேன் அவன் அது துடைக்கநின்றான்
அன்பத்துக்கு எல்லை உண்டே அழகிது என் அடிமை'

எப்படி இருக்கிறது பரதனுடைய பக்தி வெறி, பார்த்தீர்களா? குகன் இல்லாவிட்டால் இதை நாம் இந்த அளவில் கண்டிருப்போமா என்பது சந்தேகம். இதோடு குகன் நின்றுவிடவில்லை. கோசலையைப் பார்த்து, 'யார் இவர்' என்று கேட்டு விடுகிறான் அவன். அவ்வளவு தான், பரதனுடைய அன்பும், சோகமும் விசுவரூபம் எடுத்து விடுகின்றன. 'இராமனைப் பெற்றதால் பெறும் செல்வத்தை, பாவியாகிய நான் பிறந்த காரணத்தால் துறந்த பெரியவள்' என்று கோசலையையும் தன் வேதனையையும் ஒருங்கே அறிமுகப் படுத்துகிறான். 'குகன் யார்' என்று கோசலை கேட்டதும், 'இராமனுக்கு இனிய தோழன். எனக்கும், லக்ஷ்மணனுக்கும், சத்துருக்கனுக்கும் மூத்த சகோதரன்' என்று பேசும் பரதன், குகனுடைய ஒளியில் நின்று, தானும் இராமனுக்குப் பின் பிறந்தவன் என்பதை நிரூபித்து விடுகிறான்.

கோசலையின் பெருமையும் இந்தச் சந்தர்ப்பத்தில் மிகுந்த சோபையுடன் தன்னைக் காட்டிக் கொள்ளுகிறது. பரதனையும், குகனையும் பார்த்து, 'குழந்தைகளே, ஏன் வருந்துகிறீர்கள்? சத்திய பராக்கிரமனான இராமன் காட்டுக்குப் போனதும் நன்மையாகவே முடிந்தது. சுத்த வீரனாகிய இந்தக் குகனைச் சகோதரனாக இராமன் பெற்று விட்டான் அல்லவா? இனி நீங்கள் ஐந்து பேரும் ஒரே ஒருவர்போல் ஒற்றுமையுடன் கோசல சாம்ராஜ்யத்தை ஆள்வீர்களாக' என்று ஆசீர்வதிக்கிறாள். நாம் பிரமித்துப் போகிறோம். இராமனுடைய தாய் அல்லவா என்று சொல்லிக்கொண்டு, நமது வியப்புக்கும், பாராட்டுக்கும் வரம்பில்லாத ஒரு வரம்பையும் சிருஷ்டி செய்து கொள்ளுகிறோம்.

இதற்குமேல் குகன் ஒன்றும் செய்யவில்லை. சித்திர கூடத்தைவிட்டு எல்லோரும் போகிறார்கள். குகன் மாத்

திரம் போக மனமில்லாமல் தயங்கி நிற்கிருன். 'போ, நீயும் போகவேண்டியதுதான்' என்று இராமன் கட்டளை இடுகிருன். பணிமொழி கடவாதவன் அல்லவா,

'கொண்டல்தன் ஆணையால் குகனும், போயினன்.'

ஆனல், அவனல் எங்கே போய்விட முடியும்? கம்பருடைய காவியத்தில் அணையாத அன்பு விளக்காக அவன் நிற்கிருன். அந்த விளக்கு, எளிமையை, உண்மையை, அடக்கத்தை, அஞ்சாத வீரத்தை எங்கும் வீசுகிறது. இந்தப் பிரகாசத்தில் லக்ஷ்மணனுடைய அன்பின் தனிப் போக்கைப் புரிந்து கொள்கிரும். பரதனுடைய அற்புதமான பக்தியை நேருக்கு நேராகக் காண்கிரும். உலகனைத்தையும் அணைக்கும் கோசலையின் தாய்மையைக் கண்டு தலைவணங்குகிரும். எல்லாவற்றிற்கும் மேலாக, அறத்தின் மூர்த்தியாகிய இராமன் அருளின் வடிவமாகவும் உள்ள அருமையை உணர்ந்து அனுபவிக்கிரும். குகன் ஒன்றும் செய்யவில்லை என்பது உண்மைதான். கதையின் சம்பவங்களில் அவனுக்குப் பங்கு இல்லை; அவற்றின் காரணமாக அவன் அமையவில்லை; அவற்றை மாற்றும் சக்தியாகவும் அவன் நிற்கவில்லை. அவன் வருகிருன். போகிருன். இதனல் கதைப் போக்கு மாறவே இல்லை. அவன் ஒன்றும் செய்யவில்லைதான்; ஏதோ குகனக இருக்கிருன். ஆனல், அது போதாதா? விளக்கு என்ன செய்கிறது?

# கூனி தோன்றினள்

குயவனுடைய சக்கரம் சுழல்கிறது; அவன் விரல்கள் சக்கரத்தோடு சுழலும் களிமண்ணை அவ்வப் போது தடவி, வடிவத்தை நோக்கிப் பதறும் மண்ணுக்கு அபயம் தருகின்றன. சக்கரம் சுழன்றுகொண்டே இருக் கிறது. விரல்கள் மண்ணைக் கோதுகின்றன. நெகிழ்ந்து விழாமல் அணைக்கின்றன. குயவனுடைய மனத்திலே உள்ள உருவத்தைச் சிறிது சிறிதாக மண்ணுக்கு ஏற்று கின்றன. வடிவமற்ற மொத்தைக் களிமண் மெல்ல மெல்லப் பானையாக நிமிர்கிறது. சக்கரம் நிற்கும்போது, களிமண் மறைந்துவிடுகிறது. களிமண் இருந்த இடத் திலே பானையின் வடிவம் அரசு செலுத்துகிறது.

காவிய உலகத்திலும் இதே கதைதான். எந்தக் காவியத்திலும் பல சம்பவங்களால் ஆன கதைச் சக்கரம் ஒன்று உண்டு. இந்தச் சக்கரத்திலே, மனிதப் பண்பு என்ற களி மண்ணை வைத்துக் கவிஞன் சுழற்றுகிருன். கற்பனை என்ற விரலால் அழுத்தமும், வடிவத்தை நோக்கி வளையும் சக்தியும் அந்த மண்ணுக்குத் தரு கிருன். மனிதர்களிடத்திலே, நம்மிடத்திலே, நாம் காணும்

பல்வேறு குணங்கள் சேர்ந்து, வடிவமில்லாமல் இருக்கும் மனிதப் பண்பு என்ற களிமண், உயிரும் தனித் தன்மையும் பெற்ற பல பாத்திரங்களாகச் சமைந்து விடுகிறது.

ஆனுல், ஒரு வேடிக்கை. குயவனுடைய சக்கரத்தின் போக்கை, அதோடு சுழன்று, உருவம் பெற்று வரும் பானையே தீர்மானிப்பது என்ருல் வேடிக்கைதானே! இந்த விந்தையைக் காவியத்திலும் நாடகத்திலும் பார்க்கிரேம். இராமன் காட்டுக்குப் போகிருன். ஆமாம்; நமக்கு நன்ருகத் தெரிந்த இராமாயணக் கதையில்தான். இது கதையில் முக்கியமான ஒரு நிகழ்ச்சி. அதன் ஓட்டத்தில் ஓர் அம்சம். கதை இந்த நிகழ்ச்சியாகச் சுழலும்போது, கோசலை, லக்ஷ்மணன், சீதை, தசரதன், சுமந்தரன் முதலிய பல காவிய பாத்திரங்களின் வடிவம் நமக்குத் தெளிவாகிறது. இராமன் காட்டுக்குப் புறப்பட்டிரா விட்டால்,

' நிறை குணத்தவன் நின்னினும் நல்லன் ஓர்
ன்

என்று பரதனைப்பற்றி இராமனிடம் பேசுவதற்குக் கோசலைக்குச் சந்தர்ப்பம் ஏது? நமக்குத்தான் அவளுடைய விசாலமான பான்மையை உணர்வதற்கு வாய்ப்பு ஏது? இப்படியே, இராமன் காட்டுக்குப் புறப்படும் ஒரு நிகழ்ச்சி, லக்ஷ்மணன், சீதை முதலிய வேறு சில பாத்திரங்களுக்கும் வடிவம் தருகிறது. ஆனுல், அந்த நிகழ்ச்சி ஏற்பட்டதற்குக் காரணம் என்ன, கவனித்தீர்களா? கைகேசியின் மனம் திரிந்ததுதானே காரணம்? ஆகவே, கைகேசி என்ற பாத்திரம் கதைச் சக்கரத்தின் போக்கைத் தீர்மானிக்கிறது. அதாவது பானையே குயவனுடைய சக்கரத்தின் ஓட்டத்திற்கு சிருஷ்டி கர்த்தா ஆகி விடுகிறது.

ஆமாம்; கைகேசியின் மனம் மாறுவானேன்? இது தெரியாதா, மந்தரை செய்த சூழ்ச்சி என்கிறீர்கள். உண்மைதான். ஆனுல், மந்தரை என்ற அந்தக் கூனியும் கதைச் சக்கரத்தில் உருவாகும் ஒரு பாத்திரமே.

இந்தப் பாத்திரம் கதையின் இன்னொரு பாத்திரமான கைகேசியின் மன நிலையை மாற்றுகிறது. ஒரு பாத்திரம் இன்னொரு பாத்திரத்தோடு மோதி, கதைப் போக்கை நிர்ணயிக்கிறது. குயவனுடைய சக்கரத்தைச் சுழற்று கின்ற பானையை நாம் கண்டதில்லை. பானையோடு பானை மோதுவதால் சக்கரத்தின் கதி மாறுவதையும் குயவ னுடைய பட்டறையில் நாம் பார்த்ததில்லை. ஆனால், காவியத்திலே பாத்திரத்தோடு பாத்திரம் மோதுவதால் நிகழ்ச்சிகள் விளைகின்றன. நிகழ்ச்சிகளோடு பாத்தி ரங்கள் மோதுவதால் புதிய நிகழ்ச்சிகள் தோன்று கின்றன. நிகழ்ச்சிகள் ஒன்றன்பின் ஒன்றாகக் காரண காரியத் தொடர்பாக அமைவதே கதைச்சக்கரத்தின் சுழற்சி. இந்தச் சுழற்சியே பாத்திரங்களை வடிவாக்கு கிறது. எப்படி இருக்கிறது இது?

அதெல்லாம் சரிதான். ஏன் இந்தக் கூனி கைகேசி யின் மனத்தை மாற்ற முயன்றாள்? அவளை அப்படிச் செய்ய ஏதாவது ஒரு நிகழ்ச்சி தூண்டியதா? வேறு ஏதாவது ஒரு காவியப் பாத்திரம் அவளுக்கு இந்த முனைப்பைத் தந்ததா? இப்படிக் கேட்டுக்கொண்டே போனால் காவியம் முடியா நெடுங்கதை ஆகிவிடும். சில பாத்திரங்கள் தம் இயல்பினாலேயே, வெளியிலிருந்து உந்துதல் ஒன்றும் இல்லாமலேயே சில காரியங்களில் ஈடுபடுகின்றன. அப்படிப்பட்ட ஒரு பாத்திரம் கூனி. ஏன் கூனி இப்படிச் செய்தாள் என்று கேட்டால் அது அவள் கூனியாக இருந்தபடியினாலேயே என்றுதான் சொல்ல வேண்டும்.

ஏன் சிலர் இயற்கையிலேயே நல்லவர்களாய் இருக் கிறார்கள்? வேறு சிலர் ஏன் பொறாமையும் பொய்யும் வஞ்சமும் நிறைந்தவர்களாக இருக்கிறார்கள்? மனித சுபாவத்தைப் பற்றிய ஒரு புதிர் இது. இந்தப் புதிர் ஒன்று இருக்கிறது என்பதற்கு அடையாளமாக நிற்கிறாள் கூனி. இதைத்தான் கம்பரும் சொல்லுகிறார். கூனி தோன்றுகிறாள் :

'தோன்றிய கூனியும் துடிக்கும் நெஞ்சினள்
ஊன்றிய வெகுளியள் கொதிக்கும் உள்ளத்தள்
கான்றெரி நயனத்தள் கலிக்கும் சொல்லினள்
மூன்றுலகினுக்குமோர் இறுதி மூட்டுவாள்.'

துடிக்கின்ற நெஞ்சம், நிலைத்த கோபம், கொதிக்கின்ற உள்ளம், நெருப்புக் கக்கும் விழி, படபடக்கும் சொல்—இவை எல்லாம் சேர்ந்தன; மூன்றுலகினுக்கும் இறுதி மூட்ட வல்ல கொடுமையாய் அமைந்தன. இந்தக் கொடுமையின் பெயரே கூனி!

## மந்தரைக் கூற்றம்

**வே**ம்பு கசக்கிறது; மாங்காய் புளிக்கிறது. தெரிந்த கதைதான். அதன் அதன் இயல்பு என்கிறோம். இதே போலத்தான் தீமை நிறைந்த ஒருவன் பிறருக்குக் குழி பறிப்பதும். அவனுக்குக் காரணம் ஒன்றும் தேவையில்லை. பிறருக்குக் கேடு சூழ்வதால் தனக்கு அதிலிருந்து ஏதாவது நன்மை ஏற்படும் என்ற எண்ணமும் தேவையில்லை. பழிக்குப் பழி வாங்குவதும், தன்னுடைய நன்மைக்காக அயலானை வருத்துவதும் தீமையின் தாழ்ந்த படிகள். அதன் சிகரம் எது தெரியுமா? காரணம் ஒன்றுமில்லாமல், பயன் ஒன்றும் கருதாமல், மற்றவனுக்குக் கொடுமை புரிவதுதான். பிறர் வாழ்வது தீமையின் கண்ணை உறுத்தும். பக்கத்து வீட்டில் அடுப்பு எரிந்தால் பாவியின் வயிறு எரியும். இதுவே தீமையின் இயல்பு.

அயோத்தி நகரத்து வீதிகளில் கோலாகலம் அலை மோதுகிறது. மங்கல பேரிகை முழங்க, 'நாளைக்கு இராமன் முடிசூடுவான்' என்று அறிவித்துக்கொண்டே வள்ளுவர் திரிகிறார்கள். இந்தச் செய்தி தொட்ட இடமெல்லாம் எல்லையற்ற மகிழ்ச்சி தழைக்கிறது. நகர மக்கள் ஆர்க்கிறார்கள்; களிக்கிறார்கள்; ஆடிப்பாடுகிறார்கள். தோரணங்களும் கொடிகளும் முளைக்கின்றன. விழாப் பந்தல்கள் நிமிர்கின்றன. வாழையும், கமுகும் பந்தற் கால்களுக்கு அழகுத் துணையாய் நிற்க ஓடிவரு

கின்றன. பூவும், புனலும், சுண்ணமும், முத்தும், பொன்னும் வீதியில் மழையாகச் சொரிகின்றன. எங்கும் களிப்பு, எங்கும் ஆடல் பாடல், எங்கும் மங்கல முழக்கம். ஆனால், ஓர் உள்ளம் மட்டும் இதையெல்லாம் காணச் சகியாமல் வேதனைப்படுகிறது. அதுதான் 'துன்னரும் கொடுமனக் கூனி'யின் தீய உள்ளம்.

கதைச் சக்கரத்தின் ஒரு சுழற்சி அயோத்தியின் குதூகலம் என்பது. இந்த ஒரு சுழற்சியில் கூனி என்ற காவியப் பாத்திரத்தின் அடித்தலம் வடிவாகி விடுகிறது. அவள் 'துன்னருங் கொடுமனக் கூனி.' தீமைக்கு எல்லை நிலமான இராவணன் இழைத்த தீமையெல்லாம் மனித உருவம் பெற்று வந்ததுபோல் அயோத்தி வீதியில் விரைந்து செல்கிறாள்.

ஆம், விரைந்துதான். அவளைச் சுற்றி வெள்ளமாய்ப் புரளும் சந்தோஷ ஆரவாரம் அவளுக்குக் கர்ண கடூரமாய் இருக்கிறது. 'ஏன் இப்படிக் கூத்தடிக்கிறார்கள்? என்னத்தைக் கண்டுவிட்டார்களாம் இந்த அயோத்தி மக்கள்?' என்று சீறுகிறாள். கோபத்தில் அவள் உதடு துடிக்கிறது. உதட்டைக் கடித்துக் கொள்ளுகிறாள். இந்தக் களிப்பை ஒழித்தால்தான் அவளுக்குத் தூக்கம் வரும் போலிருக்கிறது. இந்த ஒரு காரணம் போதாதா சூழ்ச்சியில் இறங்க?

ஆனால், ஒரு விசித்திரம். மற்றவர்களின் இன்பமே தீயவர்களின் கொடுமைக்குக் காரணம் என்றாலும் அதை அவர்கள் ஒப்புக் கொள்வதில்லை. அதற்கு மாறாகத் தங்கள் கண்ணை மற்றவர்கள் குத்தி விட்டதாகவும் அதற்குப் பதிலுக்குப் பதிலாகத்தான் தாங்கள் அவர்கள் பல்லைப் பிடுங்கப் போவதாகவும் தீயவர்கள் பேசுவார்கள்.

ஆங்கில நாடக ஆசிரியர் ஷேக்ஸ்பியர் கற்பனையில் உதித்த நாடகப் பாத்திரங்களில் கொடுமையின் விசுவரூபமாக எண்ணத் தகுந்தவன் இயாகோ என்பவன். அவன் ஒரு போர் வீரன். அவனுடைய சேனைத் தலைவன் ஒதெல்லோ என்பவனும் அவனுடைய காதல் மனைவி

டெஸ்டிமோனுவும் மனமொத்துக் காதல் வாழ்க்கை நடத்துவது இயாகோவின் கொடிய உள்ளத்தை உறுத்துகிறது. 'இவர்கள் வாழ்க்கை ஏதோ சங்கீதத் தைப்போல அல்லவா இருக்கிறது? இருக்கட்டும். இருக் கட்டும். இந்தச் சங்கீதத்தைக் குலைக்காவிட்டால் என் பேர் இயாகாவோ?' என்று பேசிப் பாதகச் சூழ்ச்சியில் இறங்குகிறான் அந்தக் கொடியவன். ஆனால், தான் செய்யப்புகும் கொடுமை நியாயமானது என்று தோன்றக் கூடிய வகையில் அதற்குப் பல காரணங்கள் சொல் கிறான். ஒரு தடவை சொன்ன காரணத்தை ஒரு தடவை சொல்வதில்லை. ஒரு காரணமும் உண்மை இல்லை. அவன் கொடுமைக்குக் காரணம் அவனே; அவன் உள் ளத்தில் இயல்பாகப் பொங்கி யெழும் தீமையே. இருந்தா லும் ஏதோ நொண்டிச்சாக்கும் சமாதானமும் பேசிப் பேசி, நம்மை மட்டுமல்ல, தன்னையே ஏமாற்ற முயல் கிறான்

இப்படித்தான் கூனியின் போக்கும் இருக்கிறது. கசப்பும் வெறுப்புமே அவளுடைய இயல்பு. அவள்,

'ஊன்றிய வெகுளியள் உளைக்கும் உள்ளத்தள்!

இதுதான் அவள் கைகேசியின் மனத்தை மாற்றி இராம னுடைய முடிசூட்டு விழாவைத் தடுக்க முனைவதன் காரணம். என்றாலும், கைகேசியின் அரண்மனையை நோக்கி அவள் விரைந்து செல்லும்போது,

'பண்டைநாள் இராகவன் பாணிவில்லுமிழ்
உண்டை உண்டு அதனைத் தன் உள்ளத்து உள்ளுவாள்'

என்றே ஒருநாள் இராமன் சிறுவனா யிருந்தபோது விளையாட்டு வில்கொண்டு, களிமண் உருண்டையால் தன்னை அடித்ததை இப்போது ஞாபகப்படுத்திக் கொள்ளு கிறாள். இராமன் உண்மையில் அப்படிச் செய்திருப்பானா என்பது சந்தேகந்தான். இராமனுடைய விளையாட்டுப் பருவத்தைப் பற்றிக் கம்பர் ஒன்றும் பேசவில்லை. என்றா லும், அவன் சிறுவனாயிருந்தபோதே எவ்வளவு கருணை யோடு நடந்துகொண்டான் என்பதைப் பற்றி மட்டும் ஒரு குறிப்பு இருக்கிறது. கோசல நாட்டு மக்களைச்

சந்திக்கும்போது அவர்களை அன்போடு குசலப்ரச்னம் செய்வது இராமனுடைய வழக்கம்.

'எதிர்வரும் அவர்களை
  எமையுடை இறைவன்
முதிர்தரு கருணையின்
  முகமலர் ஒளிரா
எதுவினை இடரிலை
  இனிதுநும் மனையும்
மதிதரு குமாரும்
  வலியர்கொல்—எனவே!'

இப்படிச் சிறு பிராயத்திலேயே எல்லோருடைய அன்புக்கும் பாத்திரமாக இருந்த இராமன், கூனியைத் தன் வில்லால் அடித்தான் என்பது நம்ப முடியவில்லை. அப்படித்தான் விளையாட்டிலே சிறு குழந்தை ஏதோ அடித்ததாகவே வைத்துக்கொண்டாலும் அது ஒரு பெரிய குற்றமாகுமா? சிரித்துவிட்டு மறந்துவிட வேண்டிய விஷயம் அது. குழந்தை உதைத்தது என்று அதன் காலைத் துண்டிக்க யாராவது புறப்படுவார்களா? உதைத்ததையே இன்பமாகக் கருதிக் குதூகலம் அடைவதுதான் நாம் சாதாரணமாக மனிதர்களிடம் காண்பது.

ஆனால், கூனியோ அசாதாரணமானவள். ஆகவே தான் இராமன் தன்னைக் களிமண் உருண்டையால் அடித்ததை ஞாபகப்படுத்திக் கொள்ளுகிறாள். அதையே தன் கொடுமைக்குக் காரணமாகவும் கருதிக்கொள்ளுகிறாள். ஆனால், அவள் செய்யப்போகும் காரியத்துக்கு அவளுடைய மனத்தின் இயல்பைத் தவிர வேறு காரணம் தேவையில்லை. இருந்தாலும் அப்படி ஒரு நொண்டிக் காரணம் கற்பித்துக்கொள்ளுவது தீயவர்களுடைய இயல்பு. அதைக் கூனியிடம் காண்கிறோம். மனித உள்ளத்தின் விசித்திரத்தைக் கம்பர் எவ்வளவு நன்றாக அறிந்திருந்தார் என்பதையும் உணர்கிறோம். அது மாத்திரம் அன்று. இப்படித் தனக்குத் தானே தன் தீமைக்குக் காரணம் ஒன்றைச் சிருஷ்டி செய்து கொள்ளுவதால்தான் மந்தரை கேவலம்

தீமையின் சின்னமாக மட்டும் இராமல் தீமை நிறைந்த மனித வடிவம் பெற்று விடுகிருள். கூனி என்ற காவியப் பாத்திரத்தில் உயிர்த் துடிப்புத் தோன்றி விடுகிறது.

கொடுமை மாத்திரம் அன்று, பிறர் மனத்தின் இயல்பை அறிந்து அதன் பலவீனத்தைத் தாக்கி அதை எப்படியும் மாற்றக்கூடிய சக்தியும் கூனியிடம் இருந்தது. இதைக் காண்பதற்கு அவளோடு கைகேசியின் அரண் மனைக்குள்ளே நாமும் போகிரேம். கைகேசி தூங்கிக் கொண்டிருக்கிருள். மெல்லச் சென்று அவள் பாதத் தைக் கூனி தீண்டுகிருள். கூனியும் ஒரு விஷப்பாம்பு தானே !

'தன்னைப் பிடிக்க ராகுகேதுக்கள் அணுகும்போதும் தன்னுடைய தண்மையை விடாமல், தெளிந்த நிலவைச் சொரியும் சந்திரனைப் பார்த்திருக்கிறேன். நீ அப்படித் தான் இருக்கிருய். இடர் நெருங்கி வருகிறது. இதை உணர்ந்து வருந்தாமல் கவலையில்லாமல் தூங்குகிருயே' என்று கூனி தொடங்குகிருள். 'இடரா? இராமனைப் பெற்ற எனக்கு இடராவது?' என்கிருள் கைகேசி. கைகேசியின் களங்கமற்ற இதயம் நமக்குப் பளிச்சென்று தோன்றுகிறது. இந்தக் களங்கமற்ற தன்மையைக் குற்றமாகக் குத்திக் காட்டுகிருள் கூனி. 'இராமனைப் பெற்றவளா? நல்லது, கோசலை புத்திசாலி. 'வாழ்ந் தனள் கோசலை மதியினுல்' என்று கூனி பேசும்போது 'கோசலைதான் இராமனுடைய தாய். நீ வேண்டுமானுல் முறைமை பேசிக் கொள்ளலாம். ஆனுல், அவள்தான் இராமனைப் பெற்றவள்' என்ற குறிப்பை எய்கிருள்.

தசரதனுடைய பட்டமகிஷிகள் மூவரிலும் தன் னிடத்திலேதான் அரசன் அதிக அன்பு பூண்டவன் என்ற நினைவு கைகேசியின் பெருமை. அதுவே அவ ளுடைய பலவீனம். ஆகவே கோசலையின் பேரைக் கேட்டதும் 'என்னைவிட அவளுக்கு என்ன வாழ்வு வந்துவிட்டது?' என்று கைகேசி கேட்கிருள். இதுதான் சமயம் என்று கூனி 'அவன் இல்லையா? தாடகை

என்ற பெண்ணைக் கொல்வதற்கு வில்வளைத்த அந்தச் சூரன்—அவன் நாளைக்கு முடிசூடப் போகிறான். இதை விடக் கோசலைக்கு வாழ்வு எது?' என்கிறாள் கூனி.

கைகேசியின் களங்கமற்ற தன்மை உடனே தன்னைக் காட்டிக்கொள்கிறது. இராமனுக்குப் பட்டாபிஷேகம் என்ற செய்தி கைகேசிக்குக் குதூகலத்தைத் தருகிறது. கூனிக்கு முத்துமாலை ஒன்றைப் பரிசாக வழங்குகிறாள். அவ்வளவுதான், கூனியின் கொடுமை வெடிக்கிறது. 'சரி சரி, நீ பித்தி; உனக்குத் துயரந்தான் சரி. நீயும் உன் மகனும் அதில் ஆழ்ந்துகொண் டிருங்கள். கோசலையினுடைய தாதிக்குத் தாதியாய் என்னால் இருக்க முடியாது' என்று சீறுகிறாள் கூனி. கூனி கைகேசியின் தாதி.

'மாற்றவள் தாதியார்க் காட்செயத் தரிக்கிலேன்'

என்று அவள் பேசும்போது கைகேசி கோசலையின் தாதியாகிவிடுவாள் என்பதுதானே குறிப்பு? கைகேசியின் பலவீனத்தில் கூனியின் சொல்லம்பு மறுபடியும் பாய்கிறது.

கூனி அதோடு விடவில்லை. இராமன் பட்டத்திற்கு வந்தால், பரதன் எப்படியெல்லாம் அவலத்திற்கு ஆளாவான் என்பதைப் பிரம்மாண்டமான சோக சித்திரமாகத் தீட்டுகிறாள். 'அப்பா பரதா, நீ என்ன செய்வாய்? உன்னைச் சூழ்ச்சியினாலே கேகய நாட்டுக்கு அனுப்பி விட்டு இங்கே அரசை இராமனுக்குத் தருகிறார்கள். தந்தை இருந்தென்ன? தாய் இருந்தென்ன?

'தந்தையும் கொடியன் நற்றாயும் தீயளால்
எந்தையே பரதா நீ என்செய்வாய்'

என்று பரதன் தன் எதிரில் நிற்பதுபோல் பாவித்துக் கொண்டு அங்கலாய்க்கிறாள்.

கைகேசிக்குக் கோபம் பொங்குகிறது. 'என்ன வார்த்தை இது? எனக்கோ பரதனுக்கோ உனக்கோ நீ நல்லதைச் சொல்லவில்லை. வரன்முறை தவறுவது இந்த அரச மரபுக்கே பெருத்த அவமானமாக முடியும்.

நீதியல்லாததை, நெறிமுறை அல்லாததைப் பேசினாய். போ. உன்னுடைய நாக்கைத் துண்டிக்காமல் விடுகிறேன். ஓடிப்போ' என்று கைகேசி சீறுகிறாள். இதைத்தான் மந்தரை எதிர்பார்த்தது. கைகேசிக்குக் கோபம் வந்துவிட்டது என்றால், உணர்ச்சியினால் ஆட்டங் கண்ட அவளுடைய அறிவைத் தன் பக்கம் திருப்புவது சுலபம் என்பது கூனிக்குத் தெரியும். மறுபடியும் கைகேசியின் பலவீனத்தைத் தாக்குகிறாள்.

ஆனால், இந்தத் தடவை அந்தப் பலவீனத்தின் வேறொரு அம்சத்தைத் தன் சொல்லுக்கு இலக்காக அமைத்துக் கொள்ளுகிறாள் கூனி. தொடங்குகிறாள்: 'ஆமாம். இதுவரையில் வருந்தி வந்தவர்க்கு இல்லை என்னாமல் வழங்கி வந்திருக்கிறாய். இனி முடியுமா? எண்ணிப் பார். இராமன் அரசனாகிவிட்டால் உனக்குப் பொருள் ஏது? என்ன செய்வாய்? இன்னலும் வறுமையும் தொடர, உன்னிடம் உதவி தேடி வருகிறவர்களுக்கு அவனிடம் போய்ப் பொருள் வேண்டிப் பெற்று வழங்குவாயோ? அல்லது அப்படிச் செய்வதற்கு வெட்கப்பட்டுக் கொண்டு, மனம் உடைந்து இறந்து போவாயோ? இவை எல்லாவற்றையும் விடக் கொடுமையானது வந்தவர்களுக்கு இல்லை என்று மறுப்பது. அதைத்தான் செய்வாயோ?' என்று கூனி கேட்டவுடன் தன்னுடைய அளவற்ற செல்வத்திலும் அரசர் குலத்தில் உதித்து அரசியாகத் தான் வாழ்வதிலும் பெருமை கொண்ட கைகேசிக்கு மனம் சலிக்கத் தொடங்குகிறது.

இதுதான் சமயமென்று கைகேசியின் பலவீனத்தின் இன்னொரு அம்சத்தையும் தாக்குகிறாள் கூனி. இராமன் பட்டம் சூடுவதால் கைகேசியின் பிறந்த வீட்டுக்குத் தீங்குவிளையும் என்றும் மந்தரை பேசிவிடுகிறாள். கைகேசிக்குத் தன் பிறந்த வீட்டைப்பற்றி மிகுந்த பெருமை; தன் சுற்றம் கெடுமோ என்று எண்ணுகிறாள். கோசலையிடம் தான் கையேந்தி நிற்க நேரிடுமோ என்று மலைக்கிறாள். 'எவ்வளவு நல்லவர்களாக இருந்தாலும் பெறுதற்கரிய செல்வத்தைப் பெற்றுவிட்டால் அவர்களுடைய சிந்தை கூனி சொல்வதுபோல மாறுவது

இயற்கைதானே' என்று சிந்திக்கிறாள்; தயங்குகிறாள்; தடுமாறுகிறாள். அவ்வளவுதான், கூனிக்கு வெற்றி கிடைத்துவிடுகிறது. கைகேசியின் தூயசிந்தை திரிந்து விடுகிறது.

இனிமேல் கூனிக்கு வேலையில்லை. கதைச் சக்கரச் சுழற்சியின் போக்கைத் திருப்புவதற்கு ஒரு கருவியாகக் கூனி அமைந்துவிட்டாள். ஆனால், இதை அவள் செய்யும்போது அவளுடைய கொடுமனமும், மற்றவர் மனத்தை மாற்றுவதற்கு அவளிடம் இருந்த பேய்ச் சக்தியும் நமக்குத் தெளிவாகிவிடுகின்றன. சிறிது நேரந் தான் அவளைப் பார்க்கிறோம், ஆனால், அதற்குள்ளே உயிர்த் தத்துவம் நிறைந்த ஒரு பாத்திரத்தைச் சந்தித்துவிடுகிறோம். இதன் பிறகு அவளை மறப்பது முடியாத காரியம். பிறகு என்ன ஆனாள் என்பது ரஸமான கேள்வி. இந்தக் கேள்வி தோன்றுவதே பாத்திர சிருஷ்டியின் வெற்றிக்கு அறிகுறி. கதையில் மறுபடியும் ஒரே ஒரு தடவைதான் மந்தரை தோன்றுகிறாள், பரதனும் அயோத்தி மக்களும் இராமனைத் திருப்பி அழைத்து வருவதற்காகக் காட்டுக்குப் புறப்படும்போது அயோத்தி நகர வாசலில் 'மந்தரைக் கூற்றம்' எதிர்ப்படுகிறது.

'அடபாவி! இவள் வந்துவிட்டாளா' என்று எண்ணுகிறோம். ஆனால், அந்தக் கூற்றம் ஒருவரையும் இப்போது வதைக்கவில்லை. சத்துருக்கனுடைய துடிப்பையும், பரதனுடைய பொறுமையையும் நமக்குப் பளிச்சென்று எடுத்துக்காட்டக் கம்பருக்கு உதவுகிறது. இதன் பிறகு கதையிலே கூனிக்கு இடமில்லை. அவள் மறைந்து விடுகிறாள்.

ஆனால், நம்முடைய மனத்திலிருந்து மாத்திரம் அவளுடைய கூனல் உடலும் கொடுமை உள்ளமும் மறையவில்லை.

# பேசாத தம்பி

நாடக மேடையில் இருட்டாக இருக்கும்போது, ஒரு மூலையிலிருந்து மாத்திரம் பிரகாசமான வெளிச்சம் குவிந்து வந்து முக்கியமான நடிகர் மேல் விழுவதைப் பார்த்திருப்பீர்களோ? அப்போது வேறு நடிகர்கள் மேடைமீது இருக்கலாம். என்றாலும் அவர்கள் முகத்திலே ஒளி நேரடியாக விழாத காரணத்தால், நம்மைப் பொறுத்தவரையில் அவர்கள் நிழல்களைப் போலத்தான். ஏதோ அவர்கள் இருக்கிறார்கள் என்ற உணர்ச்சி இடையிடையே தோன்றலாம். சில சமயம் அவர்களுடைய முழு வடிவத்தையும் அறியவேண்டும் என்ற ஆசையும் ஏற்படலாம். ஏற்பட்டாலும் அது நிறைவேறுவதில்லை. நம்முடைய கவனமெல்லாம் ஒளி விழுகின்ற இடத்திலே தான். இருட்டை நோக்கிக் கண் திரும்புமா? திரும்பினாலும் என்னத்தைக் கண்டுவிடும்?

இதைப்போன்ற நிலைமை காவிய அரங்கத்திலும் உண்டாகிறது. அங்கேயும் பல பாத்திரங்கள். ஆனால், கவிஞன் வீசுகின்ற ஒளி ஒரு சில பாத்திரங்களின் மேலேதான் அதிகமாக விழுகிறது. இவர்களுடைய

பேச்சும் செயலும் காவியத்திலே முதலிடம் பெறுகின்றன. மற்றைய பாத்திரங்கள் மங்கல் வெளிச்சத்திலோ இருட்டிலோ வந்து வந்து போவதோடு சரி; நாமும் அவர்களை அதிகமாகக் கவனிப்பது கிடையாது. கவனித்தாலும் விசேஷமாக ஒன்றும் தெரிந்து கொள்ளவும் முடிவதில்லை. இது இயற்கைதான். காவியத்திலே தோன்றும் எல்லாப் பாத்திரங்களையும் பூரணமாக விவரிப்பது என்றால், ஒவ்வொரு பாத்திரத்தையும் தலைமையாக வைத்து ஒரு காவியம் எழுத வேண்டியது தான். அது முடிகிற காரியமா?

இப்படி மற்றவர்கள் மேல் விழும் ஒளி தன்பேரில் விழாமல் ஒதுங்கி நிற்கின்ற ஒரு நாடகப்பாத்திரம் சத்துருக்கன். ஒதுங்கி நிற்கிறான் என்று சொன்னேன்? இல்லை. கதையின் அமைப்பிலே ஒதுக்கப்பட்டு நிற்கின்ற பாத்திரம் என்றுதான் முதலில் நமக்குத் தோன்றுகிறது. ஏதோ தசரதனுக்கு மகனாகப் பிறந்தான். எல்லாப் பகைகளையும் ஒழிக்கக் கூடிய எழில் வாய்ந்தவன் என்று கருதி, சத்துருக்கன் என்று வசிஷ்டன் பெயரிட்டானாம். இராமனை விட்டுப் பிரியாமல் லக்ஷ்மணன் இருந்ததுபோலவே சத்துருக்கனும் பரதனை விட்டு ஒரு நொடிகூடப் பிரியாமல் இருந்தானாம். இவ்வளவுதான் முதலிலே சத்துருக்கனைப் பற்றி நமக்குக் கிடைக்கின்ற செய்தி. கதை வளர வளர, இராமனைப் பற்றியும், லக்ஷ்மணனைப் பற்றியும், பரதனைப் பற்றியும் எத்தனையோ செய்திகள் அடுக்கடுக்காய் வருகின்றன. இதனால் இப் பாத்திரங்கள் பிரம்மாண்டமான ஆகிருதியும் தனிப் பண்பும் பெறுகின்றன. சத்துருக்கனோ நிழலில் நிற்கிறான். பரதனைவிட்டுப் பிரியாமல்தான் இருக்கிறான் என்றாலும் இராமனை விட்டுப் பிரியாமல் இருக்கின்ற லக்ஷ்மணன் பேரில் விழுகிற அளவுக்கு, பேச்சு, சம்பவம் இவற்றின் ஒளி இவன்பேரில் விழவில்லை. சீதையை மணப்பதற்காக இராமன் தேர் ஏறி மிதிலை வீதியில் வரும்போது லக்ஷ்மணனோடு பக்கத்தில் நின்றுகொண்டு சாமரை வீசுகிறான். இராமனுடைய கலியாணம் நடந்தேறிய பிறகு, அதே மணப்பந்தலில்

சத்துருக்கனுக்கு விவாகமாகிறது. ஆனால், இராம னுடைய கலியாணத்திற்குப் பல படலங்களைத் தருகிற கம்பர், பரதன், லக்ஷ்மணன், சத்துருக்கன் இவர்க ளுடைய கலியாணத்தை ஒரே பாட்டிலே முடித்துவிடு கிறார். இந்த ஒரு பாட்டிலும் சத்துருக்கனுக்குத் தனி யிடம் இல்லை. கிடைத்த இடத்தை மற்றைய இருவ ரோடும் பங்கு போட்டுக்கொள்ள வேண்டி யிருக்கிறது.

இராமன் அயோத்தியை விட்டுக் காட்டுக்குப் போன பிறகு, பரதனோடு கேகயநாட்டிலிருந்து சத்துருக்கனும் திரும்ப வருகிறான். ஆனால், பரதனுடைய திகைப்பு, அவன் துயரம், அவன் கசப்பு, கோபம், வீரம், தியாகம்—இவற்றிலே ஈடுபட்டு நாம் சத்துருக்கனை மறந்தே விடுகிறோம். இவ்வளவு பேசுகிறானே பரதன், சத் துருக்கன் பேசிய வார்த்தை ஒன்றுகூட நம் காதில் விழவில்லை. எப்படி விழும்? கம்பர் காதில் விழுந்தால் அல்லவா நம்முடைய காதில் விழப்போகிறது? தசரதன் சாவு என்ற இருள் கவிந்த அயோத்தியில், சோகக் கடல் பொங்கி எழுகிறது. பல உள்ளங்கள் துடிக்கின் றன. சத்துருக்கன் உள்ளம் துடித்ததோ, என்னவோ, அவன் பேசவே இல்லை.

பரதன் இராமனை அழைத்துவரக் காட்டிற்குப் புறப் படுகிறான். புறப்படும் செய்தியை நகர மக்களுக்கு அறி வித்து உடன் வருவதற்குச் சேனையைத் திரட்டி வர வேண்டும் என்ற கட்டளை சத்துருக்கனுக்கு இடப்படு கிறது. கட்டளையை நிறைவேற்றுகிறான். ஆனால், இதைச் செய்வதற்கு ஒரு பாட்டில் அரை அடிதான் சத்துருக்கன் பெறுகின்ற இடம். என்றாலும் நமது கவனத்தைக் கவருவதற்குச் சத்துருக்கனுக்குச் சீக்கிரத் தில் ஒரு சந்தர்ப்பம் கிடைக்கிறது. பரதனும் அவனைத் தொடர்ந்து செல்லும் ஜன சமுத்திரமும் அயோத்தி நகரத்து வாசலை அடையும்பொழுது, அங்கே கூனி எதிர்ப்படுகிறாள். அவ்வளவுதான். இதுவரை நிழலிலே-பரதனுடைய நிழலிலே என்றாலும், நிழல் நிழல்தானே-இருந்த சத்துருக்கன் பளீரென்று ஒளியில் வந்து நிற்கிறான். மந்தரையைப் பார்த்தவன்,

'...ஓடியார்த்து அந்தரத்து எற்றுவான் அழன்று...'

அவளைப் பற்றுகிறான். இப்போதும் சத்துருக்கன் பேச வில்லை. பேசுவது பரதன்; 'விட்டுவிடு. இந்தக் கூனியை வெகுண்டோம் என்று தெரிந்தாலும் இராமன் முனிவான். அவளை விட்டுவிடு, நாம் போகலாம்' என் கிறான் பரதன். சத்துருக்கன் கூனியை விட்டு விடு கிறான் என்று சொல்லுவதற்குக் கூடக் கம்பருக்கு நேர மில்லை. அவர் கவலை எல்லாம்-நம் கவனம் எல்லாம்-பரதனிடத்திலே லயித்திருக்கிறது. கண நேரத்திற்கு நம் முன்னே வந்து நின்ற சத்துருக்கன் மறுபடியும் ஒளி யின் எல்லைக்கு அப்பால் சென்று விடுகிறான்.

அங்கே அவனை இனம் கண்டு கொள்கிறது குக னுடைய அன்பு. துயரமே உருவாகப் பரதன் நிற்கும் தோற்றத்தைப் பார்த்து அவனைப் பற்றி முதலில் தான் எண்ணியது தவறு என்ற முடிவுக்கு வருகின்ற குகன்,

'நம்பியும் என் நாயகனை ஒக்கின்றான் அயல் நின்றான்
தம்பியையும் ஒக்கின்றான்'

என்று பேசுவது நம்முடைய காதில் விழுகிறது. ஆமாம்; அதோ, பரதனுக்குப் பக்கத்தில் நிற்கும் சத்துருக்கன் லக்ஷ்மணனைப் போலத்தான் இருக்கிறான். அதில் ஒன் றும் குறைவில்லை. லக்ஷ்மணனைப் போலவே இவனும் உணர்ச்சிக் கனல் கக்கும் வீரப் பேச்சு ஏதாவது பேசு வானோ என்று நாம் நினைக்கிறோம். நினைக்கிறோமா? அதற்கு நேரம் ஏது? பரதனும் குகனும் சந்திக்கின்ற உருக்கமான காட்சியில் மற்ற எல்லாவற்றையும் மறந்து விடுகிறோம்.

சித்திரகூடத்திலும் இதே கதைதான். பரதனுடைய சைன்யம் வருவதைப் பார்த்து லக்ஷ்மணன் சீறுகிறான். இராமன் பேரிலுள்ள அன்பின் அற்புதமான எதிரொலி யாக அவனுடைய கோபம் மூள்கிறது. இராமனுடைய சாந்தம் அதை ஆற்றுகிறது. பிறகு பரதன் வருகிறான். அவன் புனைந்த தவவேடத்தை இராமன்,

'பன்முறை நோக்கிப் பலவும் உன்னி,
அல்லலின் அழுங்கினை ஐய'

என்று விம்முகிறான். சித்திரகூடத்தின் அமைதியிலே சிறிது நேரத்திற்கு உணர்ச்சிப்புயல் வீசுகிறது. தசரதன் இறந்தான் என்பதைக் கேட்ட இராமனுடைய சோகம், இதற்குத் தத்துவ மருந்து தரும் வசிஷ்டனுடைய ஞானம், மன்னவன் துஞ்சினான் என்ற செய்தியைக் கேட்டதும் முதன் முதலாகத் துயர்க் கடலில் அடிவைக்கும் சீதையின் சஞ்சலம், அரசை இராமன் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று பேசும் பரதனுடைய துடிப்பு, இராமனுடைய அசையாத சிந்தை - இப்படியாகப் பலப் பல மனநிலைகள் ஒன்றோடொன்று மோதி விளைக்கின்ற உணர்ச்சி வேகம் அங்கே சுழலுகிறது. எல்லோரும் பேசுகிறார்கள். ஆனால், சத்துருக்கன் பேசவேயில்லை. அவன் கூட்டத்தில் இருப்பதாகக்கூட நமக்கு நினைவு இல்லை. சித்திரகூடத்தை விட்டுப் பரதனும் அவனோடு வந்தவர்களும் புறப்படுகிறார்கள் :

'......பரதன் போயினான் பொடித்தலம் இலங்குறு
பொலங்கொண் மேனியான்.'

வசிஷ்டன் போகிறான் :

'மூன்று நூல் கிடந்ததோர் முனியும் போயினான்.'

அதன் பிறகு பரத்வாஜன், நகர மக்கள், தேவர்கள் :

'பண்டை நூல்தெரி பரத்துவனும் போயினன்
மண்டுநீர் நெடுநகர் மாந்தர் போயினர்
விண்டுறை தேவரும் விலகிப் போயினர்.'

கடைசியாகப் போக மனமில்லாமல் நிற்கும் குகனும் இராமனுடைய கட்டளையின்பேரில் சித்திர கூடத்தை விட்டு நீங்குகிறான்:

'கொண்டல் தன் ஆணையால் குகனும் போயினன் !'

சத்துருக்கனும் போயிருக்க வேண்டும் ; போனான் என்று கூட இத்தனை பேரையும் குறிப்பிடுகின்ற கம்பர் குறிப்பிடவில்லை. இராமனுக்கு மூன்று தம்பிகள் என்று சொன்னாரே, மூவரில் பரதனையும், லக்ஷ்மணனையும் விரிவாகக் காட்டுகின்றாரே இந்தக் கவிஞர், எம்பிரான் பின் பிறந்

தவனுகிய சத்துருக்கனை மட்டும் மறந்தே போய்விட்டாரா?

மறக்கவில்லை என்பது காவியத்தின் கடைசிப் பகுதியிலே தெளிவாகிறது. இராமன் காட்டுக்குச் சென்று பதினன்கு ஆண்டுகள் கழிந்துவிட்டன. நந்திக் கிராமத்தில் இராமன் வரும் திசையையே நோக்கி 'வாக்கில் பொய்யான் வரும் வரும்' என்று இராமன் வருகையை எதிர் நோக்கித் துடிக்கின்றன் பரதன். குறிப்பிட்ட கடைசிநாள் வந்தும் இராமன் வரவில்லையே என்று ஆருத் துயரத்தில் அழுந்திய பரதன் தன் உயிரை விட்டு விடத் தீர்மானிக்கிருன். சத்துருக்கனுக்குச் சொல்லியனுப்புகிருன். அவன் வந்ததும் 'உன்னை அழுது வேண்டுகிறேன் ஒரு வரம். அது குற்றமில்லாதது' என்று பேசிக்கொண்டே வரத்தையும் கேட்டு விடுகிருன் பரதன்:

'சொன்ன நாளில் இராகவன் தோன்றிலன்
மின்னு தீயிடை யான் இனி வீழுவன்
மன்னனுதி என் சொல்லை மருது.'

பரதன் கேட்கின்ற வரம் இது. சத்துருக்கன் என்ன செய்யப் போகிருன் என்று திரும்புகிரும். இப்போது அவன்பேரில் ஒளி பூரணமாக விழுகிறது. அவன் துணுக்குறுகிருன். நஞ்சை உண்டவன்போல் தடுமாறுகிருன். மனமும் உடலும் நடுங்க நிற்கிருன். பெருமூச்சோடு பரதனைப் பார்த்து, 'நீ துன்பத்தில் அழுந்தி யிருக்கிருய், உண்மைதான். ஆனல், நான் உனக்குச் செய்த பிழை என்ன ?'

'நான் உனக்கு என்ன பிழைத்துளது அழுந்து துன்பத்தினுய்'

என்று கேட்கிருன். 'நீ வருந்துகிருய். ஆனல், இராமன் காட்டிற்குப் போனதிலும் அதை எண்ணி நீ பட்ட துயரத்திலும் எனக்கு மட்டும் கலக்கம் இல்லாமல் போய்விட்டது என்று எண்ணுகிருய் போலிருக்கிறது? இதனுல் அல்லவா அரசனுக இரு என்று என்னைப் பார்த்துச் சொல்லிவிட்டாய். ஈரமில்லாத நெஞ்சினன் என்று என்

னைப்பற்றி எண்ணும்படிக்கு நான் என்ன தவறு செய்து விட்டேன்?' என்று கேட்பதுபோல் இருக்கிறது இந்தப் பேச்சு. இதோடு சத்துருக்கன் அமைதியடையவில்லை. அவன் மனத்திலே குமுறுகின்ற இரக்கமும், வருத்தமும் கசப்பாக வெளி வருகின்றன. அவன் சொல்கிறான்:

'நாட்டை விட்டுவிட்டுக் காட்டை ஆளப் புறப்பட்டான் ஒருவன். அவனைக் காத்துப் பின்தொடர்ந்து சென்றான் ஒரு தம்பி. மற்றொரு தம்பியோ போனவர்கள் வரவில்லையே என்று மனம் புழுங்கி உயிர்விடத் துணிந்து விட்டான். இன்னொரு தம்பி இருக்கிறான்; அவன்தான் அரசாளப் பிறந்தவன். அரசாட்சி என்பதுதான் எவ்வளவு இனிமையான அனுபவம்! இதைப் பெறாமல் சத்துருக்கன் இருந்து விடலாமா? வெட்கத்தைப் பற்றிப் பேசுவானேன்? யாருக்கு வெட்கம்? அரசாள வேண்டியதுதான், அரசு!

காணுள நிலமகளைக் கைவிட்டுப்
    போனவனைக் காத்துப் பின்பு
போனானும் ஒரு தம்பி போனவர்கள்
    வரும் அவதி போயிற்று என்று
ஆனாத உயிர்விட இன்று அமைவானும்
    ஒரு தம்பி அயலே நாணு(து)
யானும் இவ் வரசாள்வென் என்னே
    இவ்வரசாட்சி இனிதே அம்மா!'

அப்பாட, பேசாத தம்பி பேசியே விட்டான்! பேச்சில்தான் என்ன வேகம், கவனித்தீர்களா? அன்பும், தன்னலமற்ற உணர்வும் தமக்குரிய அடக்கத்தோடு இதுவரை அடைத்துக் கிடந்தன. இப்போது அவை இருப்பதையே அறியாதவன்போல் பரதன் பேசியதும், காட்டாற்று வெள்ளம்போல் சீறிக்கொண்டு அவை வெளி வருகின்றன. இந்த வெள்ளம் கோபமாகச் சுழலுகிறது. பரிகாசமாக நுரை கக்குகிறது. யாரிடம் இவ்வளவு நாளும் சலியாமல் அன்பு செலுத்தினானோ அந்தப் பரதனே தன்னை உணரவில்லையே என்ற தவிப்பில் சத்துருக்கன் இன்னும் சில வார்த்தைகளை உதிர்க்

கிருன். 'ஆமாம். உன்னுடைய அன்பு உயர்ந்ததுதான். இராமன் இல்லாத அயோத்தியில் பரதன் புகுந்தான் என்ற சொல்லுக்கு அஞ்சி, இங்கே இந்த நந்திக்கிராமத்தில் தங்கித் தவ வாழ்க்கை தொடங்கினுய். நான் பிரமாதமாக என்ன செய்துவிட்டேன், ஒன்றுமில்லையே ? ஏதோ உனக்கும் ஒரு தம்பி இருக்கிருன் என்ற முறையில் உன் அடிமையாக நின்றேன். உன்னைப் பின் தொடர்ந்தேன். அவ்வளவுதான்; நாஞக ஒன்றும் செய்யவில்லையே; ஆகவே, இதுவரை என் வாழ்க்கை நடத்திய விதத்திற்கு ஒத்ததாகத்தான் இனி இந்த நாட்டை ஆளும் பொறுப்பு எனக்குக் கிடைத்திருக்கிறது. நான் பாக்கியசாலிதான்.

மன்னிற் பின்வள நகரம் புக்கிருந்து
வாழ்ந்தானே பரதன் என்னும்
சொல்லிற்கும் என்று அஞ்சிப்புறத்திருந்தும்
அருந்தவமே தொடங்கினுயே
என்னிற்பின் இவன் உளனும் என்றே பின்
அடிமை உனக்கிருந்த தேனும்
உன்னிற் பின்னிருந்ததுவும் ஒரு குடைக்
கீழ் இருப்பதுவும் ஒக்கும்'

என்கிருன்.

பரதன் என்ன சொல்லமுடியும்? பிரமித்து நிற்கிருன். நாமும் பிரமித்தே நிற்கிருேம். இதுவரை பேசாமல் இருந்ததும் தன்னைக் காட்டிக் கொள்ளாமல் அடக்கத்தோடு பரதனுக்குப் பின்னேயே நின்றதும் சத்துருக்கனுடைய அளவில்லாத அன்பின் திறம் என்பதை உணர்கிருேம். தியாகத்திலோ, அன்பிலோ, பேசாத தம்பி பேசுகின்ற தம்பியருக்குத் தாழ்ந்துவிடவில்லை. இந்த ஒரு பேச்சில் உயிர்த் தத்துவம் பெற்று, சகோதர வாஞ்சையின் வடிவமாக நம் மனத்தில் இடம்பெற்று விடுகிருன் சத்துருக்கன். குகனையும், சுக்ரீவனையும், விபீஷணனையும் தம்பியராக ஏற்றுக்கொண்டு மகிழ்ந்த இராமனுக்குப் பெயரளவில் அன்று, உண்மையாகவே இன்று நான்காவது தம்பி பிறந்து விடுகிருன்.

ஆம்; சத்துருக்கன் பிறந்த செய்தி பாலகாண்டத்தில் பேசப்படுகிறது. ஆனுல், அவன் பிறந்து வளர்ந்த

கதை-அவன் வாழ்க்கையின் ஜீவமுத்திரை-உண்மையில் காவிய இறுதியில் மீட்சிப் படலத்தில்தான் இடம் பெறுகிறது. கதைச் சக்கரத்தின் கடைசிச் சுழற்சியின்போது கணநேரத்தில் மகாகவிஞன் ஒருவனுடைய பாத்திர சிருஷ்டி மேதையால், சத்துருக்கன் என்ற பெயர், பாத்திரமாக மாறி, அழியாத உயிரும் தனிப்பண்பும் பெற்று விடுகிறது.

# அதிசயக் கழுகு

உலகத்தைச் 'சாவின் நிழல் படிந்த பள்ளம்', என்று கிறிஸ்துவ வேதம் பேசுகிறது. இதை எல்லா வேதங்களும் வற்புறுத்துகின்றன. புற்றினில் ஈசல்போல் வருகிறோம்; மறைகிறோம். இதை அறியாதவர் யார்? வெயிலும் பனியும் கலந்த இந்த ஒளிமாயம் என் முன்னே புரளுகிறதே. இதன் பிரகாசத்தின் ஊடே பாவுபோல், சாவு படர்ந்திருக்கிறது. இதோ வர்ணத் துண்டமாக வெயிலில் துள்ளும் இந்தப் பட்டுப்பூச்சி, நாளைக் காலையில் இருக்கும் இடம் தெரியாமல் மடிந்து விடும். எதுதான் மடியவில்லை? மற்றைய உண்மைகள் எப்படியோ, சாவு என்ற உண்மை எல்லோராலும் ஒப்புக்கொள்ளப் படுகிறது. ஆனால், சாவு என்பது என்ன? திட்டமாகத் தெரியாது. உயிர் என்பதுதான் என்ன? அதுவும் வடிவாக இன்னதென்று தெரியவில்லை. இருந்தாலும், சாவு தன்னை விழுங்கும்போதுகூட, தன் தன்மையை ஒவ்வொரு உயிரும் காட்டிக் கொள்ளுகிறது. சாகும்போதுதான் பூரணமாக இதைச் செய்கிறது என்று சொன்னாற்கூடக் குற்றமில்லை.

அப்படியா? ஆமாம், பாருங்களேன். புழுவைப் போல் துடித்து மடிகிறான் ஒருவன். ஓநாயைப்போல் சீறிப் பதறி ஓலமிட்டுக் கூற்றுவன் வாய்க்குள்ளே இழுக்கப்படுகிறான் இன்னொருவன். சாகும்போதும் தன் விருப்பு வெறுப்புக்களை மறக்காமல், அவற்றிற்கு 'உயில்' என்ற பட்டயம் தயாரிக்கிறான் வேறொருவன். 'சாவே, வா. நீயே என் முடியாத துயரத்திற்கு விடிவு காண்கிறாய்' என்று சாவை விடுதலையாக வரவேற்கிறான் மற்றொருவன். இப்படியாக, எத்தனையோ விதம். ஒவ்வொரு விதத்திலும் அந்த அந்த மனிதனுடைய தன்மையும் அவன் வாழ்க்கையின் போக்கும் ஒருவாறு புரிகிறது, இல்லையா?

கம்பருடைய காவிய உலகத்திலும் இதைப் பார்க்கலாம். அங்கேயும் பலருக்குச் சாவு வருகிறது. ஒவ்வொருவரும் ஒரு மாதிரி அதைச் சந்திக்கிறார்கள். தீமையிலேயே உழன்று, கடைசிவரையில் தருமத்தை எதிர்த்துப் பிறகு வெட்டுண்டு சாய்கின்றனர் சிலர்; அவர்களை விட்டு விடுவோம். வேறு சிலரைப் பார்ப்போம். நன்மை எது, தீமை எது என்ற அறிவு படைத்திருந்தும், தன் கோபத்திற்கும் அகங்காரத்திற்கும் இடந் தந்து, இரக்கம் என்பதில்லாமல் திரிந்தான் வாலி. ஆனால், சாகும்போது தன் தவற்றை உணர்ந்தான்; தருமத்தின் சலியாத வலிமையை ஒப்புக்கொண்டான். அது மாத்திரமில்லை; அந்தத் தருமத்தை உயிர் ஒடுங்கிய அந்த வேளையிலாவது பின்பற்றினான்; வீரன் ஆனான். இந்திரசித்தனும் கடைசி வேளையில்,

> 'குலம் செய்த பாவத்தாலே
> கொடும்பழி தேடிக் கொண்டோம்'

என்பதை உணர்ந்தான்; தன் தகப்பனை இராவணனைத் திருப்பவும் முயன்றான்; அது முடியாத காரணத்தால், போர்க்களம் சென்று, தான் அவனுக்கு மகனாகப் பிறந்த கடனைத் தீர்த்தான். கும்பகருணன் போக்கு வேறு விதம். முதலில் இருந்தே, தருமம் இன்னது என்பது அவனுக்குத் தெரியும். எவ்வளவோ சொல்லிப் பார்த்'

தும் இராவணன் கேட்கவில்லை. கடைசியாக, சகோதர பாசத்தை வெல்ல முடியாமல், தன் உயிரையே அந்தப் பலிபீடத்தில் அர்ப்பணம் செய்கிறான். இரண்டு தருமங்களில் எது உயர்ந்தது என்று தெரிந்தும் தாழ்ந்ததைப் பின் பற்றி,

'புலையுறு மரணம் எய்தல் எனக்கு அது புகழதேயால்'

என்ற உணர்வோடு, தான் கைக்கொண்ட இலட்சியத்திற்காகத் தன்னையே தியாகம் செய்து கொள்கிறான். அவனுடைய சாவு அவன் வாழ்க்கை முழுவதையும் பளிச்சென்று எடுத்துக் காட்டுகிறது. இதுபோலவே, சாவு என்ற இந்த விசித்திர தீபத்தின் ஒளியிலே, தசரதனுடைய வாய்மையின் பெருமையைத் தெளிவாகக் காண்கிறோம்.

ஒன்று கவனித்தீர்களா? இவர்கள் ஒவ்வொருவருடைய துயரமும் அவர்களாலேயே ஏற்பட்ட காரியம். அவர்கள் சாவும், ஒன்று, அவர்களாலேயே உண்டானது அல்லது அவர்களுக்காக ஏற்பட்டது. உயிரைத் தியாகம் செய்யும் இந்திரசித்தனும், கும்பகருணனும் யாருக்காகத் தியாகம் செய்கிறார்கள்? ஒருவன் தன் தந்தைக்காகவும், இன்னொருவன் தன் அண்ணனுக்காகவுந்தான். இந்த அளவில், அவர்களுடைய தியாகத்தில் சுயநலம் பதுங்கிக் கிடக்கிறது. பிறருக்காகச் சாவை எதிர் நோக்கிச் செல்வது இதைவிட உயர்ந்ததல்லவா? அப்படிச் செய்கிறான் ஒருவன். அவனையும் கம்பருடைய காவியத்தில் சந்திக்கிறோம். அவன் பெயர் ஜடாயு.

பஞ்சவடியை நோக்கி இராமலக்ஷ்மணர்களோடு போய்க்கொண்டிருக்கிறோம். எத்தனையோ நதிகளையும் மலைகளையும் சோலைகளையும் கடந்து வந்துவிட்டோம். தூரத்தில் குன்று ஒன்று தென்படுகிறது.

'தூங்குதிரை ஆறுதவழ் சூழலதோர் குன்று'

என்று அகத்தியராசிரமத்தில் கேள்விப்பட்டோமே, அது தான் பஞ்சவடிக்கு அருகில் உள்ள அந்தக் குன்(

என்று நினைத்து உற்றுப் பார்க்கிறோம். குன்றின்மேல், அதன் கருத்த பருமனுக்குச் சிகரம் வைத்ததுபோல், இன்னொரு குன்று அசைகிறது, பொன்னிறக் குன்று. இதென்ன விசித்திரம்? அன்று சந்திரனை அடை தூணாக வைத்துப் பாற்கடலில் தேவர்கள் சுழற்றினார்களே, அந்த மந்தர பர்வதந்தான் இங்கே சந்திர ஒளியோடு இந்த மலையின் பேரில் ஏறி நின்று கொண்டதோ என்று அதிசயப் படுகிறோம்.

'முந்தொரு கருமலை முகட்டு முன்றிலில்
சந்திரன் ஒளியொடு தழுவச் சார்த்திய
அந்தம் இல் கனைகடல் அமரர் நாட்டிய
மந்தர கிரி யென'

நிற்கும் இது என்ன என்று நம்மையே கேட்டுக் கொள்கிறோம். மலையை நெருங்குகிறோம். உண்மை தெளிவாகிறது. மலையின் மேல் உள்ளது ஒரு பிரும்மாண்டமான கழுகு. உருக்கிய பொன்னை நிகர்த்த மேனி; சிவந்த கால்கள்; உதய சூரியனுடைய கிரணங்களை ஒத்து வெளி முழுவதையும் நிறைத்த விசாலமான சிறகுகள்; சிறிய கண்கள்; ஆனால், நெடுந்தூரம் காணும் கூர்மை வாய்ந்தவை; ஐராவதத்தைச் செலுத்த இந்திரன்உபயோகிக்கும் அங்குசத்தைப் போலப் பளபளவென்று மின்னும் அலகு. இப்படி இருக்கிறது அந்தக் கழுகு. கழுகுதானா? தலையிலே கிரீடம் ஒன்று மின்னுகிறது; கழுத்திலே நவரத்தின மாலை. கழுகுக்கு இவையெல்லாம் எதற்கு? இன்னும் நெருங்கியதும், மிக மிக வயதான கழுகு என்பதும் தெரிகிறது. ஆமாம்; எத்தனையோ கற்பங்களைச் சிறு நாட்களைப்போல் கண்ட பழுத்த பழம் இது,

'சிற்பங் கொள் பகல் எனக்கடிது சென்று தீர்
கற்பங்கள் எனை பல கண்டுளான்'

என்று கம்பர் நமக்குச் சொல்கிறார்.

ஜடாயு என்ற காவியப் பாத்திரத்தை அவர் அறிமுகப்படுத்தும் விதம் இது. ஆனால், இன்னும் ஜடாயு

என்ற பெயர் தெரியவில்லை. இராம லக்ஷ்மணர்களும் இந்த விசித்திரமான கழுகைச் சந்தேகத்தோடு பார்க்கிறார்கள். 'ஒரு சமயம் எவனாவது அரக்கன் இந்தப் பறவை வடிவம் கொண்டு நம்மைத் தாக்க வந்திருக்கிறானோ?' என்று எண்ணுகிறார்கள். கழுகும் மெல்லக் கழுத்தைத் திருப்பி, வீரர்களைச் சந்தேகத்தோடு பார்க்கிறது. அந்தப் பார்வையில் அது கண்டது என்ன?

முதன் முதலில் இராம லக்ஷ்மணர்களுடைய சௌந்தர்யந்தான், இந்தக் கழுகின் கண்ணையும் சிந்தையையும் கவர்கிறது. 'இந்திரன் முதலான தேவர்களை எல்லாம் அடிக்கடி பார்த்துக்கொண்டுதான் இருக்கிறேன். சக்ர தாரியான மகா விஷ்ணுவையும், வரந்தருகின்ற பிரம்ம தேவனையும், மழுவல்லவனாகிய சிவனையும் கண்டதில்லையா, கண்டிருக்கிறேன்; எப்போதும் காண்பேன். ஆனால், இந்த வீரர்களுக்குச் சமமாக யாரைச் சொல்லலாம்? தெரியவில்லையே!' என்று அந்தக் கழுகு மலைக்கிறது. மிகப் பழைய காலத்திற்கு அதன் நினைவு செல்கிறது. மன்மதனைச் சிவபெருமான் எரித்ததாகச் சொல்கிறார்களே, அந்தக் காலத்திற்கும் முந்தி, உருவத்தோடு மன்மதன் சஞ்சரித்திருக்க வேண்டுமே அப்போது, இந்தக் கழுகு மன்மதனை நேரிலே தன் கண்களாற் கண்டதாம். அதை இப்போது எண்ணுகிறது. 'மன்மதன் அழகுக் கடவுள்தான். இருந்தாலும் தாமரைக் கண்களை உடைய இவ் வீரர்களின் கால் தூசிக்குக்கூட அவன் சமானமாவானா? சந்தேகந்தான்' என்று இராம லக்ஷ்மணர்களைப் பார்த்து, அவர்களுடைய மேனி அழகில் ஈடுபட்டுப் பரவசம் அடைகிறது கிழக் கழுகு.

'காமன் என்பவனையும் கண்ணின் நோக்கினேன்
தாமரைச் செங்கண் இத் தடக்கை வீரர்கள்
பூ மரு பொலன் கழல் பொடியினோடும் ஒப்
பாம் என அறிகிலன் யார் கொலாம் இவர்'

என்று அதிசயிக்கிறது. 'பெண் கனி'யான சீதையின் அழகையும் இந்தக் கழுகு கவனிக்காமல் இல்லை. 'மலர் மகட்கு உவமையாள்' என்று அவளைப்பற்றித் தனக்குத்

தானே சொல்லிக்கொண்டு வியப்புடன் அவர்கள் மூவரையும் உற்று நோக்குகிறது.

யாரோ அன்னியர்கள் இந்த நிர்மானுஷ்யமான காட்டு நடுவில் வில்லேந்தி வருகிறார்களே என்று எண்ணிச் சிறிது எச்சரிக்கையோடு, அவர்களைக் கவனித்த கழுகின் மனத்திலிருந்து இப்போது சந்தேகம் பறந்து விட்டது. அந்தச் சந்தேகத்தின் ஆழத்தில் எங்கேயோ நிழலாடிய அவநம்பிக்கையும் இப்போது மறைந்தது. அழகு வெள்ளத்தின் முன் ஐயமும் பயமும் தலைதூக்க முடியுமா? ஆனால், அழகின் தன்மையை ஆராய்ந்து பாராட்டும் கழுகை எங்கேயாவது நாம் கண்டிருக்கிறோமா? அழகுணர்ச்சி என்பது மனிதன் ஒருவனிடம் மட்டுமே விளைகின்ற பண்பு; சௌந்தர்ய லோகத்தின் அடித்தலம் மனிதனுடைய பண்பட்ட மனந்தான். பஞ்சவடிக் குன்றின்மேல் குந்தியிருக்கும் இந்தக் கழுகினிடம் அந்த மனத்தை மட்டுமன்று, அதில் பயிராகும் அழகுக் கதிரின் வளத்தையே முதன் முதலில் காண்கிறோம்.

கழுகின் சிந்தனைஓடிக்கொண் டிருக்கிறது.'இவர்கள் யார், தெரியவில்லையே! வீரர்களுடைய முகத்தைப் பார்த்தால் என் பழைய நண்பன் தசரதச் சக்கரவர்த்தியின் ஞாபகம் வருகிறது. அவனுடைய முகச் சாயல் இவ்விருவருக்கும் பொருந்தி இருக்கிறது. கேட்டுப் பார்ப்போம்' என்று எண்ணுகிறது ; கேட்டும் விடுகிறது. இராம லக்ஷ்மணர்களுடைய சந்தேகம் நீங்கவில்லை. கழுகு பேசியதைக் கண்டதும் சந்தேகம் அதிகரிக்கிறது. இருந்தாலும் சத்தியத்தைத் தவிர அவர்களுக்கு வேறு வழி தெரியாதே,

'கனைகடல் நெடுநிலம் காவல் ஆழியான்
வனைகழல் தயரதன் மைந்தர் யாம்'

என்று சொல்லுகிறார்கள். குன்றின் உச்சியிலிருந்து கீழே குதித்து, களிப்புப் பொங்கும் உள்ளத்தோடு 'அப்படியா? சக்கரவர்த்தி சௌக்யமாய் இருக்கிறாரா?' என்று வினவுகிறது கழுகு. இராம லக்ஷ்மணர்களுக்கு

ஒன்றும் புரியவில்லை. 'காட்டிலே உள்ள இந்தக் கிழக் கழுகு குசல ப்ரச்னம் செய்வதாவது? இதற்கும் நமது தந்தைக்கும் என்ன சம்பந்தம்?' என்று அவர்கள் எண்ணியிருக்கவேண்டும். இராமன் பேசுகிறான்: 'மறக்கக் கூடாத சத்தியத்தைப் பாதுகாத்துத் தசரதன் சுவர்க்கலோகம் அடைந்தான்.'

'மறக்க முற்றுதன வாய்மை காத்து அவன்
துறக்க முற்றான்'

என்று இராமன் சொல்லி முடிப்பதற்கு முன், கழுகு துடியாய்த் துடித்து மூர்ச்சையாகிவிடுகிறது. இராம லக்ஷ்மணர்கள் ஆச்சரியத்தில் முழுகுகிறார்கள். அதோடு கழுகின் துயரம் அவர்கள் மனத்திலே உள்ள புண்ணைக் கீறி விடுகிறது. அவர்களும் கண்ணீர் விடுகிறார்கள். கழுகைத் தழுவி எடுத்துத் தேற்றுகிறார்கள்.

சிறிது நேரத்தில் மூர்ச்சை தெளிந்த கழுகு, வாய் விட்டு அரற்றத் தொடங்குகிறது. உறவு என்ற தெய்வ மலரைக் கசக்கி எறிகிறதே பிரிவு என்னும் கொடுமை, இதன் காரணமாக உலகம் முழுவதும் வியாபித்து நிற்கும் சோகத்தையெல்லாம் கழுகின் புலம்பலில் கேட்டு விடுகிறோம்.

'அரசர்க்கு அரசனே! பொய்மைக்குப் பகையாய், சத்தியத்திற்கு ஆபரணமாய் விளங்கியவனே! என்ன காரியம் செய்து விட்டாய்? உன் கொடையைக் கண்டு கற்பக தரு வெட்கித் தலைகுனிந்தது. உலகை எல்லாம் தன் ஆதரவு நிழலில் வைத்துப் பாதுகாத்த உன் வெண்கொற்றக் குடைக்குமுன், தண்மையால் உலகளிக்கும் சந்திரனும் தோற்றான். உன் பொறுமைக்குமுன் பூமிதேவியின் புகழும் மங்கியது. இப்போது நீ போய் விட்டதனால், கற்பகதருவுக்கும், சந்திரனுக்கும், பூமிக்கும் கொண்டாட்டந்தான். ஆனால், உன் கொடையை நம்பி உயிர்வாழ்ந்த ஏழைகளும், உன் கொற்றத்தையே அரணாகக் கொண்டிருந்த தருமமும், உன் பொறுமையின் விசாலத்தில் நண்பன் என்று

ஒதுங்கிய நானும் இனி என்ன செய்வோம்? எங்களுக்குப் புகலிடம் ஏது?

பரவல் அருங் கொடைக்கும் நின்றன்
　　பனிக்குடைக்கும் பொறைக்கும் பண்பு தோற்ற
கரவல் அரும் கற்பகமும் உடுபதியும்
　　கடலிடமும் களித்து வாழ
புரவலர் தம் புரவலனே பொய்ப் பகையே
　　மெய்க்கு அணியே புகழின் வாழ்வே
இரவலரும் நல்லறமும் யானும் இனி
　　என்பட நீத்து ஏகினையே'

என்று விம்முகிறது கழுகு. 'ஒரு சமயம் உறுதியில்லாத என்னுடைய பேதை நெஞ்சைச் சோதிக்கவே இதைச் செய்தாயா? என்னுடைய பலவீனம் உனக்குத் தெரியாதா? உன்னுடைய நட்புக்கு எந்த வகையில் நான் தகுதியுடையவன்? தகுதி இருந்தால் நீ இறந்த அதே கணத்தில் என்னுடைய உயிரும் போயிருக்குமே? இப்போது நீ இறந்த செய்தியைக் கேட்ட பிறகுங்கூட என் உயிர் போகவில்லையே? சிநேக தருமம் எனக்கு எப்படித் தெரியப் போகிறது? கேவலம் கழுகுதானே, என்னுடைய மிருகத் தன்மையைத் தானே காட்டிக் கொள்ள முடியும்?

... ... ... ... ... ... நிலையாத
　　நிலை உடைய நேய நெஞ்சின்
நலம் காண நடந்தனையோ நாயகனே
　　தீவினையேன் நண்பினின்றும்
விலங்கு ஆனேன் ஆதலினால் விலங்கினேன்
　　இன்னும் உயிர் விட்டிலேனால்'

என்று வெதும்புகிறது.

உடனே கழுகுக்கு ஞாபகம் வருகிறது; எப்போதோ நடந்த சம்பவம் அது. தயிர் உடைக்கும் மத்தைப் போல, தன் வலிமையினால் சம்பராசுரன் உலகங்களைக் கலக்கிய காலம். அவனை வதைத்து உலகத்தைக் காத்தானும் தசரதன். அந்தச் சமயத்தில் இந்தக் கழுகைப் பார்த்து, எல்லோர் முன்னிலையிலும் 'நான் உடல், நீ உயிர்' என்று தசரதன் சொன்னானும். 'அந்த

வார்த்தை என்ன ஆயிற்று? உடலை விட்டு உயிர் பிரிந்துபோவதைக் கண்டது உண்டு. உயிரை விட்டு உடல் எங்கேயாவது பிரிந்து போகுமா? இந்த விபரீதம் நிகழும்படி செய்து விட்டாயே? எப்படித் துணிந்தாய்? பரிசுத்தமான இதயம் படைத்தவன் ஆயிற்றே?' என்று பிரலாபிக்கிறது கழுகு. வேதனைப் பெருக்கிலே யமனைப் பார்த்துப் பரிகசிக்கிறது. 'அட, பேதையே, தசரதன் சத்திய சந்தன் என்பதுதான் உனக்குத் தெரியுமே! அவன்தான் தன்னை உடம் பென்றும், என்னை உயிர் என்றும் சொல்லி விட்டானே! உயிரை வைத்துவிட்டு உடம்பை எப்படிக்கொண்டு போனாய்? அறிவு மழுங்கிப் போயிற்ா?' என்று ஆத்திரப்படுகிறது:

'தயிர் உடைக்கும் மத்து என்ன உவகை நவி
சம்பரனைத் தடிந்த அந்நாள்
அயிர் கிடக்கும் கடல் வலயத் தவர் அறிய
நீ உடல் நான் ஆவி யென்று
செயிர் கிடத்தல் செய்யாத திருமனத்தாய்
செப்பினாய் திறம்பா நின்சொல்
உயிர் கிடக்க உடலை விசும்பு ஏற்றினன்
உணர்வு இறந்த கூற்றினரே.'

இந்தக் கழுகினிடத்தில்தான் என்ன அன்பு, எவ் வளவு வேதனை? அதன் புலம்பலின் உள்ளே, நட்பின் அளக்க முடியாத பெருமை அடங்கிக் கிடக்கிறது. அதைக் காணவேண்டும். இந்த அதிசயக் கழுகு யார்? அதையும் தெரிந்துகொள்ள வேண்டும்.

தசரதன் இறந்தான் என்பதைக் கேட்டதும் துயரத் தில் அழுந்திய கிழக் கழுகின் புலம்பல், பஞ்சவடிக் காடு முழுவதையும் நமது நெஞ்சத்தையும் ஒருங்கே நிறைக்கிறது. தசரதனிடத்தில்தான் இந்தக் கழுகுக்கு எவ்வளவு ஈடுபோடு என்று முதலில் எண்ணுகிறோம். உடனே இதில் என்ன அதிசயம், தசரதனிடத்தில் அன்பு செலுத்தாமல் இருக்க முடியுமா, எல்லோரும் கைகேசியைப் போல் நடந்து கொள்வார்களா. 'சேண் உலாவிய நாளெலாம் உயிர் ஒன்று போல்வன

செய்து' பிறகு அவன் உயிருக்கே உலேவைத்து விடுவார்களா? எப்படி முடியும்? தசரதன் சாமானியமானவனு? 'உயிரெலாம் உலாயதோர் உடம்பாக' நின்று அரசு புரிந்தவன்; 'நானிலத்தோர் தந்தை. தனி அறத்தின் தாய். தயா நிலே.' கழுகு சொல்வதுபோல் 'பொய்ப் பகை, மெய்க்கு அணியாய்' விளங்கியவன். இப்படிப்பட்ட ஒருவனிடம் அன்பு வைக்காமல் இருக்க முடியுமா? கழுகு செய்ததுதான் நியாயம்; இயற்கையுங்கூட. இதில் பாராட்டுவதற்கு என்ன இருக்கிறது? சூரியன் வந்தவுடனே மலர்ந்துவிட்டது என்பதற்காகத் தாமரையை யாராவது தட்டிக்கொடுப்பது உண்டா என்றெல்லாம் நினேக்கிருேம்.

இதற்குள் வேருேர் எண்ணம் மெல்லக் குருத்துவிடுகிறது. ஆமாம்; இந்தக் கழுகுக்குத் தசரதன் என்ன அப்படிச் செய்துவிட்டான்? தசரதன் இறந்தவுடன் அயோத்தி ஜனங்கள் துயரக் கடலில் தத்தளித்தார்கள்; நமக்குத்தெரியும். கோசலே புழுவாய்த் துடித்தாள். கலங்காத ஞானபலம் பெற்ற வதிஷ்டனும் சிறிது கலங்கினுன். செய்தி கிடைத்தவுடன் பரதனும் இராமனும் பட்டபாடு கொஞ்சமன்று. அதெல்லாம் சரிதான், அவர்கள் துயரத்தின் பெருக்கு பிரமாதமானதுதான் என்ருலும், அந்தத் துயரம் நமக்குப் புரிகிறது. இவர்கள் ஒவ்வொருவரும் தசரதனேடு நெருங்கிப் பழகி அவனிடம் பல நன்மைகளேப் பெற்றவர்கள். ஒன்றும் இல்லாவிட்டாலும் அவனேடு நெடுங்காலம் தொடர்பாவது கொண்டவர்கள். இந்தக் கழுகின் துயரத்திற்கு அப்படி ஒன்றும் காரணம் இருப்பதாகத் தெரியவில்லே. எப்போதோ சம்பராசுரனே வதைத்த அந்தப் பழங்காலத்தில்'நீ உயிர், நான் உடல்' என்று தசரதன் சொன்னுனும். ஆனுல், இது போதாதா? இதை எண்ணி எண்ணித்தான் கழுகும் ஆர்த்துப் போகிறது. குண நலம் ஒன்றுமில்லாத வெறும் காட்டுக் கழுகு ஒன்றைப் பார்த்து அறிவிலே பழுத்த தசரதன் இப்படிப் பேசி இருப்பானு? மாட்டான். அதுவும் சம்பராசுரவதம் நடந்தவுடனே தசரதன் இதைச் சொல்வானேன்?. ஒரு சமயம் அந்தப் போரில் இந்தக் கழுகு

அவனுக்கு உதவி செய்ததோ ? அப்படித்தான் இருக்க வேண்டும். ஆனால், கழுகு இதைச் சொல்லவில்லையே!

சொல்லவில்லையா ? இப்போது தெரிய ஆரம்பிக்கிறது இந்தக் கழுகின் உண்மையான பெருமை. மலையைப் போன்ற உடம்பிலோ, வானத்தை வளைத்த சிறகிலோ மட்டும் இந்தக் கழுகின் ஆற்றல் அடங்கிக் கிடக்கவில்லை. அதன் பெருமையும், வலிமையும், அடக்கம் நிறைந்த அதன் நெஞ்சிலேதான் தங்கியிருக்கின்றன. தான் தசரதனுக்குச் செய்த உதவியைப் பற்றி, அது எண்ணவே இல்லை. அந்த உதவியைப் பெற்றதன் காரணமாக மனம் குளிர்ந்த தசரதனுடைய வார்த்தைகளை மட்டுமே எண்ணுகிறது. கழுகின் பிரலாபத்தைக் கண்டு அதிசயித்து, பிறகு 'இதில் என்ன அதிசயம்' என்று நினைத்த நாம், மறுபடியும் கழுகின் அற்புதமான நட்பையும், தன்னைப் பற்றிய சிந்தையே இல்லாமல், தசரதனுடைய பெருமையைப் பேசி, அதில் தன்னைக் கரைத்துக் கொள்ளும் அதன் அடக்கத்தையும் எண்ணி எண்ணி வியப்படைகிறோம். 'யார் இந்தக் கழுகு' என்று கேட்கிறோம்.

இந்தக் கேள்வி இராம லக்ஷ்மணர்களின் கண்களில் மிதந்ததோ என்னவோ, தான் யாரென்று கழுகு சொல்லத் தொடங்குகிறது: "அருணன் மகன் நான். சம்பாதி என் அண்ணன். நாங்கள் இருவரும் மிகப் பழங்காலத்தில் உதித்தவர்கள்' என்று தன்னைப் பற்றிய விவரத்தை வமிசாவளியோடு கூறுகிறது. ஆமாம்; பெயர் ஜடாயு என்றும் சொல்லிக் கொள்கிறது. அதோடு 'தசரதற்கு இன்னுயிர்த் துணைவன்' என்று இன்னொரு தடவை அந்தப் பெருமையைப் பாராட்டிக் கொள்கிறது. கழுகின் மனம் தசரதனிடத்தில் லயித்திருக்கிறது என்பதற்கு இதைவிட என்ன அத்தாட்சி வேண்டும்?

பார்த்தார்கள் இராம லக்ஷ்மணர்கள். அவர்கள் மனம் உருகிவிட்டது. தசரதனையே மறுபடியும் நேரில் கண்ட மகிழ்ச்சி அவர்களுக்கு. ஆனால், அடுத்த நிமிஷம் கவலை வந்து கவ்வும்படியாக ஜடாயு பேசுகிறான்: 'சரி,

தீ வளர்த்து அதில் விழுந்து என்னை மாய்த்துக்கொள்வதால்தான் என் துயரம் நீங்கும். தசரதனுக்குச் செய்தது போல், குழந்தைகளே, எனக்கும் ஈமக்கடனைச் செய்து என்னைக் கரையேற்றுங்கள்' என்று சொல்லுகிறான். இதைக் கேட்டதும், இராம லக்ஷ்மணர்கள் பதறிப்போகிறார்கள். 'நீ போய் விட்டால் எங்களுக்கு யார் இருக்கிறார்கள் ?

இவ்விடத்தில் எம்பெருமான் எமைக்
கைவிடில் பின்னை யார் களைகண் உளார்?

தாயையும், தந்தையையும், அயோத்தி நகரத்தையும் நீங்கிவந்த வருத்தத்தை உன்னைப் பார்த்துச் சிறிது ஆற்றிக் கொண்டோம். ஏழைகளாகிய எங்களைக் கைவிட்டு நீயும் போகிறாயே ?

தாயும் நீட்சரும் தந்தையும் தண்நகர்
வாயில் நீங்கி வனம்புகுந்து எய்திய
நோயும் நீங்கிய நுண்ணிய எங்களை
நீயும் நீங்குதியோ நெறி நீங்கலாய்'

என்று பரிதாபமாகக் கேட்கிறார்கள். 'அப்படியானால் நீங்கள் அயோத்தி திரும்பும் வரையில் நான் உயிர் வைத்துக்கொண்டு இருப்பேன். இங்கேயே இருங்கள். நாட்டைத் துறந்துவிட்டோம் என்ற கவலை வேண்டாம். காடானால் என்ன ?

காட்டில் வைகுதிர் காக்குவன் யான்'

என்று மற்றவர்களுக்காக வாழச் சம்மதிக்கிறான் ஜடாயு.

இது நமக்கும் ஜடாயுவுக்கும் ஏற்படும் முதல் சந்திப்பு. இதைக் கம்பர் அமைக்கும் விதத்தைக் கவனித்தீர்களா ? கூனி, விராதன், கவந்தன், விசுவாமித்திரன், குகன் இவர்களையெல்லாம், முதலிலேயே அவரவர் பெயரைச் சொல்லி, குணதிசயக் கட்டியம் கூறி, காவிய அரங்கத்திலே கம்பர் ஏற்றுகிறார். இது அவருடைய சாதாரணமான முறை. ஆனால், ஜடாயுவை அவர் அறிமுகப் படுத்தும் விதமே தனி. முதலில் பயமும் சந்தேகமும் தோற்றுவிக்கும் உருவ வர்ணனை; பிறகு

சோகத்திலே நம்மை அழுத்தும் பிரலாபம்; பிறகு ஜாடயு வைப் பற்றி நமது சிந்தையில் ஏற்படும் தெளிவு; கடைசியில்' 'யார் இவன் ' என்று தெரிந்துகொள்ள ஆத்திரப்படும் நிலைக்கு நம்மை இழுத்துக்கொண்டு சென்றபிறகு, ஜடாயுவைப் பற்றிய வரலாறு. இந்த வரலாற்றைக் கேட்பதற்கு முன்னமேயே, இது வெறும் கழுகு அன்று; உத்தமமான பண்பு வாய்ந்த மனித உள்ளமே இந்தக் கழுகு உடம்புக்குள் நின்று ஆட்சி புரிகிறது என்ற முடிவுக்கு நாம் வந்துவிடுகிறோம். அப்போது சொல்கிறார் கம்பர், 'இதுதான் ஜடாயு' என்று. இது அருமையான நாடக முறை. முதலில், பாத்திரத்தின் தோற்றம், செயல், பேச்சு, இவற்றால் விளையும் சுவாரஸ்யம், படிப்படியாக சுவாரஸ்யத்தின் முதிர்ச்சி; பிறகு பாத்திரத்தைப் பற்றிய வரலாறு. கம்பர் மாத்திரம் காவியம் எழுதாமல் நாடகம் எழுத முனைந்திருந்தால் எத்தனை அற்புதமான நாடகங்களைத் தமிழுக்குத் தந்திருப்பாரோ, யார் கண்டது!

தன்னை மறந்து நண்பனுடைய அன்பையே பெரிதாகக் கருதும் மனோபாவம், இந்த அன்புக் கொடியைச் சாவு என்ற காண்டாமிருகம் மிதித்துச் சிதைத்து விட்டதே என்ற ஏக்கம், நண்பன் போன பிறகு உயிர் வாழ்வதில் அர்த்தமில்லை என்ற துணிவு, எல்லாவற்றிற்கும் மேலாக, இந்தத் துணிவையும் ஒதுக்கி வைத்து, மற்றவர்களுக்காக, உயிரைத் தாங்கி யிருக்கவேண்டும் என்று முடிவுகட்டும் தியாகம்-இவற்றை யெல்லாம் ஜடாயுவினிடம் முதல் சந்திப்பிலேயே காண்கிறோம். அடுத்த தடவை ஜடாயுவைப் பார்க்கும்போது, அவன் மற்றவர்களுக்காக உயிரை விடவும் தயங்காத சூரன் என்பதையும் தெரிந்து கொள்கிறோம். எப்படி என்று பார்க்கலாம்.

பஞ்சவடி மலைகளுக்கு மேலே, இராவணனுடைய புஷ்பக விமானம் பறந்து செல்கிறது. அதிலிருந்து, சீதையின் ஓலக் குரலும், அதைப் பார்த்துப் பரிகசிக்கும் இராவணனுடைய சிரிப்பும் கோதாவரிக் காட்டு வெளியில் விழுந்து பரவுகின்றன. இந்தச் சிரிப்பு சீதையின்

நெஞ்சில் வீரக் கனலை மூட்டிவிடுகிறது. அவள் வார்த்தைகளில் கோபம் சீறுகிறது. ' நீயும் ஒரு வீரனா? நீ வீரனானால் ஏன் இப்படிக் கள்ளத்தனமாக என்னை எடுத்துச் செல்கிறாய்? நில். கரதூஷணர்களைப் பொடியாக்கிய வில்லாளன் வனத்தில் இருக்கிறான். அவனைச் சந்திக்கத் திராணி இல்லாமல் ஏன் இப்படிப் பயந்து ஓடுகிறாய்?' என்று கேட்கிறாள். இராவணன் நகைக்கிறான். 'மனிதர்களோடுபோராடுவதா? நல்ல வேடிக்கை! கயிலையங்கிரியை எடுத்துப் பந்தாடிய தோளுக்கு இதைவிட அவமானம் உண்டா?' என்று தன் வஞ்சனைக்கு வீரவேஷம் கட்டுகிறான். மான அவமானத்திற்குப் பயந்தாவது தன்னை விட்டுவிடுவான் என்று சீதை நினைத்தாளோ என்னவோ, அந்த எண்ணத்திலும் மண் விழுந்துவிட்டது. அவளுடைய கோபத்தில் வாள் போன்ற பரிகாசம் பிறக்கிறது. 'ஆமாம், மானத்தையும் அவமானத்தையும் நீதான் கண்டவன்.

'.................... தம் குலப் பகைவர் தம்பால்
போவது குற்றம் வானில் பொருவது நாணம் போலாம்
ஆவது கற்பினரை வஞ்சிக்கும் ஆற்றலேயாம்
ஏவந்தான் பழிதான் என்னே இரக்கமில் அரக்கர்க்கு '

என்று பேசுகிறாள். ஆனால். அவளுடைய மனம் இடிந்துவிட்டது என்பதற்கு இந்தத் துணிச்சலே அத்தாட்சி. சீதையின் வீர வார்த்தையில் நிமிர்ந்த நம்முடைய நெஞ்சு இப்போது அவளுடைய நிர்க்கதியை எண்ணிப் பதைக்கிறது.

அப்போது வருகிறான் ஜடாயு. அவன் சிறை வீச்சு பிரளயகாலச் சண்டமாருதமோ என்று தோன்றும்படிக்கு எழுந்த காற்று கடலைக் கடைகிறது. மலைகள் நிலை குலைகின்றன. மரங்கள் தலை சாய்கின்றன. மேகங்கள் ஒதுங்குகின்றன. இந்த அமளிக்கு மேலே ஜடாயுவின் குரல் கேட்கிறது.

"எங்கடா போவதெங்கே நில் நில்"

என்று அதிர்கிறது. இது இராவணன் காதில் விழுவதற்குள், பொற்குன்று ஒன்று ஆகாசத்தில் வருவதைப்

போல வந்து புஷ்பக விமானத்தின் வழியை மறைத்துக் கொண்டு நிற்கிறான் ஜடாயு. சீதையைப் பார்த்து, 'அஞ்சாதே' என்று சொல்லிவிட்டு, இராவணனிடம் திரும்பி 'கேடு கெட்டவனே, உயிர் வேண்டுமானால், சீதையை விட்டுவிட்டுப் போ.

பேதாய் பிழை செய்தனை பேருலகின்
மாதா அனையாளை மனக்கொடு நீ
யாதாக நினைத்தனை எண்ணம் இலாய்'

என்று ஜடாயு பேசுகிறான். இந்த நிலையிலுங்கூட ஜடாயுவின் பண்பட்ட மனம் இரக்கம் காட்டுகிறது. ஆமாம்; 'இரக்கமில் அரக்கனை' இராவணனிடத்தில் தான். 'வீணாய் அழிந்து போகாதே' என்று ஹிதோபதேசம் செய்யத் தொடங்குகிறது. 'இப்படியும் உண்டா? போர்க்களத்தில் ஒப்பாரியா?' என்று எண்ணுகிறீர்கள். ஆனால், வானத்தில் மட்டுமல்ல, ஆத்மீக வெளியிலும் உயரப் பறப்பவன் அல்லவா இந்த ஜடாயு? அவன் உள்ளத்தின் சிறை வீச்சைக் காண்போம்.

## தெய்வ மரணம்

ஆகாச வீதியில் இராவணனுடைய எந்திரத் தேர் அசைவற்று நிற்கிறது. தேர் நகர முடியாதபடி அதன் வழியை மறைத்துக்கொண்டு,

'ஏகுவது எங்கு? வானினோடு இத்தனை
திசையையும் மறைப்பென் ஈண்டு'

என்று தன் வலிமையான சிறகுகளை விரித்து நிற்கிறான் ஜடாயு. அவனுடைய மனத்திலே கோபம் மூண்டு எழுகிறது. ஆனால், எழாதா? இருந்தாலும் அந்தக் கோபத்தை முதிரவிடாமல் அடக்கிக்கொண்டு, இராவணனைப் பார்த்துச் சில வார்த்தைகள் பேசுகிறான். இராவணனை எச்சரிக்கும் தோரணையில் ஜடாயுவின் பேச்சு அமைகிறது. அந்த எச்சரிக்கையில் கோபத்தின் அடிநாதம் குமுறுகிறது.

'பேதாய் பிழை செய்தனை பேருலகின்
மாதா அனையாளை மனக்கொடு நீ
யாதாக நினைத்தனை'

என்றும்

'எண்ணமிலாப் பித்தேறினை ஆக பிழைத்தனை'

என்றும் ஜடாயு பேசும்போது, கடிவாளம் போட்டு நிறுத்தப்பட்டிருக்கும் கோபத்தின் சிலிர்ப்பு சொல்லில் தோன்றத்தான் செய்கிறது. அதோடு தன்னம்பிக்கையும் பெருமிதமும் தொனிக்கின்ற சொற்களும் வருகின்றன. ஆனால் ஜடாயுவின் பெருமிதம் தன்னுடைய வலிமையை எண்ணியதால் ஏற்படவில்லை; இராமனுடைய பராக்கிரமத்தைச் சார்ந்து, அது காரணமாகவே விளைகிறது. 'இராமனை என்னவென்று நினைத்திருக்கிறாய்?

எல்லா உலகங்களும் இந்திரனும்
அல்லாதவர் மூவரும் அந்தகனும்
புல்வாய்ப் புலி கண்டது போல்வர் அலால்
வில்லாளனை வெல்லும் மிடுக்கினரோ'

என்று இராவணனைப்பார்த்து ஜடாயுகேட்கிறான். 'உனக்குத்தான் தெரியுமே? அதற்குள் மறந்துவிட்டாயா? சமீபத்தில்தானே கரதூஷணர் வதம் நடந்தது? அன்று யமனுக்குக் கிடைத்த பெருவிருந்து ஞாபகமில்லையா?

உய்யாமல் மலைந்து உமர் ஆருயிரை
மெய்யாக இராமன் விருந்திடவே
கையார முகந்து கொடு அந்தகனார்
ஐயா புதிது உண்டது அறிந்திலையோ?'

என்று நிமிர்ந்த பார்வையோடு இராவணனைப் பார்க்கிறான் ஜடாயு.

இன்னும் ஓர் உணர்ச்சியும் ஜடாயுவின் பேச்சில் வெளிப்படுகிறது. தருமத்தை மறவாத நெஞ்சில் இயற்கையாக உதிக்கும் இரக்கமே அது. 'அடபாவி, நீ செய்வது தகாத காரியம். அது உன்னை அழித்துவிடும். இம்மையில் உன் கூட்டத்தாரோடு சாய்வதற்கும் மறுமையில் நரகத்திலே விழுந்து தவிப்பதற்கும் நீ இப்

போது செய்யும் காரியத்தைவிடச் சுலபமானவழி இருக்க முடியாது. ஏன் இந்த வழியிலே போகிறாய்? திரும்பி விடு.

கெட்டாய் கிளையோடு நின் வாழ்வையெல்லாம்
சுட்டாய் இது என்ன தொடங்கினை நீ?

அதருமம் விஷத்தைப் போலக் கொடுமையானது. அதை அருந்திவிட்டு உயிர் வாழமுடியுமா? கொல்லவரும் யானையின் பேரில் மண் உண்டையை வீசி எறிகிறாயே, என்ன பேதைமை?

கொடு வெங்கரி கொல்லிய வந்ததன் மேல்
விடும் உண்டை கடாவ விரும்பினையே
அடும் என்பது உணர்ந்திலை ஆயினும் வன்
கடு உண்டு உயிரின் நிலை காணுதியோ'

என்றெல்லாம் ஜடாயு கேட்கும்போது முதலிலே பொங்கி எழுந்த அவனுடைய கோபத்தைக் கட்டுப்படுத்தி நிறுத்திய சக்தி தருமமும் இரக்கமும் என்பது நன்றாய்த் தெரிகிறது. 'சாவு வந்தால்தான் என்ன, செல்வங்கள் எல்லாவற்றையும் இழந்துவிட்டால்தான் என்ன,

துறப்பிலர் அறம் எனல் சூரர் ஆவதே'

என்று அயோத்தியா காண்டத்தில் இராமன் சுமந்திரனிடம் கூறிய வீர மகன் இலக்கணத்தை, ஜடாயுவின் தரும உணர்ச்சியிலும் அதன் அடிப்படையான இரக்கத்திலும் நாம் கண்டுவிடுகிறோம்.

ஆனால், இதையெல்லாம் இராவணன் எப்படி உணர முடியும்? அவனோ அரக்கன்; 'இரக்கம் என்று ஒரு பொருள் இலாத நெஞ்சினன்'; தாபமும் காம நோயும் பிடித்தாட்டியதால் நேர்மை மழுங்கியவன்: அவன் காதில் தருமோபதேசம் விழுமா? கழுகின் எச்சரிக்கையைப் பலவீனத்தின் குரலாக அவன் எண்ணுகிறான். 'ஓடிப்போய் விடு' என்று ஜடாயுவை அதட்டுகிறான்.

அவ்வளவுதான். ஜடாயுவின் கோபம் விசுவரூபம் எடுக்கிறது. அவனுடைய அஞ்சாத நெஞ்சம் வீரப் போரில் தன்னை இனம் காட்டிக் கொள்ளுகிறது. ஆரணி

யத்தின் தனிமையில் அதிர்கின்ற இந்தத் துவந்துவ யுத்தத்தின் கடுமையை, கம்பரோடு நின்று முழுதும் அனுபவிப்பதற்கு நமக்கு நேரமில்லை. காற்றெனச் சாடு கிறான் ஜடாயு. இராவணனுடைய வீணைக் கொடியும், நீண்ட வில்லும் முறிந்து விழுகின்றன. தேர்ப்பாகன் தலையைத் துண்டித்து இராவணன் முகத்தில் எறிகிறான் ஜடாயு. இராவணன் கதாயுதத்தால் ஜடாயுவைப் புடைக் கிறான். கீழே சாய்கின்ற ஜடாயு, 'ஐயோ' என்று சீதை அரற்றித் துடிப்பதைப் பார்த்துவிடுகிறான். தன் வேதனை அவனுக்குப் பெரிதாகத் தோன்றவில்லை. குழந்தை ஏங்குகிறாளே என்பதுதான் அவன் கவலை. 'பயப்படாதே' என்று சொல்லிக்கொண்டே பெருமூச் சுடன் எழுந்து இராவணன் தேர் மேற் பாய்கிறான். கதை யைப் பறித்து வீசுகிறான். குதிரைகளை மூக்கால் கொத்தி உயிர் குடிக்கிறான். இராவணன் மார்பிலும் தோளிலும் சிறகால் புடைக்கிறான். இராவணனுற்கூட இதைத் தாங்க முடியவில்லை. பிறகு எப்படியோ சமாளித்துக் கொண்டு, சிவபெருமானிடம் பெற்ற மந்திரவாளை உருவி, ஜடாயுவை வெட்டி வீழ்த்துகிறான்.

போரின் முடிவு இது. குற்றுயிராகக் கீழே விழுந்து விடுகிறான் ஜடாயு. அதனால் என்ன? அவன் செய்த போரின் பெருமையை,இராமன் அல்லவா அளப்பதற்குத் தகுதி உடையவன்? 'வில் ஒன்றில், கடிகை மூன்றில்' கரதூஷணரையும் அவர்களுடைய பெருஞ் சேனையையும் தூளாக்கிய ராமனுடைய வீரமும், ஜடாயுவின் சாதனை யைக் கண்டு பிரமிக்கிறது. சீதையைக் காணோமே என்று திகைத்து, இராவணனுடைய தேர்ச்சுவட்டைப் பின் பற்றி அவளைத் தேடிவரும் இராமலக்ஷ்மணர்கள், வழியிலே வீணைக்கொடி முறிந்து கிடப்பதைப் பார்க்கி றார்கள். 'இதைக் கவனித்தால் ஜடாயுவின் காரியம் என்று தோன்றுகிறது. வலிமையோடுதான் தாக்கி இருக்கிறான், ஆனாலும் அவனுக்கு என்ன நேர்ந்ததோ? கிழப் பருவத்தால் உடல் மெலிந்தவன் ஆயிற்றே' என்று கவலையோடு விரைந்து செல்கிறான் இராமன். இராவணனுடைய வில் மந்தர பர்வதத்தைப்போல் கீழே

கிடக்கிறது. 'இதை எப்படி ஒடித்தான் ஜடாயு? என்ன வலிமை?

இது கடித்து ஒடித்தான் நிலை கிடந்தவா நோக்கு'

என்று தம்பியிடம் காட்டி இராமன் அதிசயிக்கிறான். போகப் போக, போரின் கொடுமைக்கும், ஜடாயுவின் வலிமைக்கும், அடையாளங்களாக, உடைந்த கவசமும், சிதைந்த சாரதியும், குதிரைகளின் சடலங்களும், குண்டலங்களும் சிதறிக் கிடப்பதைக் கண்டு, இராமலக்ஷ்மணர்கள் அங்கே நடந்திருக்கும் யுத்தத்தின் வேகத்தை ஊகிக்கிறார்கள். வீரர்களாகிய அவர்களுக்குங்கூட, கை நடுங்குகிறது. 'தனியனாய் எப்படி ஜடாயு இந்தப் போரை நிகழ்த்தினான்?' என்று வியப்பிலும் கவலையிலும் மூழ்குகிறார்கள்.

இருந்தாலும் ஜடாயுவின் தோல்வி நம்மைக் கலக்கி விடுகிறது. ஜடாயுவின் வருகையும், அவன் செய்த போரும், சீதாபகரணத்தால் ஏற்பட்ட சோகத்திற்கு மாற்றாக அமைகின்றன. இராம லக்ஷ்மணர்களுக்கு ஜடாயு உதவினான் என்பது இருக்கட்டும். கதைப் போக்கின் சுவையை மாற்றிக் காவியத்திற்கு உயிரும் ஓட்டமும் தருவதற்குக் கம்பர் கையிலே ஜடாயு ஓர் அற்புதமான கருவியாக நிற்கிறான். அவன் மறைந்ததும்,

' நல்லவன் தோற்பதே நரகன் வெல்வதே
வெல்லதும் பாவமோ வேதம் பொய்க்குமோ
இல்லையோ அறம்'

என்று சீதை புலம்புகிறாள். இது நம்முடைய உள்ளத்தின் எதிரொலிதான். இதனால், பழைய சோகம் பெருகி விடுகிறது. வீரவிளக்காக வந்தான் ஜடாயு; அவன் விழுந்ததும், சோக இருள் முன்னிலும் அழுத்தமாகச் சூழ்வது இயற்கை தானே!

ஆனால், ஜடாயுவின் தோல்வியில் மனிதனுடைய குணங்களின் உன்னதம் வெற்றி பெறுகிறது. ஜடாயு வயது முதிர்ந்தவன்;

' யாக்கை தேம்பிடும் எண்ணரும்
பருவங்கள் இறந்தான் '

இராவணனோ அளவற்ற உடல் வலிமையும் தவ வலிமையும் உடையவன். இவர்கள் இருவருக்கும் மூண்டபோரில், ஜடாயு தோற்றான் என்றால், அது சந்தர்ப்பத்தின் வலிமையினாலே தான். சீதை சொல்வதுபோல், நல்லவன் தோற்றான், நரகன் வென்றான் என்றாலும், தோற்றவன் நல்லவன் என்ற உணர்ச்சி நம்முடைய சோகத்தைப் பெருமிதம் கலந்த தெய்வ அனுபவமாக மாற்றி விடுகிறது.

அன்று வீடு ஒன்றில் தீப்பிடித்துக் கொண்டது. தீயை அணைப்பதற்கும், வேடிக்கை பார்ப்பதற்கும் அக் கம்பக்கத்தில் உள்ளவர்கள் கூடி விட்டார்கள். 'ஐயோ, வீட்டிற்குள்ளே குழந்தை இருக்கிறதே!' என்று தாய் ஓலமிட்டாள். வீடு திகுதிகு வென்று எரிந்துகொண்டிருந்தது. கூட்டத்தில் உள்ளவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டு என்ன செய்வது என்று திகைத்தார்கள். அப்போது யாரோ ஒருவன், அன்னியன், அவன் தீயின் நாக்குச்சுழலும் வேதனைக் காட்டிற்குள்ளே பாய்ந்தான். கூட்டம் பயத்தாலும், கவலையாலும் தம்பித்து நின்றது. நாலைந்து நிமிஷங்களில் எரியும் வீட்டிற்குள்ளே சென்றவன் குழந்தையைக் கையில் ஏந்தித் தள்ளாடிக்கொண்டு வெளியிலே வந்து விழுந்தான். கூட்டத்தில் ஒரே ஆரவாரம். எல்லோரும் அவனை நோக்கி ஓடினார்கள். யாரோ ஒருவன் குழந்தையை எடுத்துக் கொண்டான். மற்றவர்கள் குழந்தையைக் காப்பாற்றிய வீரனுக்கு என்ன என்னவோ சைத்யோபசாரம் செய்தார்கள். ஆனால், அவன் கண் விழிக்கவில்லை. தீயின் நாக்கு அவன் உயிரையே நக்கி விட்டது. நெருப்பின் வலிமைக்கு அவன் தோற்றான். உண்மைதான். ஆனால், இந்தத் தோல்வியல்லவா மனித தத்துவத்தின் வெற்றி? கிழப்பருவத்தால் உடல் மெலிந்திருக்கிறோம் என்பது ஜடாயுவுக்குத் தெரியாதா? தெரியும். இராவணனுடைய வலிமையைப்பற்றியும் அவனுக்கு நன்றாகத் தெரியும். தெரிந்தும் எரிகின்ற கொடுந் தீயிலே பாய்கின்றான், குழந்தையைக் காப்பதற்கு! எரிந்து விடுகிறான். ஆனாலும், உன்னதமான மனிதனை எழுந்தும் விடுகிறான். ஜடாயுவின் தன்னலமற்ற அன்பும்

அதில் பயிரான வீரமுமே இதற்குக் காரணம். இந்த அன்பு ஜடாயுவின் கடைசி மூச்சிற்கூடப் பேசுகிறது. உடம்பெல்லாம். உடைந்து, உருக்குலைந்து, இரத்த வெள்ளத்தில் கிடக்கிறான் ஜடாயு. அவன் வெட்டுண்டு சிதைந்து கிடப்பதைப் பார்த்து வருத்தம் தாங்காமல் இராமன் புலம்புகிறான். அப்போது மெல்லக் கண்விழித் துப் பார்க்கிறான் ஜடாயு. அவன் உயிர் ஊசலாடிக் கொண் டிருக்கிறது. ஆனால், அவன் அன்பின் வலிமை குறையவே இல்லை. 'இந்த உடம்பு பயனற்ற ஜடப் பொருள். இது போகப்போகிறது. இது நஷ்டமே இல்லை. உங்களை காணப்பெற்றேனே, நான் பாக்கிய சாலிதான்.

பாக்கியத்தால் இன்று என் பயனில் பழி யாக்கை
போக்குகின்றேன் கண்ணுற்றேன் புண்ணியர்காள்வம்மின்

புண்ணியர்களே,வாருங்கள்'என்று இராம லக்ஷ்மணர்களை அருகில் அழைக்கின்றான். அழைத்து, அவர்கள் குழந் தைகள் அல்லவா அவனுக்கு, அரக்கனைத் தாக்கியதால் அன்பின் அடையாளமாகப் பெருமை அடைந்த தன் மூக்கினால் அவர்களை உச்சி மோந்து ஆறுதல் அடை கின்றான்.

'தாக்கி அரக்கன் மகுடத் தலை துமித்த
மூக்கினால் உச்சி முறை முறையே மோக்கின்றான்'

குழந்தைகளிடத்திலே தந்தைக்கு உள்ள அன்புதான் அவர்கள் குற்றத்தையும் கூசாமல் எடுத்துச் சொல்லும் சக்தி வாய்ந்தது. இராம லக்ஷ்மணர்களைப் பார்த்து,

'அஞ்சொல் மயிலை அருந்ததியை நீங்கினரோ
எஞ்சலில் ஆற்றல் இருவிரும்

சீதையை இப்படித் தனியாக விட்டு விட்டுக் குறைவில் லாத ஆற்றல் உடைய நீங்கள் இருவரும் போய்விட லாமா? என்ன காரியம் செய்துவிட்டீர்கள்?

.........வஞ்சி வனத்திடைத் தமியள் வைகக்
கொம்பிழை மானின் பின் போய்க்
குலப் பழிகூட்டிக் கொண்டீர்'

என்று இராம லக்ஷ்மணர்களைக் கண்டிக்கிறான் ஜடாயு. இராமனைப் பார்த்து 'கோபிக்காதே' என்று புத்திமதி சொல்லி, 'அருந்ததி அனைய கற்பின் காதலாள் துயரம் நீக்கு' என்று கட்டளையிட்டு, 'துயரம் நீங்கும், தீமைகள் விலகும்' என்று ஆசீர்வதித்து விட்டுக் கண்ணை மூடு கிறான் ஜடாயு.

இவனைக் கழுகு என்றா சொல்வது? அழியாத தரும நெறியில் போகின்றவர்கள், பொன்போன்ற குணம் உடையவர்கள் குணப் பொன்னின் மாற்றை அளக்கும் பசும் பொன்.

'நீள்நிலை அறநெறி நின்றுளோர்க்கு எலாம் ஆணி'

இந்த ஜடாயு என்று சீதை பேசுகிறாள். இராமனோ, இந்த ஜடாயு கேவலம் கழுகுக்கு அரசன் என்பதா உண்மை ? இல்லை.

சிந்தை நல் அறத்தின் வழி சேர்தலால்
பைந்தொடித் திருவின் பரிவு ஆற்றுவான்
வெந்தொழில் திறல்வீடுபெற்று எய்திய
எந்தையும் எருவைக்கு அரசனோ ?

'வெந்தொழில் திறல் வீடு பெற்றவன்', அதாவது, வீர சொர்க்கம் அடைந்தவன் என்றும், 'எந்தை, என்னுடைய தகப்பன்' என்றுமே ஜடாயுவைக் கருதுகிறான். ஜடாயுவின் மரணத்தைக் கேவலம் அழிவாக இராமன் எண்ணவில்லை. அது 'புலையுறு மரணம் அன்று. 'சரண் எனக்கு யார்' என்று ஜானகி துடிக்கிறாள். 'அஞ்சாதே, நான் இருக்கிறேன் உனக்கு அரணாக' என்று ஜடாயு வருகிறான். இராவணன் தன்னிலும் வலிமை பொருந்தியவன் என்று தெரிந்தும் கூசாமல் அவனோடு போரிடுகிறான்; மறைகிறான். அருள் ஒன்றே காரணமாகத் தன்னைத் தியாகம் செய்துவிடுகிறான். இதையெல்லாம் இராமன் நினைந்து நினைந்து, ஜடாயுவைத் தன் வாழ்க்கைக்கு வழிகாட்டியாகக் கொள்கிறான். விபீஷணனை ஏற்றுக்கொள்ளக் கூடாது என்று மற்றவர்கள் சொன்னபோது,

'சரண் எனக்கு யார்கொல்
என்று சானகி அழுது சாம்ப
அரண் உனக்கு ஆவன் வஞ்சி
அஞ்சல் என்று அருளின் எய்தி
முரணுடைக் கொடியோன் கொல்ல
மொய் அமர் முடித்துத் தெய்வ,
மரணம் என் தாதை பெற்றது
என் வயின் வழக்கன்று ஆமோ?'

என்று இராமன் கேட்கும் கேள்வியில் தருமத்தின் இயல்பு, இலட்சிய வாழ்க்கையின் தன்மை, ஜடாயுவின் பெருமை, இம் மூன்றையும் கண்டுவிடுகிறோம்.

ஜடாயு கழுகின் உடம்பு படைத்தவன். ஆனால், மிக உயர்ந்த மனிதப் பண்பே உருவானவன். அழகுணர்ச்சி, தன்னைப்பற்றியே எண்ணாத நட்பின் கனிவு, அன்பே கடமையாகக் கொண்ட தரும நாட்டம், இதைக் காப்பாற்ற உயிரையும்விட முனையும் தீரம்—இவை எல்லாம் சேர்ந்து அவனுடைய வாழ்க்கையை ஞானி ஒருவனுக்கு அமையும் தெய்வ வாழ்க்கையாகச் செய்துவிடுகின்றன. அவன் மரணமும் மரணமன்று, உலையாத பெரு வாழ்வுக்கு அடையாளமாக நின்று ஒளிவீசும் தியாகச் சின்னம்; அது தெய்வ மரணம்.

# துனியுறு முனிவன்

## விசுவாமித்திரன்

முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன், அருணாசலக் கவிராயருடைய இராமநாடகக் கீர்த்தனைகள் அரசு செலுத்திவந்த அந்தக் காலத்தில், எங்கள் வீட்டுத் தாழ்வாரத்தில் விழுந்து சிதறிய நிலவுப்பாதையில், முனிவன் ஒருவனை நான் சந்தித்ததுண்டு. நீங்களும் சந்தித்திருக்கலாம், ஞாபகம் இருக்கிறதா? இராமநாடகப் பாடல்களை, பாட்டி பாடிக்கொண் டிருப்பாள். அப்போது வருவான் அவன். சடைமுடியும் மரவுரியும் தரித்து, தவத்தால் மெலிந்த மேனியோடு நம் எதிரே வந்து நிற்பான்.

'கோபத்தில் ருத்ரன் குரு விசுவாமித்திரன்'

என்று மோகன ராகத்தில் பாடிக்கொண்டு, தன்னைத் தானே அறிமுகப்படுத்திக் கொள்வான். அரிச்சந்திரன் பட்டபாடும், காசி மயானமும், சந்திரமதியின் புலம்பலும் நமக்கு நினைவு வரும். 'இவன்தானா சத்தியத்தைக் கிட்டி கட்டிய மகானுபாவன்!' என்று பார்த்தும் பாராதது போல் அவனைப் பார்ப்போம். முனிவனுடைய புருவம் நெற்றியிலே ஏறும் ; கண்ணிலே கோப ஜ்வாலை வீசும் ;

வெப்பம் பரவும் ; தாழ்வாரத்து வெண்ணிலவும் சிவந்து காட்டும்.

கம்பருடைய காவியத்தில் விசுவாமித்திர முனிவனை நாம் மறுபடியும் சந்திக்கும்போது, முதலில் இதே கதை தான். காவிய அரங்கத்தில் விசுவாமித்திரன் அடி யெடுத்து வைக்கும் போதே 'வருவது யார் தெரியுமா ? துனியுறு முனிவன். 'இந்தப் பிரபஞ்சமும் அதைப் படைத்த பிரமதேவனும் கிடக்கட்டும். புதிய பிரபஞ்சம் ஒன்றையும், பிரமதேவனையும் நானே சிருஷ்டி செய்து விடுகிறேன்' என்று முன்னொரு காலத்தில் தொடங்கி னனே, அந்தக் கோபக் கோட்டையே வருகிறது.

..........................................மன்னுயிர்
அடங்கலும் உலகும் வேறு அமைத்துத் தேவரோடு
இடங்கொள் நான்முகனையும் படைப்பன் ஈண்டு எனுத்
தொடங்கிய துனியுறு முனிவன் '

என்று நம்மிடம் கம்பர் காதோடு காதாகச் சொல்கிறார். அவர் சொல்லும் உண்மை சிறிது நேரத்தில் துலங்கி விடுகிறது. 'வேள்வியைக் காக்க, இராமனைத் தா' என்று விசுவாமித்திரன் கேட்கிறான். தசரதன் கலங்குகிறான் 'இராமனா? போர்ப் பயிற்சி இல்லாதவன். சிறியவன். வேள்வியைத்தானே காக்கவேண்டும்?' என்று தயங்கித் தயங்கிச் சொல்லிவிட்டு, ஒரே மூச்சில்,

' பனிநீர்க் கங்கை
புடை யூற்றும் சடையானும் புரந்தரனும்
நான் முகனும் புகுந்து செய்யும்
இடையூற்றுக்கு இடையூறாய் யான்
காப்பன் பெருவேள்விக்கு எழுக '

என்று பேசிவிடுகிறான் தசரதன். வேள்வியைக் காக்க, தானே வருவது பிரமாதமான உதவிபோலவும், இராமன் வருவதால் முனிவனுடைய நோக்கம் நிறைவேறாது என்று தோன்றும்படியாகவும் அமைந்திருக்கிறது தசரத னுடைய பேச்சு. அவ்வளவுதான், விசுவாமித்திர முனி

வனுக்குக் கோபம் பொங்குகிறது. உலகத்தின் இறுதிக் காலம் வந்துவிட்டதோ என்று தேவர்கள் சந்தேகிக் கிறார்கள். சூரியன் மறைகிறான். முனிவனுடைய புருவ நுனிகள் துடிக்கின்றன; கண்கள் சிவக்கின்றன; கொடுமையான சிரிப்பு அதிர்கிறது. அவ்வளவில் நிலையாய் நின்ற அசரங்களும் நடுங்குகின்றன. திசை களெல்லாம் இருள்கின்றன.

இவ்வளவு தீவிரமாகப் பொங்கியெழும் கோபம், வசிஷ்டன் 'பொறுத்தி' என்று சொன்னதும், அந்த ஒரு சொல்லிலே கட்டுப்பட்டு நிற்கிறது. இந்த விசித் திரம் வசிஷ்டனுடைய பெருமையைக் காட்டுகிறது என்பது மட்டுமல்ல. விசுவாமித்திரனுடைய கோபத்தின் தன்மையையும் நமக்குக் குறிப்பாக உணர்த்துகிறது. விசுவாமித்திரனுக்கு, கோபம் புதியதன்று, நெடுநாளையத் தொந்தம். மிதிலையில் இராமனிடம் சதாநந்த முனிவன் விசுவாமித்திரனுடைய வரலாற்றை விவரமாகக் கூறு கிறான். அந்த வரலாற்றில் வருகிறது, விசுவாமித்திர னுடைய பழைய கோபத்தின் கதியெல்லாம்.

விசுவாமித்திரன் காதி என்ற அரசன் மகன். மகோதயம் என்னும் நகரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்து வருகிறான். ஒரு நாள் காட்டிலே வசிஷ்டன் என்ற முனிவனைச் சந்திக்கிறான். அவனிட மிருந்து காமதேனுவை விரும்புகிறான். அதை அடைய முடியாததால் கோபம் கொள்கிறான். இது விசுவாமித்திர னுடைய முதல் கோபம். வசிஷ்டனுடைய வலிமை தவத் தினால் ஏற்பட்டது என்று தெரிந்து தானும் தவம் செய்யப் போகிறான். அங்கே திலோத்தமையைக் கண்டு தன் உணர்வழிந்து காமக் கடலில் வீழ்கிறான். பிறகு தன் குற்றத்தை அறிந்து 'கண் மலர் சிவப்ப உள்ளம் கறுப்புற' திலோத்தமையை 'மண்மகளாகப் பிற' என்று சபிக்கிறான். இது இரண்டாவது கோபம்.

மறுபடியும் விசுவாமித்திரன் தவத்திற்கு இடைஞ்சல் உண்டாகிறது. திரிசங்கு என்ற அரசன் தன் சரீரத் தோடு சுவர்க்கம் செல்ல முயன்று தோல்வியுற்று அது

காரணமாக நீச வடிவத்தோடு திரிகிறான். விசுவாமித் திரனை அடைகிறான். விசுவாமித்திரன் திரிசங்குவைத் தன் தவவலிமையால் சுவர்க்கத்திற்கு ஏற்றுகிறான். தேவர்களோ திரிசங்குவைக் கீழே தள்ளி விடுகிறார்கள். வானத்திலே தலைகீழாக விழும் திரிசங்கு விசுவாமித் திரனை நோக்கி 'அபயம்' என்று கூவுகிறான். மறுபடி யும் விசுவாமித்திரனுக்குக் கோபம் வருகிறது. புதிய அண்டத்தையே சமைத்து, திரிசங்குவிற்கு அதில் இந்திர பதவி தந்துவிட முனைகிறான் விசுவாமித்திரன். தேவர்கள் வந்து அவனைச் சாந்தப்படுத்துகிறார்கள். திரிசங்குவிற்கு நட்சத்திர மண்டலத்தில் இடம் தருகிறார்கள். மறுபடியும் தவம் செய்யப் போகிறான் விசுவாமித்திரன். அங்கேயும் தடை வருகிறது. சுநச்சேபன் என்பவனுடைய உயிரைக் காப்பதற்காகற்காக விசுவாமித்திரன் தன்னுடைய புத்திரர்களின் உதவியை வேண்டுகிறான். அவர்கள் மறுக்கவே பெருங்கோபம் கொள்கிறான். அவர்களைச் சபித்துவிட்டு, சுநச்சேபனை மந்திர சக்தியால் காப் பாற்றுகிறான்.

'கோபத்தில் ருத்ரன்' என்று அருணைசலக் கவியும் 'துனியுறு முனிவன்' என்று கம்பரும் பேசியது நியாயந் தான் என்று தோன்றுகிறது, ஆனால், இருங்கள். இந்தக் கோபவரிசையைப் பார்த்தீர்கள் அல்லவா? முதற்கோபம், ஆசையிலும் அகங்காரத்திலும் உதித்தது. இரண்டாவது, காமத்தில் ஏற்பட்ட வெறுப்பிலிருந்து முளைத்த வெகுளி. மூன்றாவது, இரக் கம் அகங்காரம் இரண்டும் கலந்த உணர்ச்சித் தலத்தில் பயிரானது. நான்காவது கோபம், கேவலம் இரக்கத்தின் காரணமாகத் தோன்றியது. கோபந்தான். ஆனால், படிப் படியாக விசுவாமித்திரன் வளர்ந்து வருகிறான் என்பதை ஒவ்வொரு கோபவீச்சும் காட்டுகிறது.

இவ்வளவு வைபவத்திற்குப் பிறகுதான் விசுவா மித்திரனுடைய தவம் இடையூறு எதுவுமின்றி முற்றுப் பெறுகிறது. விசுவாமித்திரன் பிரும்மரிஷி என்ற பட்டத்தையும் பெறுகிறான். தசரதனிடம் வருகிறவன் இந்தப் பிரும்மரிஷி. இதை மறக்கக்கூடாது.

வந்தவன் தன்னுடைய வேள்விக்குத் தீங்கு அரக்கர்களைப் பற்றிப் பேசுகிறான். தவம் செய்வோர் காமம், வெகுளி, இவற்றைக் கண்டுதான் நடுங்குவார்களாம். காமக்குரோதங்களைப் போன்றவர்கள் அரக்கர்கள் என்கிறான் விசுவாமித்திரன் :

‘ தருவனத்துள் யான் இயற்றும் தவவேள்விக்கு
இடையூறாய்த் தவம் செய்வோர்கள்
வெருவறச்சென்று அடைகாம வெகுளி யென
நிருதர் இடைவிலக்காவண்ணம் ’

ஆகவே, கோபத்தினால் ஏற்படும் தீமையை உணர்ந்தே இருக்கிறான். என்றாலும், அடுத்த நிமிஷம் பெரும் கோபமும் கொள்கிறான். ஆனால், வசிஷ்டனுடைய ஒரு சொல்லில் கட்டுப்பட்டு நிற்கிறான். இதில் ஏதோ விசேஷமிருக்க வேண்டும். விசுவாமித்திரனுடைய கோபம் இங்கே தன்னலத்திலிருந்தோ காமத்திலிருந்தோ முளைத்ததன்று. மழைக் காற்று பழைய மரங்களைச் சாடித் தள்ளவில்லையா? மழையும் சில சமயங்களில் மண்ணையே பிளந்து அழிக்கவில்லையா? ஆனால், மழையும் காற்றும் இல்லாவிட்டால் உயிர் ஏது? தசரதன் முன் விசுவாமித்திரன் காட்டுகிற கோபம் மண்ணை வாழ்விக்க வரும் புயலின் கடுமையைப் போன்றது. இதை வசிஷ்டன் உணர்ந்து கொள்கிறான். அதனால் தான்.

‘ ......................நின்மகற்கு
உறுத்த லாகலா உறுதி யெய்து நாள்
மறுத்தியோ ?’

என்று தசரதனைக் கேட்கிறான். ‘விசுவாமித்திர முனிவன் வந்ததால் இராமனுக்கு அளவற்ற நன்மைகள் வரப்போகின்றன. விசுவாமித்திரனைத் தவிர வேறு எவராலும் இதைச் சாதிக்க முடியாது’ என்பதுதான் வசிஷ்டனுடைய கருத்து. ஆகவே, விசுவாமித்திரனுடைய கோபம் குழந்தையின் பேரில் தாய்க்கு வருகிற கோபத்தை ஒத்தது. குழந்தைக்கு நன்மையைச் செய்ய முனைகிறாள் தாய். இதை உணராமல் குழந்தை அவள்

போக்கைத் தடுத்தது என்றால், தாய்க்குச் சில சமயங்களில் கோபம் வருமல்லவா? அப்படி வருகிறது இப்போது விசுவாமித்திரன் கோபம். அனுபவமும், நிறைந்த தவமும் விசுவாமித்திரனுடைய பழைய கோபத்தை எரித்து விட்டன. இப்போது காமம், வெகுளி, மயக்கம் என்ற மூன்றிலிருந்தும் விடுவிட்ட ஞானி அவன். அவனுடைய கோபம் இறைவனுடைய சங்கற்பத்தை நிறைவேற்றும் இயற்கைச் சக்திகளின் குமுறலைப் போன்றது.

ஆனால், தன்னுடைய பழைய விருத்தாந்தத்தைத் தெரிந்தவர்கள் அந்தக் கண்ணோடேயே தன்னைப் பார்க்கிறார்கள் என்பது விசுவாமித்திரனுக்கு நன்றாகத் தெரியும். தான் சொல்லும் எதையும் 'தற்பெருமையிலிருந்து முளைத்தது' என்று மற்றவர்கள் எண்ணுகிறார்கள் என்பதை விசுவாமித்திரன் உணர்கிறான். அப்போது அவனுக்குக் கோபம் வருவதில்லை. அவர்கள் எண்ணத்தை மாற்றுவதில் மாத்திரம் வினயத்தோடு கவனம் செலுத்துகிறான். ஜனகனுடைய சபையில் இராமனுடைய குலத்தின் பெருமையைப் பற்றியும், இராமனுடைய பராக்கிரமத்தைப் பற்றியும் விசுவாமித்திரன் பேசி வருகிறான். கடைசியாக முடிக்கும் போது சபையிலுள்ளவர்கள் முகத்திலிருந்து, தான் பேசிவந்ததில் அவர்களுக்குப் பூரண நம்பிக்கை இல்லை என்பதை, விசுவாமித்திரன் கண்டுவிடுகிறான். 'சரிதானே, என்னுடைய விருத்தாந்தம் இங்கே உள்ளவர்களுக்குத் தெரியும். பழைய விசுவாமித்திரன் பேசுவதாக நினைக்கிறார்கள். 'அழிந்துபோன அதே தற்பெருமை இப்போது இராமனைப் புகழ்வதின்மூலம் வெளிப்படுகிறது. அவ்வளவுதான். தன்னுடைய சேவல் உயர்ந்தது என்று கூத்தடிக்கும் கோழிச் சண்டைக்காரனைப் போலவே இந்த முனிவனும் நடந்துகொள்ளுகிறான்' என்று இவர்கள் எண்ணுகிறார்கள்'—இப்படியாக விசுவாமித்திரன் நினைத்திருக்க வேண்டும். மிகுந்த வினயத்தோடு சபையில் ஏற்பட்ட சந்தேகத்தைத் துடைக்கிறான். பேசிக் கொண்டே வருகின்றவன் திடீ

றென்று நின்று 'நீங்கள் நினைப்பது சரிதான், இராமனிடத்தில் எனக்கு மிகுந்த அன்புண்டு. இவனை என் உயிராகவே பாவித்து வருகிறேன். இருந்தாலும் நான் இதுவரை இவனைப்பற்றிச் சொன்னதெல்லாம் வெறும் வரலாறு. என்னுடைய கற்பனையோ, என்னுடைய அன்போ இந்த வரலாற்றின் உண்மையை எந்த விதத்திலும் பாதிக்கவில்லை.

காதல் என்தன் உயிர்போலும்
இக்கரியோன் பால் உண்டால்
ஈது இவன்தன் வரலாறும் புயவலியும்'

என்று சொல்லி, சபையோர் மனத்தில் கிளம்பிய சந்தேகப் புண்ணைக் கீறி ஆற்றி விடுகிறான். இது போலவே பிறர் மனத்தை அறிந்து அதற்குத் தகுந்தபடி சாதுர்யமாகப் பேசுகின்ற சக்தியை வேறு சில இடங்களிலும் விசுவாமித்திரனிடம் காண்கிறோம். ஜனகன் சபையை அடைந்தவுடன் இராம லட்சுமணர்களைப் பார்த்து 'இவர்கள் யார்?' என்று ஜனகன் கேட்கிறான். விசுவாமித்திரன் பதில் ஜனகன் கவலைக்கு மருந்தாக அமைகிறது. 'சீதைக்குக் கல்யாணமாக வேண்டுமே' என்பது தான் ஜனகன் கவலை. சிவதனுசை வளைக்கக் கூடியவர்கள் வந்தாலல்லவா இந்தக் கவலை நீங்கும்? இதை மனத்திலே வைத்து விசுவாமித்திரன்பேசுகிறான்:

'விருந்தினர்கள் நின்னுடைய வேள்விகாணிய
வந்தார் வில்லும்காண்பார்
பெருந்தகைமைத் தயரதன் தன் புதல்வர்'

என்று அவர்களுடைய வரலாற்றைக் கூறத்தொடங்குகிறான். 'வேள்விகாணிய வந்தார்' என்றால் ஜனகனுக்கு என்ன? எத்தனையோ பேர் அதற்காக வருகிறார்கள். 'வில்லும் காண்பார்' என்று விசுவாமித்திரன் சொன்னதும் ஜனகன் கண்களில் ஒளி பிறக்கிறது. அவன் மனத்திலும் நம்பிக்கை தளிர்க்கிறது.

சாப விமோசனம் ஆன பின்பு அகலிகை தன் கணவன் கௌதம முனிவனுடைய ஆசிரமம் அடைகிறாள். உடன் சென்ற விசுவாமித்திரன் கௌதமன் கேட்பதற்கு முன்னமேயே, அவன் மனத்திலிருந்த வியப்பைத் தெரிந்துகொண்டு, கௌதமன் அகலிகையை அங்கீகரிப்பதற்கு வழி அமைக்கிறான்.

'நெஞ்சினாற் பிழைப்பிலாளை நீ யழைத் திடுக'

என்று பக்குவமாகக் கௌதமனுக்கு ஆறுதல் கூறித் தேற்றி விடுகிறான். தாடகையைக் கொல்ல முற்படாமல் தயங்கி நின்ற இராமனுடைய மனத்தையும் நன்றாக உணர்ந்து கொள்கிறான் விசுவாமித்திரன். பெண்ணென்று மனத்திலே நினைத்தான் இராமன். ஆனால், அதைச் சொல்லவில்லை. சொல்லாவிட்டால் என்ன, விசுவாமித்திரன் மட்டும்

'செறிந்த தார் அவன் சிந்தைக் கருத்தெல்லாம் அறிந்து'

இராமனுடைய மனத்திலே உள்ள எதிர்ப்புக்குச் சமாதானம் தருகிறான்: 'இவள் பெண்ணா! பாவமென்று உலகத்திலே உள்ள எல்லாவற்றையும் செய்து, எங்களை மாத்திரம் ஏதோ வெறும் சக்கையென்று விழுங்காமல் விட்டுவிட்டாள். இது ஒன்றுதான் அவளுடைய பாவத்திற்குக் குறை. இவளையா பெண்ணென்று எண்ணுவது!

தீதென்று உள்ளவை யாவையும் செய்து எமைக்
கோதென்று உண்டிலள் இத்தனையே குறை
யாதென்று எண்ணுவது இக்கொடி யாளையும்
மாதென்று எண்ணுவதோ? மணிப் பூணினாய்!'

ஆனால், தாடகையைக் கொல்வது நியாயமே என்று காரணம் காட்டிக்கொண்டு வரும்போதே 'இராமன் தான் சொல்வதை ஏற்கிறானோ' என்ற சந்தேகம் விசுவாமித்திரனுக்கு வந்து விடுகிறது. ஆனால், அவனுக்கு ஒன்று தெரியும்: தன்னுடைய கட்டளையாக ஏதாவது பிறந்தால் அதை இராமன் உடனே நிறைவேற்றிவிடுவான்

என்பது தெரியும். ஆகவே, கடைசியில் தன் பேச்சை ஒரு கட்டளேயோடு முடித்து விடுகிருன்.

'ஈறில் நல்லறம் பார்த்திசைத்தேன் இவள்
சீறி நின்று இது செப்புகின் றேன் அலேன்
ஆறி நின்றது அறன் அன்று அரக்கியைக்
கோறி'

என்று விசுவாமித்திரன் சொன்னதுதான் தாமதம், தாடகை வதம் நிறைவேறுகிறது.

இப்படி மனிதர்களுடைய மனத்தின் போக்கை நன்ருக அறிந்து, அதற்கேற்றபடி தன் சொல்லேயும் செயலேயும் அமைத்துக்கொண்டு, அவர்களே உண்மைக்குத் திருப்புகின்ருன் விசுவாமித்திரன். ஆகவே, அவன் தசரதனிடம் கோபித்ததுகூட ஒரு சிறு நாடகமோ என்று தோன்றுகின்றது.

மனித உள்ளத்தின் ஆழத்தையும், அதனுடைய விசித்திரமான கோணல்களேயும் அறிந்தவன் விசுவாமித்திரன். இதனுல்தானே என்னவோ, அவன் சொல்லுகிற கதைகளெல்லாம் மிக ரசமாய் இருக்கின்றன. இராமனேடு அயோத்தியிலிருந்து புறப்பட்டு மிதிலேயை அடையும் வரை, வழி நெடுக எத்தனே கதைகளேச் சொல்லிக் கொண்டு போகிருன் விசுவாமித்திரன்!

பரமசிவன் மன்மதனே எரித்த கதை வருகிறது. மூன்று பாடல்களில் அதை முடித்து விடுகிருன் விசுவாமித்திரன். ஆனுல், பளீரென்று கதை முழுவதும் கண் முன்னே தோன்றுகிறது. தாடகையின் கதையைச் சொல்லுகிருன். அவள் அரக்கியாக மாறிய வரலாறும் சுவையோடு தரப் பெறுகிறது. 'தமிழ் முனிவன் அகத்தியனுடைய சாபம் அது' என்கிருன் விசுவாமித்திரன்.

'தமிழெனும் அளப்பரும் சலதி தந்தவன்
உமிழ்கனல் விழிவழி ஒழுக உங்கரித்து
அழிவன செய்தலால் அரக்க ராகியே
இழிகென உரைத்தனன் அசனி அஞ்சவே.'

மகாபலியின் கதை வருகிறது. அதைத்தான் எவ்வளவு சுவையோடு விசுவாமித்திரன் கூறுகிருன்! மூன்று பாடல்கள் மகாபலியைப்பற்றி. உடனே வாமனவதாரம்.

'நீல நிறத்து நெடுந்தகை வந்தோர்
ஆலமர் வித்தின் அருங்குறள் ஆனன்'

வாமனன் மகாபலியின்முன் தோன்றுவதும், மூவடி மண் வேண்டுவதும், 'தராதே' என்று சுக்கிரன் தடுப்பதும் நான்கு பாடல்களில் முடிந்து விடுகின்றன. கடைசியில் திரிவிக்கிரமாவதாரம் மூன்றே பாடல்களில். கதையின் முடிவு பாற்கடலில் மகாவிஷ்ணு துயில்வதைக் காட்டுகின்ற காட்சி. உலகத்தை எல்லாம் அளந்த திருவடி நோகுமோ என்று லட்சுமி அவற்றை வருட, அவனுடைய திருவடி சிவந்து காட்டுகிறதாம்.

'கரியவன் உலகெலாம் கடந்த தாளிணைத்
திருமகள் கரந்தொடச் சிவந்து காட்டவே'

மகாபலியின் உள்ளத்தைத் திறந்து காட்டும் அற்புதமான சிறுகதை யிது. ஆகவே, சுக்கிரன் தடுத்தும் மகாபலி கூறுகின்ற பதிலுக்குமட்டும் ஏழு பாடல்கள். அதாவது கதையின் மூன்றில் ஒரு பங்கு! இந்த விசுவாமித்திர முனிவனுக்குத்தான் எவ்வளவு கலையுணர்ச்சி; எவ்வளவு அருமையான ரசனைத் திறம்!

பாற்கடல் கடைந்த கதை மிகமிகக் கம்பீரமாக வருணிக்கப் பெறுகிறது. அது போலவே அகலிகையின் கதையும். அவளுடைய குற்றத்தை மிகுந்த பரிவோடு நோக்குகிருன் விசுவாமித்திரன். ஒவ்வொரு கதையும் விசுவாமித்திரன் சிறந்த கதைக் கலைஞன் என்பதைச் சொல்கிறது. ஒரு கதை மட்டும் அவ்வளவு சிறந்த கட்டுக் கோப்புடையதாக இல்லை. கௌசிகிநதியைப் பார்த்து 'இதன் விருத்தாந்தம் என்ன' என்று இராமன் கேட்கிருன். விசுவாமித்திரன் கதையை எங்கேயோ தொடங்குகிருன். பிரமன், அவன் மகன் குசன், குசனுடைய நான்கு புதல்வர்களில் ஒருவனை குசநாபன், அவன் மகளிர், அவர்கள் வாயுதேவனால் கூனிகள்

ஆனது, பிரமதத்தனை மணந்து கூனல் நீங்கியது, பிறகு குசநாபன் மகன் காதி, காதியின் மகள் கௌசிகை... ஐந்தே பாடல்களில் மகாபலியின்முன் வாமனனைக் கொண்டுவந்து நிறுத்திய விசுவாமித்திரனு, இப்படி எங் கேயோ கதையை ஆரம்பித்துத் தடுமாறுகிருன் என்று எண்ணுகிறோம்.

கதையின் முடிவிலே காரணம் புரிகிறது. கௌசிகை விசுவாமித்திரனுடைய மூத்த சகோதரி. அவள் ரிசீகன் என்ற முனிவனை மணந்தாள். ரிசீகன் அவளைப் பிரிந்து பிரமலோகத்திற்குச் சென்ருன். அந்தப் பிரிவு தாளாமல் கௌசிகி அவனை நதி வடிவத்தில் தொடர்ந்தாள். ரிசீகனே 'இந்த நதி வடிவமாகவே இருந்து மண்ணுல கத்திற்கு உதவு' என்று கட்டளையிட்டுவிட்டு மறைந் தான். இந்தக் கதையைக் கௌசிகி நதியின் கரையி லேயே விசுவாமித்திரன் சொல்கிருன். நதியின் முனக வில் தன் சகோதரியின் பழைய துயரத்தை விசுவாமித் திரன் கண்டானே, என்னவோ? 'அந்தத் துயரத்தின் நிழல் அவன் மனத்தை நிறைத்ததோ, அதனுல்தான் கதையை இப்படிச் சொல்லுகிருனே' என்று நினைக்கும் படியாகக் கதையின் கடைசி வார்த்தைகள் வருகின்றன.

'எம்முனுள் நங்கை இந்த இருநதி ஆயினுள்' என்ற வார்த் தைகளோடு கதை முடிகிறது. 'எம்முனுள் நங்கை' என்று இங்கே விசுவாமித்திரன் சொல்ல வேண்டிய அவ சியம் இல்லை. கௌசிகையைப் பற்றித்தான் பேசிக் கொண்டு வருகிருன். அவள் தன் சகோதரி என்பதை யும் முன்னமேயே சொல்லிவிட்டான். இப்போது மறு படியும் ஏன் 'எம்முனுள் நங்கை' என்று பேசவேண்டும்? வேறென்றுமில்லை. விசுவாமித்திரன் மனத்தில் பழைய நினைவுகளின் சஞ்சலமும், சகோதரியின் பேரில் வாஞ் சையும் தளிர் விடுகின்றன. துயரச் சாயல் படிந்த விழி யோடு நதியைப் பார்த்துக்கொண்டு நிற்கிருன் விசுவா மித்திரன். தன்னையும் அறியாமல் கதையை முடிக்கும் போது, கௌசிகி தன் சகோதரி என்று இரண்டாம் தடவை சொல்கிருன். பிரும்ம ரிஷிதான் என்ருலும் கோமளமான மனித உறவுகள், அவன் மனத்திலிருந்து

பூரணமாக விலகவில்லை. ஆனால், எவ்வளவு அடக்கமாக வெளிப்படுகின்றன ! விலகுவதுதான் அவசியமா ? அவை இவற்றை வளர்ப்பதுதானே பூரண விடுதலை ?

அடக்கம், வினயம், பிறர் கருத்தை அறிந்து ஏற்ற படி நடக்கும் சக்தி, செயல் திறமை, கலை உணர்ச்சி—இவற்றை எல்லாம் விசுவாமித்திரனிடம் காண்கிறோம். இவனுக்கா ‘கோபத்தில் ருத்ரன்’ என்று பட்டம் சூட்டி விடுவது ? இவன் ‘துனியுறு முனிவனா’—அதாவது கோபம் மிகுந்த முனிவனா ? இருக்கலாம். ஆனால், இவன் கோபம் முதலில் எப்படி இருந்தபோதிலும் பிறகு இறைவனுடைய நோக்கத்திற்கு மனிதர்களைத் திருப்பும் புரட்சிக் கருவியாக நிற்கிறது. பிரும்ம ரிஷியான பிறகு, தன்னையும் கடவுளுடைய கருவியாகவே அவன் மதிக்கிறான். தாடகை வதமும், சித்தாச்ரமத்தில் அவன் நடத்தும் வேள்வியும், அகலிகை சாப விமோசனமும், சீதா கல்யாணமும் அவனால் நிறைவேறுகின்றன. ஆனால், அவனுக்கு இவற்றால் நேரடியாகப் பயன் ஒன்றுமில்லை. அவற்றைச் செய்து முடிப்பதே அவன் கோரும் பயன். இராமனைக் ‘காதலாற் கண்டவர் பிறவி காண்குறார்’ என்ற தத்துவ ஞானக் கண்ணோடு பேசும் இவனுக்குத் தன்னைப் பற்றிய கவலை ஏது ? கருவியாக நின்று இராமாவதார சங்கற்பத்தைத் தன் அளவுக்கு நிறைவேற்றிவிட்டு, உடனே இமய மலையை நோக்கித் தவத்திலே மறுபடியும் முனையச் சென்றுவிடுகிறான்.

‘போனான் வடதிசைவாய் உயர் பொன்மால்வரை புக்கான்’ என்று சொல்லிக் கம்பர் விசுவாமித்திரனை வழியனுப்புகிறார். அங்கே, அந்தப் பனிவரைச் சாரலின் அமைதியில், கௌசிகி நதி மூலத்தின் ஏகாந்தத்தில், கோபத்திற்கும், தாபத்திற்கும் இடமேது ?

# வேதாந்தப் போர்வை

## மாரீசன்

மார்கழிப் பனி. குளிர் நடுக்குகிறது. கம்பளிப் போர்வையின் அருமை இப்போது தெரிகிறது. அது மாத்திரமா? ஜன்னல் கதவுகளை அடைத்து, வாடைக் காற்றும் குளிரும் உள்ளே வர விடாமல் தடுக்கவும் வேண்டி இருக்கிறது. சில சமயம் அறைக்குள்ளே கணப்பு மூட்டிக் குளிர் காயக்கூட விரும்புகிறோம். பாட்டியோ, வெயிலிலே காலை நீட்டிக்கொண்டு உட்கார்ந்து விடுகிறாள். வெயில் மறைந்தால், போர்வை சகிதம் கணப்பின் கதகதப்பை நாடுகிறாள். இந்தப் பொல்லாத குளிரில் உடம்பு குன்றிப்போகிறது; பாவம், என்ன செய்வாள்?

ஆனால், மனத்தை வாட்டும் குளிர் இருக்கிறதே, பயம் என்ற குளிர், அது வந்தால்? அதைச் சமாளிக்க எந்த ஜன்னலை மூடுவது, எந்தக் கணப்பை மூட்டுவது, எந்தப் போர்வையைப் போர்த்திக்கொள்வது? பயம் என்ற குளிர் எத்தனையோ விதத்தில் வரலாம். அது வரு

கின்ற விதத்தைப் பொறுத்திருக்கிறது, அதைப் போக்க மனிதன் செய்யும் முயற்சி. பிரஞ்சு அரசன் பதினைந்தாம் லூயி என்பவன் மனத்தில் சாவு என்ற மூடுபனி குளிர் விதைத்தது. மனத்தின் ஜன்னல்களான புலன்களை அவன் வேறுபுறம் நோக்கித் திறந்து வைத்தான். வேட்டையாடுதல், மதுபானம், கேளிக்கை முதலியவற்றைக் கொண்டு மனத்திற்குக் கணப்பு மூட்டினன். சாவு என்ற சொல்லை அவன் காது கேட்க ஒருவரும் பேசக்கூடாது என்று கட்டளையிட்டான். அலட்சியம் என்ற போர்வையை இறுகப் போர்த்திக்கொண்டான். என்ன செய்தும் என்ன? சாவுதான் வென்றது. ஆனால், அரசன் லூயி புலன் இன்பம் என்ற கணப்பையும், அலட்சியம் என்ற போர்வையையும் கடைசி வரையில் விடவே இல்லை.

நிழலைக் கண்டு வெருளும் குழந்தை தாயின் மடியைப் போர்வையாக நாடுகிறது. எஜமான் கோபிப்பானே, வேலை போய்விடுமோ என்று பயப்படும் வேலைக்காரன் பொய்யைப் போர்வையாகப் பிரித்துத் தன் மனத்தை மூடிக்கொள்ளுகிருன். நோய்க்குப் பயந்தவனுக்கு மருந்தென்ற போர்வை. எதிர்காலத்தில் நம்பிக்கையில்லாதவனுக்கு ஜோஸ்யம் என்ற போர்வை. வறுமைக்குப் பயந்தவனுக்கு லோபம் என்ற போர்வை. இப்படியாகப் பயத்தால் தாக்குண்ட மனத்திற்கு எத்தனை எத்தனையோ போர்வைகள்! போர்வையின் தன்மை பயம் வருகின்ற விதத்தை மாத்திரம் அல்ல, அந்தந்த மனிதனுடைய இயல்பையும் பொறுத்திருக்கிறது. பயத்தைப் பொய்யால் சமாளிக்கிருன் ஒருவன். வீரத்தால் வீழ்த்துகிருன் இன்னொருவன். ஆகவே, பயம் என்ற ஒரு உணர்ச்சியைச் சோதனைக் கருவியாகக்கொண்டு, ஒருவனுடைய இயல்பை மதிப்பிட்டு விடலாம்.

விசுவாமித்திரன் யாகம் செய்யத் தொடங்கிய சித்தாசிரமத்தில் பயத்தை முதன் முதலில் உணர்ந்தவன் மாரீசன். தன்னுடைய தம்பி சுவாகுவோடும், வேறு பல அரக்கர்களோடும், முனிவனுடைய யாகத்தைக் குலைப்பதற்காக மாரீசன் வந்தான். வந்த இராக்ஷஸ சேனை

கார்கால மேகத்தைப்போல வனம் முழுதும் நிறைந்து அதிர்ந்தது. ஆனால், கணப்பொழுதில் இராமன் தூவிய அம்பு அரக்கர் கூட்டத்தைக் கலக்கியது; சுவாகுவைக் கொன்றது; ஓடிய அரக்கர்களைத் துரத்திச் சென்றது; அரக்கர்கள் தலையற்று விழுந்தார்கள். போர்க்களத்திலே கபந்தங்கள் துள்ளி ஆடின. பிணந்தின்னும் பேய்கள் 'அடாடா, என்ன விருந்து, என்ன விருந்து' என்று இராமனை வயிறாரப் புகழ்ந்தன. ஆகாச வீதியில் இராக்ஷஸர்களுக்குப் பதிலாகக் கழுகுக்கூட்டம் பந்தலைப் போல் பறந்தது. இந்தப் போர்க்களத்திலேதான் மாரீசன் பயம் என்பது என்ன என்பதை முதல் தடவையாக உணர்கிறான். இராமனுடைய அம்பு அவனைச் செந்தூக்காகத் தூக்கிக் கடலில் எறிந்துவிடுகிறது.

மாரீசன் சாதாரணமாகப் பயப்படக் கூடியவன் இல்லை. அவன் தாடகையின் மகன். தாடகையோ,

'மண்ணுருத்தெடுப்பினும் கடலை வாரினும்
விண்ணுருத்தெடுப்பினும் வேண்டிற் செய்திற்பாள்.'

பூமியைச் சுருட்டி விடுவாள்; கடலை வாரி விடுவாள். வானவெளியைத் தோண்டி எடுத்து விடுவாள். அவ்வளவு வலிமை பொருந்தியவள். அவள் குணமோ, அதற்கென்ன குறைவு, பாவம் அனைத்தும் ஒன்றாகத் திரண்டு ஒரு பெண் வடிவம் பெற்றதோ என்று சொல்லும்படி அது அமைந்திருந்தது. தாய்க்கு ஏற்ற மகன் மாரீசன். மாயையிலும், வஞ்சனையிலும், ஆற்றலிலும் தாயைவிட ஒருபடி மேலே அவனும் அவன் தம்பி சுவாகுவும் நின்றனர். அவர்களே நிர்ணயிக்க முடியாத அளவுக்குத் தீமையும், வலிமையும் பெற்றிருந்தனர்.

'மாயமும் வஞ்சமும் வரம்பில் ஆற்றலும்
தாயினும் பழகினர் தமக்கும் தேர்வொணாது'

அவர்கள் வளர்ந்தார்கள். இப்படிப்பட்ட மாரீசனையே இராமனுடைய அம்பு திகைக்க வைக்கிறது.

முன் ஒரே ஒரு தடவைதான் மாரீசன் ...ர்விட வலிமை பொருந்திய ஒருவனைச் சந்தித்

திருக்கிருன். தாயும், தம்பியும், தானுமாக அகத்தியர் ஆசிரமத்திற்குச் சென்று, அங்கு தன் கைவரிசையைக் காட்டினன் மாரீசன். கடலையெல்லாம் ஒரு கையாக மொண்டு பருகிய அந்த முனிவன்முன் இது செல்லுமா? நெருப்புக் கக்கும் கண்களால் இவர்களை நோக்கிய முனிவன் 'இயக்கர் குலத்திலே பிறந்த நீங்கள், இராக்ஷஸ குணம் படைத்து அழிப்பதையே தொழிலாகக் கொண்டுவிட்டீர்கள். இனி, இராக்ஷஸர்களாகவே ஆகி விடுங்கள்' என்று சபிக்கிருன். தன் வலிமையையும் எதிர்க்கும் சக்தியை அகத்தியனிடம் கண்டான் மாரீசன். ஆனல், அப்போது பயம் ஏற்படவில்லை. அகத்தியனை எதிர்ப்பதற்கு மார்க்கம் இல்லை என்று தெரிந்ததும் அந்த இடத்தைவிட்டு நழுவுகிருன். 'போகட்டும், அந்த மட்டுக்கும் இராக்ஷஸனுக இருக்கும்படி முனிவனுடைய சாபம் விதித்திருக்கிறது. நல்லதுதானே!' என்ற எண்ணத்தோடு சுமாலி என்ற அரக்கனை அண்டி, அவனேடு புதல்வன் என்று உறவு முறை கொண்டாடிக்கொண்டு வாழ்ந்து வருகிருன். தன் போக்கின்படியே இன்னும் தீவிரமாகச் செல்வதற்கு மாரீசனுக்கு வழி அமைத்தது முனிவன் கோபம். இதிலே அவனுக்கென்ன வருத்தம் இருக்கப்போகிறது?

ஆனல், இராமனுடைய அம்போ, மாரீசன் போக்கைத் தடைசெய்தது மாத்திரம் இல்லை, இனி அந்த வழியிலே போனல் என்ன நடக்கும் என்பதையும், சுவாகுவையும் மற்றைய அரக்கர்களையும் படுத்திய பாட்டினல் காட்டிவிட்டது. கடலிலே போய் விழுந்த மாரீசன், அதோடு பயத்திலும் விழுந்தான். இந்தப் பயம் அவன் நெஞ்சைவிட்டு அகலவே இல்லை.

பல நாட்களுக்குப் பின் மாரீசனை நாம் சந்திக்கும் போது நமக்கு அடையாளமே தெரியவில்லை. அவ்வளவு உருமாறி இருக்கிருன். காட்டின் நடுவிலே தனியிடத்தில் இருந்துகொண்டு தவக்கோலம் பூண்டு, இந்திரியங்களை அடக்கி நிற்பவனைப்போல நிற்கிருன் மாரீசன். இந்திரியங்கள் அடங்கினவோ என்னவோ, அவன் பயம் அடங்கவில்லை.

" பொருந்திய பயத்தன் சிந்தை பொருமுற்று வெருவுகின்றான்,'

மாமன் முறையை எண்ணி. அவனுடைய உதவியை நாடி இராவணன் வந்திருக்கிறான். அப்படி என்ன உதவி? வேறென்ன, இராமன் மனைவி சீதையை வஞ்சனையால் அபகரித்துச் செல்வதற்கு மாரீசனுடைய துணை வேண்டும் இராவணனுக்கு, அவ்வளவுதான். இதைக் கேட்டானோ இல்லையோ, மாரீசனுக்குக் குலை நடுக்கம் ஏற்பட்டுவிடுகிறது. 'இராமனா? ஐயோ, அவனா?

எம்பிக்கும் என் அன்னை தனக்கும் இறுதிக்கு ஓர்
அம்பு உய்க்கும் போர் வில்லி தனக்கும் அயல் நிற்கும்
தம்பிக்கும் என் ஆண்மை தவிர்ந்தேன் தளர்வுற்றே
கம்பிக்கும் என் நெஞ்சு அவன் என்றே கவல்கின்றேன்!'

என்று மிரள மிரள விழிக்கிறான். ஒதுங்கி வாழ முற்பட்ட மாரீசனுடைய தனி இடத்திற்கும் கரனும், விராதனும் மடிந்த செய்தி எட்டி இருக்கிறது. 'கரன் போனான்; கொடியவர்களுக்குள் விராதனை விடக்கொடுமையும் வலிமையும் உடையவர்கள் யார்? அந்த விராதனும் போனான்.

வெய்யார் யாரே வீர விராதன் துணை வெய்யோர்
ஐயோ போனான் அம்பொடும் உம்பர்க்கு அவன் என்றால்

இராமனுடைய அம்பை எதிர்த்து நிற்கக் கூடியவர் யார் இருக்கிறார்கள்?' என்று நெஞ்சு பதைபதைக்க இராவணனிடம் பேசுகிறான்.

அதோடு நிற்கவில்லை. தருமோபதேசம் வேறு தொடங்குகின்றான். 'உன் செல்வமெல்லாம் தவ வலிமையினால் உனக்குக் கிடைத்தது. தருமத்தினால் பெற்ற செல்வத்தை அதருமத்தினால் இழந்துவிடாதே.

அறத்தினாலே எய்தினை யன்றோ அது நீயும்
புறத்திறனாலே பின்னும் இழக்கப் புகுவாயோ ?

ஆமாம், அதருமமே அழிவிற்குப் பாதை. தம்பி அன்புடையவர்களது நாட்டைக் கவர்ந்தவர்

நீதிக்கு விரோதமாய்க் குடிகளை வருத்தி வரி விதித்த அரசர்களையும், மற்றொருவன் மனைவியைப் பலாத்கார மாய்த் தம் வசப்படுத்திக் கொண்டவர்களையும் தரும தேவதை தேய்த்துவிடும்.

கண்டகர் உய்ந்தார் எவர் ஐயா ?'

என்றெல்லாம் இராவணனுக்கு உபதேசம்செய்யத் தலைப் படுகிறான். அகத்திய ஆசிரமத்தில் தவறு இழைத்து, இராக்ஷஸனாகி, விசுவாமித்திரனுடைய வேள்வியை நாசமாக்கப் படைதிரட்டி வந்த மாரீசனா இப்படிப் பேசுகிறான் என்று ஆச்சரியப்படுகிறோம். அவன் மேலும் சொல்வது நமது வியப்பை வளர்க்கிறது. 'கேள், இராவணா! உலகத்திலே நிலையாக உள்ளது ஒன்றுமில்லை. நிலையாமை ஒன்றுதான் சால நிலை பெற்றது. இந்த உண்மையை உணர்ந்திருக்கிறோம். ஆகவே, உடம்பு பற்றிய கேவலமான மிருக இச்சைகளுக்கு இடந்தராதே.

நின்றும் சென்றும் வாழ்வன யாவும் நிலையாவால்
போன்றும் என்றும் மெய்ம்மை உணர்ந்தோம் புலையாடற்கு
ஒன்று உன்னுய்............'

என்று மாரீசன் பேசும்போது மூக்கின்பேரில் விரலை வைத்து அதிசயிக்கிறோம்.

இந்த மாரீசன் பழுத்த வேதாந்தியாக அல்லவா மாறிவிட்டான் ? இராமனுடைய அம்பு இவன் பழைய இயல்பையே மாற்றிவிட்டதோ ? அல்லது பயந்து நடுங்கி இந்த வேதாந்தப் போர்வையைப் போர்த்திக் கொண்டிருக்கிறானோ ?

## மானாக வந்த மாயாவி

'வாழ்வா ? அது நீர்க்கோலம். இதை ஏதோ சாசுவதமாக எண்ணி, ஆசைப் பேய்க்கு இடம் தருவது பேதைமை' என்று இராவணனிடம் பேசும் மாரீசன் பழுத்த வேதாந்தியாகத் தோன்றுகிறான். ஆனால், அவன் வேதாந்தியா ? இதுதான் கேள்வி.

ஸர்க்கஸ் புலியின் வாய்க்குள்ளே தன் தலையை விடுகின்ற ஆட்டை நாம் பார்த்திருக்கின்றோம். ஆடு அருகில் இருப்பதையோ, ருசியான அதன் தலை தன் வாய்க்குள் இருப்பதையோ லட்சியம் செய்யாமல் யோகா சானத்தில் வீற்றிருக்கும் புலியையும் நாம் கண்டதுண்டு. காண்பதற்குக் காசு கொடுத்தும் போனதுண்டு. ஆனால், புலியின் இயல்பு மாறிவிட்டது என்று எண்ணியதுண்டா? இல்லை. சுத்த சைவ போஜன சம்பிரதாயத்தைத் திருவாளர் புலியார் ஏற்றுக்கொண்டு விட்டார் என்றோ, மரக்கறியைத் தவிர வேறெதையும் மனத்தாலும் தொட மாட்டார் என்றோ முடிவு கட்டுகிறோமா? கிடையாது. நமக்குத் தெரியும்—ஸர்க்கஸ் மாஸ்டரின் ஈட்டியும், சவுக்கும், புலியைச் சாதுவாகக் காட்டுகின்றன. அந்தச் சவுக்கின் சொடுக்கு காதில் விழுகின்ற வரையில், புலி ஆட்டைத் தொடாது. சவுக்கு மறைந்தால், புலி தன்னுடைய வேஷத்தைக் கலைத்துவிட்டு, பல்லையும் நகத்தையும் தீட்டிக்கொண்டு வேட்டைக்குப் புறப்பட்டுவிடும். புலியின் இயல்பு மாறவில்லை. அதைச் சவுக்கடி கட்டுப்படுத்தி வைத்திருக்கிறது.

மாரீசன் இந்த ஸர்க்கஸ் புலியைப் போலத்தான் இருக்கிறான். இராமபாணத்தின் ஆற்றல் அவனைக் கட்டுப்படுத்தி வைத்திருக்கிறது. ஆனால், ஒரு வேடிக்கை. ஸர்க்கஸ் புலி தான் மாறிவிட்டதாகவோ, அஹிம்ஸா தர்மத்தின் பெருமையை உணர்ந்து கடைப்பிடிப்பதாகவோ, சொல்லிக்கொள்வதில்லை. மனிதன் புலியை விட மேம்பட்டவன் அல்லவா? தவவேடம் புனைந்து, கிருஷ்ணாஜினம், சடைமுடி, ஜபமாலை இவற்றிற்குள் அவனால்தான் தன் கொடுமையை மறைக்க முடியும். இதைச் செய்கிறான் மாரீசன். ஏன்?

சித்தாசிரமத்தில் தான் பட்ட பாட்டை மாரீசனால் மறக்க முடியவில்லை. பிறப்பினால் அவன் யக்ஷன். இராக்ஷஸத் தன்மைக்கு அடிமையாகி, அகத்தியருடைய சாபத்தால் இராக்ஷஸ வடிவும் பெற்றவன். தன் கொடுமைக்கு இராமபாணம் இடமில்லாமல் செய்துவிட்டது;

இது அவனுக்கு நன்ருகத் தெரியும். ஆனல், இதை நேரடியாக ஒப்புக்கொள்வதற்கு அவன் கூசுகிருன். கையால் ஆகாதவன் என்று தன்னை அப்பட்டமாகத் தெரிவித்துக்கொள்ள யார்தான் விரும்புவார்கள்? ஆகவே, தானகவே கொடுமையை விட்டுவிட்டதாகவும், தனக்கு அது தேவை இல்லாதது போலவும் பாவனை செய்கிருன். இந்த வேஷத்திஞல் இராவணனை மயக்கி விட்டால், இராமனை மறுபடியும் எதிர்க்கும் இக்கட்டான நிலையிலிருந்து தப்பலாம் என்றும் எண்ணுகிருன். பயம், அதிலே நடுங்குகின்ற உள்ளம்; அந்த உள்ளத்திற்குத் தன்னம்பிக்கை ஊட்டுவதற்காக வேதாந்தப் பேச்சும் தவக்கோலமும். உள்ளத்தின் அடித்தலத்திலே மட்டும் தீமையும், சுயநலமும் இவற்றின் சேர்க்கையே மாரீசன்.

இருந்தாலும், இராவணனும் இராக்ஷஸ குலமும் நிர் மூலமாகிவிடக் கூடாதே என்ற கவலை அவனுக்கு இருக் கிறது. இதனல் அவனுக்குக் கஷ்டமில்லை. கடப் பாறையைக் கொண்டு பெரிய கல்லைப் புரட்டுகிருேமே, அதைப் போலத் தன்னுடைய ஹிதோபதேசத்தால் இராவணனுடைய மலைபோன்ற காமத்தைப் புரட்டிவிட லாம் என்பது மாரீசனுடைய நினைவு. அப்படிச் செய்து விட்டால் தானும் இராமபாணத்திற்குத் தப்பலாம் அல்லவா? இராவணனுடைய மனத்தை மாற்ற மிகுந்த திறமையோடு முயன்று பார்க்கிருன். பலிக்கவில்லை. மாரீசனுடைய வார்த்தைகளில் மற்ருென்றையும் இராவணன் காதில் வாங்கிக்கொள்ளவில்லை. அவன் இராமனைப் புகழ்ந்ததையும், 'உய்வார் யாரே நம்மின்' என்று கலங்கியதையும் மட்டுமே இராவணன் கவனிக் கிருன். 'உய்யமாட்டோமா? இராமனை எதிர்த்தால் அழிந்துபோவோமா? யாரிடம் பேசுகிருய் என்பது நினை வில் இல்லையோ? சிவபெருமாஞேடு கயிலையங் கிரியை எடுத்துப் பந்தாடிய என்னுடைய தோள்வலிமை ஒரு மனிதனுக்குச்' சளைத்து விடுமென்ரு சொல்லுகிருய்?' என்று கேட்கும் இராவணனுக்குக் கண்ணிலே பொறி பறக்கிறது; புருவம் துடிக்கிறது:

'கங்கை சடை வைத்தவனொடும் கயிலை வெற்பு ஓர்
அங்கையின் எடுத்த எனது ஆண்தொழில் மணித்தோள்
இங்கு ஓர் மனிதற்கு எளிய என்றனை எனத் தன்
வெங்கண் எரியப் புருவம் மீதுற விடைத்தான்.'

பார்த்தான் மாரீசன். தன் எண்ணம் நிறைவேற வில்லையே என்ற ஏமாற்றந்தான் அவனுக்கு. இருந்தாலும் போட்ட வேஷத்தை விட மனமில்லையோ என்னவோ, இராவணனுடைய கோபத்தையும் பொருட் படுத்தாதவன் போலப் பேசுகிறான்: 'நீ என்னைக் கோபிக்கவில்லை. உன்னையும் உன் குலத்தையுமே கோபித்து நிற்கிறாய்.

உன்னை முனிவுற்று உன குலத்தை முனிவுற்றாய்
என்னை முனிவுற்றிலை இது என் ?

கைலாச கிரியை எடுத்ததைப் பற்றிப் பேசுகிறாய். அன்று சிவபெருமான் வளைத்த மலை போன்ற வில்லை இராமன் ஒடித்தது கேள்விப்பட்டதில்லையா ? இராமனைக் கேவலம் மனிதன் என்று நினைத்து ஏமாறாதே. அவன் போர் ஆரம்பிக்குமுன், அவனுடைய பகைவர்களின் உயிர் கொள்ளைபடும். சீதையைக் கேவலம் பெண்ணாக எண்ணிக் கேடு சூழாதே.

பேதை மதியால் இஃது ஓர் பெண்ணுருவம் என்றாய்
சீதை உருவோ நிருதர் தீவினையது அன்றோ ?

காம விஷம் தலைக்கேறி, என்ன சொல்லுகிறோம் என்ற உணர்வில்லாமல் ஏதேதோ பேசுகிறாய். இது அழிவிற்குக் காரணம். வேண்டாம். இதை விட்டுவிடு. மாமன் என்ற முறையிலும், உன் குலத்தில் உனக்கு முன் தோன்றியவன் என்ற காரணத்தாலும் நல்லதைச் சொல்கிறேன். அப்பா, சொல்வதைக் கேள், விட்டுவிடு. இந்தத் தீய தொழிலை விட்டுவிடு.

வேதனை செய் காமவிடம் மேலிட மெலிந்தாய்
நீது உரை செய்தாய் இனைய செய்கை சிதைவன்றோ
மாதுலனும் ஆய் மரபின் முந்தையுற வந்தேன்
ஈது உரை செய்தேன் இதனை எந்தை தவிர்'

என்று மன்றாடுகிறான் மாரீசன்.

இவ்வளவும் வேஷமா? வார்த்தைகளில் உண்மை துடிக்கிறதே? எவ்வளவுதான் திறமையோடு நடித்தாலும், தன் சொந்த இயல்பை எங்கேயாவது துளி காட்டி விடாமல் இருக்க முடியுமா? இதைத்தான் கம்பரும் சொல்கிறார். 'இந்த மாரீசன் தீயகுணங்கள் உடையவன் தான். இருந்தாலும் வெறும் தீமைப் பிண்டமாக ஒருவனும் அமைய முடியாது. தீமையின் இருள் நடுவிலே, சிறிதளவாவது நன்மையின் ஒளி தோன்ருமலா போய் விடும்? அது இங்கே தோன்றுகிறது' என்று குறிப்பிடுகிறார். இராவணன் கோபித்தான் அல்லவா? மறுபடியும் அவனுக்குத் தருமோபதேசம் செய்தால் பின்னும் அதிகமாகக் கோபிப்பான் என்பது மாரீசனுக்குத் தெரியும். தெரிந்தும் அவனுக்கு நீதியை எடுத்துச் சொல்லும் தன் பொறுப்பைக் கைவிட மாரீசனுக்கு முடியவில்லையாம்!

'தன்னை முனிவுற்ற தறுகண் தகவு இலானை
பின்னை முனிவுற்றிடும் எனத் தவிர்தல் பேணுது

மாரீசன் பேசினன்' என்று கம்பர் வருணிக்கிறார். தன்னலமும், பயமும் நிறைந்த மாரீசனிடத்திலும் குலப் பெருமையைக் காக்க வேண்டும் என்ற உணர்ச்சியும், தன்னை மறந்து பிறர் நன்மையைப் பற்றி எண்ணும் தீரமும் கண நேரத்திற்குப் பளிச்சிடுகின்றன. அந்த ஒளியில் மாரீசனுடைய இதயத்தை மாத்திரம் இல்லை, மனித இயல்பை அளந்து தெளிந்த மகா கவி ஒருவனுடைய பெருமையையும் பார்த்துவிடுகின்றோம்.

ஆனல், கண நேரத்திற்குத்தான் இந்தப் பிரகாசம் மாரீசனுடைய பயத்தையும் பொய்த் தவக்கோலத்தையும் விஞ்சி நிற்கிறது. அடுத்த கணம் இராவணன் சீறுகிருன். மாரீசன் வழக்கமான மாரீசனைக் குறுகி விடுகிருன். அவன் உள்ளத்திலே பழைய பயம் சுழல்கிறது. அதோடு 'உயிர்வேண்டுமானல் என் கருத்தின் படி நட' என்று அதட்டிய இராவணன் குரலும் அதிர்கிறது. இராமபாணம் ஒருபுறம், இராவணன் வாள் மறுபுறம்; எங்கே திரும்புவான் மாரீசன்? எல்லாத் திசையி

லிருந்தும் வீசுகிறது பயப்புயல். இப்போது எப்படி இவன் சாய்கிருன் என்பதைக் கொண்டுதான் இவனுடைய பேச்சையும், வேஷத்தையும் கடந்து இவனுடைய உண்மையான தன்மையைக் காணப்போகிருேம். ஆமாம், கவிஞருடைய உதவியை முன்னிட்டுத் தான்.

பயத்திலே விளைந்தது மாரீசனுடைய விரக்தி ஆனல், அது உண்மையான விரக்தியானல் அந்தப் பயத்தையே—பயம் எல்லாவற்றையுமே—வென்றிருக்க வேண்டும். வறுமையையும், நோயையும், சாவையும் கண்டு மனம் சலித்துத்தான் புத்தன் தன் மனைவியையும், மகனையும் கைவிட்டு ஞானத்தைத் தேடி ஓடினன். ஞானம் கிடைத்ததும், சலிப்பெல்லாம் மறைந்தது. உலக வாழ்க்கையின் எந்த வேதனையும் அவனைத் தொட வில்லை.மாரீசன் பேசுகின்ற தருமோபதேசம் உண்மையிலேயே அவனல் உணர்ந்த ஒன்ருனல், அவனுக்குப் பயமேது? இராமபாணத்தைப் பற்றிக் கவலைப்படுவானேன்? இராவணனுடைய மந்திரவாளை எண்ணித் தான் கலங்குவானேன்? இப்படிச் செய்வதிலிருந்தே அவனுடைய வேதாந்தம் வெறும் போர்வை என்பது தெரிகிறது.இராவணனுடைய மிரட்டல் இந்தப் போர்வையைக் களைந்ததும், மாரீசனுடைய தீமை—பயத்திலே நடுங்கித் தன்னை எப்படியாவது காத்துக்கொள்ளத் துடிக்கும் அவன் கொடூரம்—தன் சுயரூபத்தோடு தலையை வெளியே நீட்டுகிறது.

அதன் முதல் காரியம் சூழ்ச்சி. இராவணன் தன்னை விடமாட்டான் என்று கண்டதும், அவனை எப்படியாவது தொலைத்துவிடத் திட்டம் போடுகிருன் மாரீசன். இராவணனுடைய செருக்கும், அளவுகடந்த தன்னம்பிக்கையும் மாரீசனுக்குத் தெரியும். இவற்றையே கருவியாகக் கொண்டு, இராமபாணத்திற்கு இராவணனை இரையாக்கித் தன்னைத் தப்புவித்துக்கொள்ள முயல்கிருன் அவன். சீதையை வஞ்சனையால் கவரவேண்டும் என்று இராவணன் சொன்னதும், 'வஞ்சனையா? அது உன்

பெருமைக்கு அழகாகுமா? வலிமையினால் அல்லவா அவளை நீ பெறவேண்டும்? போ, படையோடு சென்று, இராமனைப் போரில் வீழ்த்திச் சீதையைப் பெற்று, உன் வீரத்தின் பெருமையை வளர்ப்பதல்லவா உன் பராக்கிர மத்திற்கு உகந்த காரியம்?

> திறத்துழி யன்றி வஞ்சித்து எய்துதல் சிறுமைத்தாகும்
> அறத்துளது ஒக்கும் அன்றே அமர்த்தலை வென்றுகொண்டுன்
> மறத்துறை வளர்த்தி'

என்கிறான் மாரீசன். போரிலே இறங்கி வெற்றிபெற்றுச் சீதையைக் கொண்டுவந்தால் அது 'அறத்துளது ஒக்கும்'—தருமத்திற்கு ஒத்ததாக இருக்கும்—என்று புதிய தருமம் ஒன்றை ஸ்தாபிக்க முயல்கிறான், முனிவனுருவத்திலே பதுங்கிய இந்த அரக்கன்.

இந்தச் சூழ்ச்சியும் பலிக்கவில்லை.'இராமன் போரிலே இறந்தால் ஒரு சமயம் சீதையும் உயிர்விட்டு விடுவாள். அதற்கு என்ன செய்வது?'என்று இராவணன் எழுப்பும் ஆக்ஷேபணைக்கு மாரீசனுடைய பதறும் அறிவு சமாதானம் தேடித் தோல்வி யுறுகிறது. இப்போதாவது, 'சாவுதான் வந்துவிட்டதே, தருமத்தின் பக்கத்தில் நின்று அதற்காக உயிர் விடுவோம்' என்று மாரீசனுக்குத் தோன்றுகிறதா? அதுதான் இல்லை. எப்படித் தோன்றும்? அவனுடைய வேதாந்தம் எல்லாம் போர்வைதானே?அதருமந்தானே அவனுடைய தருமம்?

ஆகவே, பொன்மான் வேஷம் பூண்டு, விதியைக் குறைகூறிக்கொண்டு சாவை நோக்கிச் செல்கிறான் மாரீசன். அவனுடைய தவக்கோலம் ஓர் ஏமாற்று; அவன் மான் வடிவமும் ஒரு மாயம், ஆனால், ஒன்று; முதல் வேஷத்தில் பயத்தின் காரணத்தால், அவன் ராக்ஷஸ சுபாவம் தன் போக்கின்படி பூரணமாக இயங்குவதற்கு முடியாமல் போயிற்று. அந்த வேஷமே கொடுமை வெளிப்படுவதற்கும் சிறிது தடையாக றது. இப்போதும் பயமே மான் வேஷத்திற்குக் காரணமாய் அமைந்தது. ஆனால், இந்தப் பயம் கொடுமையைத் தும்பு தெறித்து விட்டுவிடுகிறது. இதோடு அவனுடைய

பாதகமும் சேர்ந்துகொண்டது. மான் வடிவம் தன்னை மறைத்துக்கொண்டது கூட, தன் இயற்கையின் படி நடப்பதற்காகவே. ஆகவே, துள்ளித் துள்ளி, காற்றையும் மனத்தையும்விட வேகமாய் மான் பாய்ந்து சென்றது என்றால், தங்குதடையின்றி அழிவை நோக்கி ஓடும் பாபத்தின் குதூகலத்தைத்தான் மானின் விசித்திர கதியில் காண்கிறோம். அதன் முடிவிலும் இதுவே தென்படுகிறது. சாகும்போது கூடச் சூழ்ச்சி ஒன்றைச் செய்து முடித்துவிட்டே, மானும், அதன் உள்ளிருந்து புறப்பட்டு விழுந்த மாரீசனுடைய பாதகமும் மறைகின்றன. எட்டுத் திசையிலும், அதற்கப்பாலும் சென்று முட்டிய உரத்த குரலில்—இராமனுடைய குரல்போல் அமைந்த ஒரு குரலில்—வாய் விட்டுவிட்டு மடிகிறான் மாரீசன். மாரீசனுடைய கடைசி மூச்சில் கூடப் பொய்யும் வஞ்சமும் வெளிப்படுகின்றன.

மானாக வந்த மாரீசன் ஒரு மாயாவி. அவன் தவக்கோலம் பூண்டதும் மாயமே. ஆனால், அது ஒருவரையும் ஏமாற்றப் பயன்படவில்லை. பயம் என்னும் குளிரில் விறைத்த அவனுடைய நெஞ்சிற்குச் சிறிது கதகதப்பைத் தந்தது. அவ்வளவுதான். மானாகி வந்த மாயமோ, சீதையையும் இராமனையும் பிரித்து வைத்துத் தன்னையே அழித்துக் கொண்டது. இராவண வதத்திற்கும் அடிகோலியது. செத்தும் கெடுக்கும் பெருமை தீமைக்குத்தான் உண்டு. ஆனால், முடிவிலே, மாரீசன் கெடுத்தது இராவணனைத்தான். தன் நஞ்சையே விழுங்கிச் சாகும் பாம்பைப் போல, இராவணன் என்ற தீமை மாரீசன் மூலமாகத்தான் அழிவைத் தேடிக்கொண்டது. இந்த நஞ்சின் வடிவம் மாரீசன்.

# அபூத பயங்கரம்

## விராதன்

மீன் ஒன்று சொர்க்கம் எப்படி இருக்கும் என்ற சிந்தனையில் இறங்கியதாம். ஆழமான மடு; அடியிலே கொஞ்சம் சேறு, படுத்துப் புரளுவதற்கு ; கொஞ்சம் மணல், நாலைந்து சிறு பாறைகள்; அவற்றின் இடுக்கிலே மெத்தென்ற கடற்பாசி; வர்ணக்காடாய், கோரைப் புற்களின் அடிப் பாகம், வாளால் சமைந்த கோட்டை யாக ஒளிந்து கொள்வதற்கு; தேக்கமும் இல்லாமல் படு வேக ஓட்டமும் இல்லாமல் மெல்லச் சுழலும் தண்ணீர்; அடியிலே கலங்கல், மேலே தெளிவு ; தண்ணீரின் ஒரு பகுதி ஒளிமயம், மற்றொரு பகுதி இருட் செறிவு, இடை யிலே குளிர்ச்சியான மங்கல். சொர்க்கம் இப்படித்தான் இருக்கும் என்று மீன் நினைத்ததாம். உடனே அதற்கு ஞாபகம் வந்தது. 'அடடே! மறந்து போய்விட்டேனே, சொர்க்கம் என்றால் அங்கே அருமையான உணவு ஏரான மாய் இராதா ? கட்டாயம் இருக்கும். நான் விழுங்கு வதற்குச் சிறு பூச்சிகளும்,புழுக்களும் கடற்பாசிக் கற்பகச் சோலையில் எங்கும் குவியல் குவியலாகக் கிடைக்கும்' என்று இன்பக் கனவில் ஆழ்ந்தது.'ஆமாம்; பூச்சியும் புழுவும் மட்டுமா? என் வாய்க்கு அளவாகச் சிறு மீன்

களும் நிறைய அகப்படும்' என்று சொல்லிக்கொண்டே திரும்பியது. அப்போது பார்த்தது, பெரிய மீன் ஒன்று பிளந்த வாயோடு தன்னை நோக்கி வருவதை. உடனே ஓட்டம் பிடித்தது. ஓடும்போதே பளிச்சென்று அதன் மனத்தில் ஞானம் உதித்தது. 'சொர்க்கத்தில், பெரிய மீன், நம்மைவிடப் பெரிய மீன் இராது'என்று சொல்லிக் கொண்டே தப்புவதற்கு வழிதேடித் தத்தளித்ததாம் சொர்க்க தர்சனம் தேடிய மீன்.

'மீனாவது,சொர்க்கத்தைப் பற்றித் தத்துவ விசாரணை செய்வதாவது, யாரிடம் ஐயா, இந்தப் புளுகு மூட்டையை அவிழ்க்கிறீர்?' என்று கேட்கிறார் யதார்த்த தாஸர். புளுகுதான், ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால். குற்றவாளி நான் இல்லை, ஒரு மேல்நாட்டுக் கவிஞன். அவனுடைய கற்பனையிலே உதித்தது இந்த மீன் கதை. கற்பனையே யானாலும், பாரதி சொல்வதைப் போல, வேதாந்தமாக விரித்துப் பொருளுரைக்க இடமிருக்கிறது. பாருங்களேன், நாம் செய்வதைத்தானே இந்த மீனும் செய்கிறது? இன்பத்தை நாடித் துடிக்கிறோம். சிறிதளவு கிடைத்து விட்டால் அந்தத் தித்திப்பில் நொட்டை யிட்டுக் கொண்டு கூத்தாடுகிறோம். பிறகு துன்பம் வருகிறது, வாயை அகல விரித்து நம்மை விழுங்கு வதற்கு. ஓட்டம் பிடிக்கிறோம். எங்கேயாவது உட் கார்ந்து கொண்டு இன்ப துன்ப அட்டவணை ஒன்று தயார் செய்கிறோம். இன்பங்களை, அதாவது நாம் இன் பம் என்று நினைப்பவற்றை,ஒன்றாகத் தொகுத்து நமது கற்பனையால் பெருக்கி அந்தத் தொகைக்குச் சொர்க்கம் என்று பெயரிடுகிறோம். இதற்குள் துன்பம் ஒன்று வந்து சாடுகிறது. அந்த அதிர்ச்சியில் வேதனைப் பள்ளம் ஒன்றைச் சிருஷ்டி செய்து அதற்கு நரகம் என்று நாம கரணம் செய்கிறோம்.

ஒன்று தெரிகிறது. நம்முடைய நிழலில் இருந்து நாம் தப்பியோட முடியாது. சொர்க்கமோ, நரகமோ, நாம் அவற்றைப் பற்றி எண்ணும்போது, அங்கேயும் இந்த மண்ணுலகத்தின் நிழல்தான் விழுகிறது. மீனைப் பற்றிப் பேச வந்தானே அந்த ஆங்கிலக் கவிஞன்,

மீனைப் பற்றியா பேசினான்? தண்ணீரும் சேறும், பாறையும் கோரைப்புல்லும் மீனின் உலகந்தான். ஆனால், அந்த மீனின் உள்ளத்திலே—அதற்கு உள்ளம் இருக்கிறது என்பதும் நம்முடைய நினைவுதானே!—அதன் உள்ளத்திலே செதிலைப் போர்த்திக் கொண்டு மனிதன் தான் உட்கார்ந்திருக்கிறான்.

இதை எதற்காகச் சொல்ல வந்தேன் என்றால், கம்பருடைய இராமாயணத்தில் நாம் சந்திக்கும் பத்துத் தலை இராவணனும், பம்பரக் கயிறுபோல வாலைச்சுழற்றும் அனுமனும், மற்றைய வானரர்களும், அரக்கர்களும், வெளிப்பார்வைக்கு நம்மைப்போல் இல்லாவிட்டாலும், உண்மையில் மனித சுபாவம் என்ற மண்ணினால் செய்யப்பட்ட பாண்டங்களே. பத்துத்தலையோ இருபது தோள்களோ, உள்ளே துடிப்பது மனித இதயம். கூனல் உடம்போ குறையாத வாலோ, உள்ளே சுடர்விடுவது மனிதப் பண்பு.

அது மாத்திரமில்லை. தோற்றத்தில் நம்மைப்போல் இல்லாமல் வேறுபட்டு நிற்கும் காவியப் பாத்திரங்களில் நாம் காணும் விசித்திரங்கள்கூட, நம்முடைய மனித அனுபவத்திலிருந்து பிறந்தவை. மனிதனுடைய ஒரு தலைதான் இராவணனுடைய பத்துத்தலை ஆயிற்று. நமது இரண்டு கைகளே 'மகரிகை வயிர குண்டலம் அலம்பும்' இருபது தோள்கள் ஆயின. கருப்பேந்திரம், யாளி இவை போன்ற மிருகங்கள் காவியங்களில் இடம் பெறுகின்றனவே, அவையும் நம்முடைய கண்முன்னே நடமாடும் மிருகங்களை வைத்துக் கொண்டு மனிதனுடைய கற்பனை சிருஷ்டி செய்த நிழல்களே. இப்படி மனித அனுபவத்தின் பல்வேறு அம்சங்களைக் கூட்டியோ குறைத்தோ விதவிதமாகச் சேர்த்துக் காவிய அரங்கிலே உலாவ விடுகிறான் கவிஞன்.

தாயின் மடியிலே விளையாடும் குழந்தை, அந்தத் தாயின் நிழல் சுவரிலே விழுவதைக் கண்டு பயந்து வீறிட்டழுகிறது, நாம் பார்த்திருக்கிறோம். நம்முடைய மனத்தைச் சுவர் என்று வைத்துக் கொள்ளுங்கள்.

கவிஞனுடைய கற்பனை என்பது விளக்கு. சுவருக்கும் விளக்குக்கும் இடையிலே மனித அனுபவம் என்று நாம் குறிப்பிடுவது நிற்கிறது. விளக்கு இருக்கும் இடம், அதன் ஒளி விழுகின்ற கோணம், இடையிலே உள்ள பொருளின் எந்தப் பகுதியின் மேல் ஒளிவிழுகிறது— இவற்றையெல்லாம் பொறுத்திருக்கிறது சுவரில் விழும் நிழலின் தன்மையும் வடிவமும். சில சமயங்களில் நிழல் பூதாகாரமாக விழும். மனித அனுபவத்தின் நிழல்தான் என்று சொல்ல முடியாத அளவுக்கு அது விகற்பம் அடைந்து, நமது மனத்தின் விசாலம் முழுவதையும் அடைத்துக் கொண்டு நிற்கும். இத்தகைய பயங்கர நிழல்கள் இரண்டைக் கம்பனுடைய காவியத்தில் காண் கிறோம். ஒன்றின் பெயர் விராதன்; மற்றொன்றின் பெயர் கவந்தன்.

தண்டக வனத்தின் இருட்டிலே தோன்றுகிறான் விராதன். முதன் முதலில் பிரும்மாண்டமான சூல மொன்று நமது கண்ணில் படுகிறது. அதன் மூன்று தலைகளிலும் மதயானைகளும், சிங்கங்களும், யாளிகளும் நெருக்கமாகச் செருகப்பட் டிருக்கின்றன. இந்தச் சூலத்தை அலட்சியமாகத் தாங்கி வருகிறது விராதன் என்ற மலை. அதன் நடையின் வேகத்தில் காடே அதிர் கிறது. பெரிய மலைகளுங்கூட அந்த அதிர்ச்சி தாங்க மாட்டாமல் 'பஞ்சுபட்டது' படுகின்றன. தீயைப்போன்ற தலைமயிர். அனல் பொழியும் கண்கள்; குகைபோன்ற காதுகள்; உடம்பு முழுவதும் இரத்தக் களபம்; தேவர் களின் விமானங்களையும் நவக்கிரகங்களையும், நட்சத்திரங் களையும் மாற்றிமாற்றித் தொடுக்கப்பட்டுள்ள மலைப்பாம்பு மாலை; போதாததற்கு வீரர்களுடைய சடலங்கள், குதிரை கள், .தேர்கள்,புலிகள் - இவையும் பாம்பு மாலையில் கோக் கப்பட்ட மணிகள்;மார்பிலும்,சூலத்திலும் உள்ள மாமிசப் பிண்டங்களை மென்று ஓயாமல்அசைபோடுகின்ற வாய்— இதுதான் விராதன். சாதாரணமாக மனிதர்களிடம் காணும் உடல் வலிமை கேவலம் மிருகபலமாக மாறி, விராதன் என்ற வடிவம் பெறுகிறது. மாமிச பக்ஷிணி களிடத்திலே இயற்கையாகக் காணப்படும் கொலை

உணர்ச்சியின் எல்லை நிலமாகவும் விராதன் நிற்கிறான். கொலை செய்கிறோம் என்ற உணர்ச்சி மிருகத்திற்கு இருப்பதில்லை. ஏதோ பசி, அது காரணமாகக் கொலையில் ஈடுபடுகிறது, அவ்வளவுதான். விராதன் நிலையும் இதுவே. அவன் பசி 'விளியாத பசி'; அதற்குச் சாவே இல்லை. ஆகவே, விராதனைச் சுற்றியுள்ள உயிர்களெல்லாம் சாகின்றன.

இப்படியெல்லாம் பயத்தை விளைக்கின்ற பல பொருள்கள் ஒன்று சேர்ந்து விராதனுடைய பயங்கர ஆகிருதியைப் பெருக்கிக் காட்டுகின்றன. இருந்தாலும் போதுமென்று தோன்றவில்லை கவிஞருக்கு. நம்முடைய மனத்தை விராதனைவிட்டு, யுகசந்தி ஒன்றுக்குத் திருப்புகிறார். துவாபரயுகம் முடிந்து கலியுகம் தொடங்குகிறது. ஒரே இருட்டு; கையினால் பிடித்து விடலாம் என்று எண்ணும்படி, விழுதுவிட்டுத் தழைக்கின்ற அந்தகாரம். அந்த இருட்டிலே கொடுமை என்பது புழுங்கி எழுகிறது பாதகம் என்ற பாம்பு நெருப்பும் விஷமும் கக்கி நிமிர்கிறது. இவற்றையே பரிவாரங்களாகக் கொண்டு கலி புருஷன் பவனி வருகிறான்.

'தங்குதிண்கரிய காளிமை தழைந்து தவழப்
பொங்குவெங் கொடுமை என்பது புழுங்கி எழமா
மங்குபாதகம் விடல் கனல் வயங்கி நிமிரக்
கங்கு பூசிவரு கலிகாலம்.'

இப்படிப் பேசுகிறார் கம்பர். எத்தனையோ பழைய இலக்கியங்களின் மூலமாகவும், கதைகளின் மூலமாகவும் நாம் கலிகாலத்தைப் பற்றிப் பெற்றிருக்கின்ற கருத்துக்கள் எல்லாம் ஒன்றாகத் திரண்டு ஒரே கொடூரக் காடாய் மண்டிவிடுகின்றன. அங்கே எல்லையில்லாத இருட்டும், கொடுமையும், பாதகமும் பெருகுவதைக் கண்டு நாம் மிரண்டு நிற்கும்போது 'இதுதான் விராதன்' என்கிறார் கவிஞர். விராதன் என்ற வடிவம் வரம்பற்ற பயங்கரமாய் நமது கற்பனை முழுவதையும் நிறைத்துக் கொள்ளுகிறது.

விராதனிடத்திலே காணப்படும் மிருக பலமும் குரூரமும் மனித அனுபவத்தின் ஒரு சில பகுதிகளின்

விசுவரூபமே. மற்றைய பண்புகள் ஒன்றும் இல்லாமல் அவை தனித்து நிற்கின்றன. அது மாத்திரம் இல்லை, மாமிசத்திலும், இரத்தத்திலும் புரளும் விகாரமான உடம் பாகவும் அவை பரிணமிக்கின்றன. இதனால்தான் விராதன் பிரும்மாண்டமான காட்டு மிருகமாகத் தோன்று கிறான். இவனுக்கும் ஒரு சிறிது மனிதத்துவம் தர முயல்கிறார் கம்பர். இந்த விலங்கின் பேரிலும் அவருக்குச் சிறிது பரிவு ஏற்பட்டிருக்கிறது. என்ன இருந்தாலும் அவர் பெற்ற குழந்தையல்லவா ?

இராமன், லக்ஷ்மணன், சீதை மூவரையும் கண்ட வுடனே 'நில்லுங்கள் நில்லுங்கள்' என்று இந்த மிருகம் கூச்சலிடுகிறது. ஆம்; பேசுகிறது; மறுகணம் சீதையைத் தூக்கிக்கொண்டு ஓடுகிறது. 'எங்கே ஓடு கிறாய்? திரும்பிவிடு' என்று எச்சரித்த வண்ணம் இராம லக்ஷ்மணர்கள் தோளிலிருந்து வில்லையும் அம்பையும் கைக்கு மாற்றி யுத்த சன்னத்தராகிறார்கள். அப்போது அந்த மிருகம் மறுபடியும் பேசுகிறது:

'ஆதி நான் முகன் வரத்தில் எனதாவி அகலேன்
ஏதியாவது மின்றி உலகியாவும் இகலிற்
சாதியாதனவுமில்லை.

நான்முகன் வரத்தின் பலம் எனக்கு இருக்கிறது. என் உயிர் நீங்காது. இந்த உலகம் முழுதும் என்னை எதிர்த்துப் போர் செய்தாலும் என்னால் வெல்லக்கூடா தது இல்லை' என்கிறது. உடம்புத் திமிரினாலும் அகம் பாவத்தினாலும் சொன்ன வார்த்தைகளாக இவை தோன்றலாம். இருக்கட்டுமே! அந்த மட்டுக்கும் பேசும் மிருகம் தன்னுணர்வுள்ள உயிராகிவிடுகிறது. இந்த விராதன் மனிதன்தானே! கேவலம் விலங்கானால் இராம லக்ஷ்மணர்களிடம் தன் பலத்தைப் பற்றிப் பேசி யிருக்க மாட்டான். விலங்கானால் அது ஒன்று ஓடியிருக்கும்; அல்லது பேச்சொன்றுமில்லாமல் சீறிக்கொண்டு எதிரி களின்பேரில் பாய்ந்திருக்கும்.

இன்னொன்று, விராதன் பேச்சு இதோடு முடிய வில்லை.

'...............................உயிர் தந்தனன் அடா
போதிர் மாதிவளை உந்தி இனிது......................

உயிர் தருகிறேன் உங்களுக்கு. இந்தப் பெண்ணை விட்டு விட்டுச் சுகமாய்ப் போய்ச் சேருங்கள்' என்கிருன் விராதன். பரிகாசந்தான். இரக்கமொன்று மில்லை. ஆனாலும், கவ்விய இரையோடு ஓடாமல், பரிகாசம் செய்துகொண்டு நிற்கும் விலங்கை நாம் பார்த்ததில்லை. இப்படிச் செய்யக்கூடியவன் மனிதனே.

விராதனுடைய பரிகாசத்திற்குப் பதில் இராமனுடைய புன்முறுவல். அதைத் தொடர்ந்து புறப்படுகிறது வில் லின் நாணொலி. அது உலகெங்கும் ஒலிக்கிறது. இதைக் கேட்டு நெஞ்சு உளுக்கினன் என விராதன் திகைத்து நிற்கிருன். இந்த நிலையில் விலங்கானல் ஓடிவிடும். ஆனல், விராதன் சீதையைக் கைவிட்டுப் போருக்கு வருகிருன்; மனிதனுகி விடுகிருன்.

விராதன் ஒரு கோரக் கனவு. ஆனல், மனித அனு பவத்திலிருந்து முளைத்ததுதான். கவிஞனுடைய கற்பனை யால் அபூத பயங்கரமாக அது நிமிர்கிறது. ஆகாசத்திற் கும் பூமிக்குமாக நிற்கும் இந்தக் குரூர வடிவத்திலும் மனிதனுடைய சாயலைப் பார்க்கிருேம். ஆனல், இந்த அளவுக்குக்கூட மனிதத்துவம் இல்லாமல் காட்டில் புரளும் இன்னெரு பயங்கரம் கவந்தன். அவனைக் காண்பதற்கு நெடுந்தூரம் போகவேண்டும். ஆமாம்; ,ரணிய காண்டத்தின் இறுதிக்குப் பிரயாணம் செய்ய ।ண்டி இருக்கிறது. அங்கே உள்ளது கவந்தன் வனம்.

## கனல் பூதம்

கவந்தன் வனத்தில் நாம் நுழையும்போது நல்ல வெயில். வனத்திலே ஒரே நிசப்தம். வெயில் வேளை, ஆகவே ஜீவராசிகள் அடங்கி இருக்கின்றன, அரவம் ஏதும் இல்லை என்று நினைக்கிருேம். இதற்குள் கூட்டங் கூட்டமாய்த் திசை தடுமாறி விரையும் மிருகங்கள்

ரணிலே தென்படுகின்றன. ஏன் அவை இப்படி ஓடுகின்றன? ஏன் திடீரென்று மயங்கி நிற்கின்றன? உடல் பதற ஏன் வெறித்துப் பார்க்கின்றன?

'உறுப்புடை உயிரெலாம் உலைந்து சாய்ந்தன
வெறிப்புற நோக்கின வெருவுகின்றன.'

இது ஏன் என்று நாம் எண்ணமிடும்போதே. இருபெருங் கைகள் காட்டுவெளி முழுவதையும் துழாவிக் கொண்டு நம்மை நெருங்குவதைப் பார்க்கிறோம். இராம லக்ஷ்மணர்களோடு நாமும் திகைத்து நிற்கிறோம். அரக்கர் சேனை வந்து வளைத்துக் கொண்டதா? இதுவென்ன கூத்து? நகர்ந்து வரும் மதில்கள் உண்டா? மந்தரத்தை மத்தாகவும், வாசுகியை நாணாகவும் கொண்டு அன்று பாற்கடலைக் கடைந்ததாகக் கேள்விப்பட்டிருக்கிறோமே, அந்த வாசுகிப் பாம்புதான் இங்கே தன் தலையையும் வாலையும் ஒன்றாகப் பொருத்தி மண்டலாகாரமாக நெருக்குகிறதா? ஆனால், இராமன் அசையாத சிந்தையோடு நடந்து செல்கிறான். நாமும் போகிறோம். மலைக்கணவாய் ஒன்றின் வழியாகப் போவது போல இருக்கிறது. அதன் இரு சுவர்கள் மட்டும் அசைந்துகொண்டே இருக்கின்றன. கணவாய் போகப் போக நீள்கிறது. பயங்கரமான ஓலம் ஒன்று கிளம்பி வரவர வலுத்து அதிர்கிறது. புயலில் குமுறும் கடலைப் போல வரும் சப்தத்தை நோக்கிப் போகிறோம், போய்க் கொண்டே இருக்கிறோம். கடைசியில்...இது என்ன எதிரே, மலையா? இல்லை, கவந்தன் என்ற கோரக் கனவு.

மலைபோன்ற உடம்பு, அதிலே கொதிக்கும் கண்கள்; கடல் போன்ற வாய், சுறா மீன்களைப் போன்ற பற்கள், வாயா இது? வயிற்றின் நடுவிலே அல்லவா இருக்கிறது? இந்த மாமிசப் பர்வதத்திற்கு எது வயிறு, எது வாய்? வயிற்றிலேதான் தலை அமைந்திருக்கிறது. தலையே இல்லை, தலைதான் வயிற்றில் ஒரு பகுதியாகி விட்டதே! அது கவந்தம்.

நமக்கு விராதன் ஞாபகம் வருகிறது. மலைபோன்ற ஆகிருதி, நெருப்பைக் கக்கும் கண்கள், இடிபோன்ற

குரல், குகை வாய், இவையெல்லாம் விராதனுக்கும் கவந்தனுக்கும் பொதுவான அம்சங்கள். ஆனால் ஒன்று, விராதனுடைய தோற்றம் எவ்வளவோ பயங்கரமானதாக இருந்தாலும், அது மனித உடம்பின் ஆகிருதியைப் பிரமாதமாகப் பெருக்கி, ஒவ்வொரு உறுப்பையும் எவ்வளவு விகாரமாக்க முடியுமோ அவ்வளவு விகாரப்படுத்திப் பிறகு ஒன்றுசேர்த்துப் பெற்ற பிண்டம். விராதனைப் போன்ற மனிதனை நாம் காண முடியாது. ஆனால், விகாரமான தோற்றமுடைய மனிதர்களின் விகாரமான அம்சங்களை ஒன்று சேர்த்துப் பெருக்கி, கொடுமையையும் விளியாத பசியையும், மாமிச ஆசையையும் அதோடு கூட்டிவிட்டால் விராதன் தோன்றி விடுவான். இதை நாமே செய்வதற்குக் கம்பருடைய கற்பனை உதவுகிறது.

கவந்தன் கதை வேறு. அவன் உடம்பே விசித்திரமானது. மனித உடம்பின் இயற்கைக்கு மாறான விகாரம் ஒன்றைச் சிருஷ்டி செய்து, அதைத் தமது கற்பனையால் பிரும்மாண்டமானதாக்கி, அந்த நிழலை நம்முடைய மனவெளியில் ஆட விடுகிறார் கவிஞர். ஆட விடுகிறார் என்று சொன்னேன்? வயிற்றிலே வாயுடைய கவந்தன் என்ற விசித்திர விகாரம் அசைவதே இல்லை; அதன் கைகள் மாத்திரம் கால சர்ப்பம்போல் காட்டையெல்லாம் ஓயாமல் தடவிக்கொண் டிருக்கின்றன. விராதன் சீறிக்கொண்டு வருகிறான்; சீதையைத் தூக்கிக்கொண்டு ஓடுகிறான்; திரும்பி நின்று போரிடுகிறான். ஆனால் கவந்தனோ, இருந்த இடத்தில்,

'இருந்தே நீட்டி எவ்வுயிரும்
கையின் வளைத்து வயிற்றடக்கும்'

கோரமாய்க் காட்சி அளிக்கிறான். அவன் அசையாமல் இருந்து, அவன் கை மாத்திரம் துழவித் துழவி வருவதே பயங்கரத்தை அதிகப்படுத்துகிறது. விவரிக்க முடியாத பயம் நமது நெஞ்சை அழுத்துகிறது. விராதன் கையிலே அகப்பட்ட சீதை, பூனையைக் கண்ட கூண்டுக் கிளியைப் போலக் கதறினாள்.

'வஞ்சகக் கொடிய பூசை வருவாயின் மறுகும்
பஞ்சரக் கிளியெனக் கதறு பாவை'

என்கிறார் கம்பர்; ஆமாம், 'பூதமத்தனையும் ஓர் வடிவு கொண்ட புதிதென்று ஒத ஒத்த' விராதனுடைய கொடுமை வடிவத்தைக் கண்டு யார்தான் பயந்து கூச்சலிட மாட்டார்கள்? ஆனால் கவந்தனுடைய கையில் சிக்கிய உயிர்களுக்குக் கூச்சலிடக்கூட முடிவதில்லை; அவ்வளவு பயம். அவை,

'வெருவுவ, சிந்துவ, வீவ விம்மலோடு
இரிவன, மயங்குவ'

நெஞ்சைக் கவ்வுகின்ற பயத்தினால், வாயடைத்துப் போகிறது; அறிவும் குழம்பி விடுகிறது; தப்ப வழி தெரியாமல், தப்பும் வழியைப்பற்றி எண்ணமிடக்கூட முடியாமல், கலங்கிச் சுழன்று கவந்தனுடைய பிலவாயை நெருங்குகின்றன. நெருங்கும்போதே பாதி உயிர் போய்விடுகிறது. அப்பா, என்ன, வாய்? ஆ என்று விரிந்து இருள் புரளும் கடலைப்போல் அல்லவா இருக்கிறது! ஆம்; இருள் அங்கே புரளுகிறது. நெருப்புக் கொழுந்தைப்போல் அசையும் நாக்கும், சந்திரனை இரண்டாகப் பிளந்து வைத்ததைப்போல உள்ள கோரைப் பற்களும் இதைக் காட்டுகின்றன. வாயா இது? இல்லை, யமபுரியின் கோட்டை வாசல், வயிறென்ற நரகத்திற்கு வழி.

அதன் அருகில் இராம லக்ஷ்மணர்களோடு நிற்கிறோம். லக்ஷ்மணன் சொல்கிறான்: 'இதன் தன்மையை உணர முடியவில்லை. எந்தப் பொருளாக இதை எண்ணுவது என்றும் தெரியவில்லை. இது 'கணிக்கும் தன்மைத்தன்று', விஷத்தை விடக் கொடிய 'கனல் பூதம்.'— இப்படிச் சொல்லி முடித்தானோ இல்லையோ, அந்தப் பூதம் பேசுகிறது: 'அடடா, வீரர்கள் அல்லவா? பேஷ், பேஷ்! உங்கள் விதி இங்கே உங்களை அழைத்து வந்து விட்டது. வீரர்களா? வீரர்களே! நீங்கள் யார்?' என்று பயங்கரமான, கேலிச் சிரிப்புடன் இராம லக்ஷ்மணர்களை வரவேற்கிறது. முன்னமேயே பயத்தினால் குன்றிப்

போயிருக்கின்ற உயிர் இப்போது செயலற்றுப் போகிறது. இராம லக்ஷ்மணர்கூட,

'நினையு நெஞ்சினர் பதைக்கிலர் இமைக்கிலர் நின்றார்.'

சில வருஷங்களுக்கு முன் மிருகக் காட்சிசாலை ஒன்றைப் பார்க்கப் போயிருந்தேன். பெரிய மலைப் பாம்பொன்றை இருப்புக் கம்பிக் கூட்டில் அடைத்து வைத்திருந்தார்கள். நான் அந்தக் கூட்டின் அருகில் போனபோது, வேலைக்காரன் ஒருவன் அதைத் திறந்துகொண்டிருந்தான். நான் தயங்குவதைக் கண்டதும், நகைத்துக் கொண்டே,'ஒண்ணுமில்லீங்க!பாம்புத்துரைக்குத்தீனிங்க' என்றான். கூட்டிற்குள் வெள்ளை வெளேரென் றிருந்த முயற் குட்டி ஒன்றை எறிந்துவிட்டு அவன் போய்விட்டான். கூட்டிற்குள்ளே பார்த்தேன். பாம்பு அசையவில்லை. முயற் குட்டி பயத்தால் நடுங்கிக் கொண்டே கூட்டின் ஒரு மூலையில் பதுங்கி இருப்புக் கம்பியோடு ஒட்டிக் கொள்ளப் பார்த்தது. இதைக் காணச் சகிக்கவில்லை; நெஞ்சம் ஏதோ பிசைவதுபோல் இருந்தது. இதற்குள் தன் உடம்புச் சுருளிலிருந்து மெல்லத் தலையைத் தூக்கி, முயற் குட்டியைக் கடாக்ஷித்தது பாம்பு. முயற்குட்டியின் நடுக்கம் நின்றது. வெறிக்கப் பார்த்துக் கொண்டே, சிலையைப்போல் நின்றது. பிறகு பாம்பை நோக்கிப் பொம்மையைப்போல் அசைந்தது. மறுகணம் பாம்பு முயற் குட்டியின்மேல் பாய்ந்தது.

கவந்தனுடைய தோற்றமும், அவனுடைய கேலிச் சிரிப்பும், பாமபின் சூனியப் பார்வை முயற் குட்டியை மயக்கியதுபோல், உயிர்களைப் பயத்திலே இறுத்தி, பதைக்காமல் இமைக்காமல் இருக்கும்படி செய்து விடுகிறது.

கவந்தனும், விராதனும் அபூத பயங்கரங்கள். ஆனால், கவந்தன் விராதனைவிட ஒரு படி மேல். விராதனுடைய பயங்கரத்தைக் கம்பர் கலி புருஷனுடைய பவனி மூலமாகக் காட்டுகிறார். உங்களுக்கு ஞாபக மிருக்கும். கொடுமையும், பாதகமும் பரிவாரமாகக் கலிகாலம் பவனி வருகிறது. நம் மனத்தை முழுவதும் அதன் இருட்டால்

னுடைய இந்தப் பேயை, கவிஞரைத் தொடர்ந்து நாமும் 'கவந்தன்' என்கிறோம். கவந்தன் எங்கிருந்தோ முளைத்துவிடவில்லை; மனிதனுடைய பாதகத்திலிருந்து தான் தோன்றினன். இல்லை; பாதகமே வடிவெடுத்து உயிர் பெற்றுக் கவந்தன் ஆயிற்று.

இதிலே ஒரு வேடிக்கை என்ன தெரியுமா? கவந்தனும் விராதனும் அடிபட்டுக் கீழே விழுந்தவுடன் மறையவில்லை. அவர்களுடைய பூதாகாரமான சடலங்களிலிருந்து தேஜோமயமான இருவர் முறையே தோன்றுகிறார்கள். அற்புதமான தத்துவக் கருத்துக்கள் அடங்கிய வார்த்தைகளால் இராமனைத் துதிக்கிறார்கள். கோர உருவம் நீங்கி அவர்கள் ஒளி வடிவம் பெற்ற விந்தையையோ, அவர்கள் பேசும் தத்துவத்தையோ நாம் ஆராயத் தொடங்கிவிட்டால், நாம் தண்டகாரண்யத்தையும், கவந்தன் வனத்தையும் விட்டு அகன்று விடுகிறோம். ஆனால், காட்டின் இருளிலே நிற்கும்போது, நாம் காண்பது என்னவோ, விராதனும் கவந்தனும். அவர்கள் இருவரும் கம்பருடைய கவிதாசக்தியால் உருப்பெற்று நம்முன்னே நடமாடும் அபூத பயங்கரங்கள். இவர்களில் கவந்தனுக்கே முதற் பரிசு.

# பிரிவு என்னும் வேதனை

## பரத்ன்

கடைத்தெருச் சந்தடியின் நடுவிலே எங்கிருந்தோ புல்லாங்குழல் ஒன்றின் இசை மிதந்து வந்தது; ஜலாலுத்தீன் ரூமி என்ற பாரசீகக் கவிஞன் காதில் விழுந்தது. குழலின் குரலிலே லயித்த கவிஞனுடைய நினைவிலிருந்து கடைத்தெருவும், அங்காடி அமளியும் மறைந்தன: 'அப்பா! இந்தக் குழலுக்குத்தான் எவ்வளவு சக்தி! இதன் குரலில்தான் எவ்வளவு மதுரம்! தெவிட்டுகிறதே!' என்று எண்ணினான் ரூமி. இசையலைகள் அவனைச் சுற்றி விம்மின. அவற்றின் லாஹிரியிலே தன்னைக் கரைத்துக்கொண்டு, வசமிழந்து நின்ற ரூமியின் மனத்தில் சரேலென இன்னொரு எண்ணம் உதயமாயிற்று. 'ஆமாம், இவ்வளவு இனிமை இருந்தும் அதன் அடிநாதமாகச் சோகம் ஒன்று இழைகிறதே; அது ஏன்?' என்று நினைத்தான். மறுபடியும் குழலின் இசையை உன்னிப்பாய்க் காதில் வாங்கினான். இசை மறைந்தது. அவனிடம் தெளிந்த வார்த்தைகளில் குழல் பேசியது:

'தம்பி, ஜலாலுத்தீன்! என் உடம்பு வழியாக வரும் கீதத்தில் ஏன் சோகம் தோய்ந்திருக்கிறது என்றல்லவா கவலைப்படுகிறாய்? காரணத்தைச் சொல்லட்டுமா? நீ கவிஞன்; புரிந்துகொள்ளுவாய். ஒரு காலத்தில் காட்டில் அடர்ந்து வளர்ந்திருந்த மூங்கிற் கொத்தில் ஒரு பகுதியாக நான் இருந்தேன். அதன் உயிர் என் உடம்பிலும் ஓடியது. என் உடம்பு என்று சொல்லிக் கொள்வதற்குக் கூட எனக்குத் தனித் தத்துவம் ஒன்றும் இல்லை. மூங்கிற் கொத்தின் உடம்பிலே நான் ஓர் உறுப்பு. அதன் உயிரே என் உயிர். அதன் உயிர்ப்பே என் மூச்சு. அதன் சித்தமே என் சலனமும், அமைதியும். இப்படியாக மூங்கிற் கொத்தோடு கொத்தாய் நான் இருந்த அந்தக் காலத்தில், யாரோ ஒருவன் வந்தான். என்னை மூங்கிற் கொத்திலிருந்து பிரித்தான். உடம்பெல்லாம் சுட்டுத் துளையாக்கினான். இப்போது தன் மனத்தில் புரளுகின்ற ஆனந்தத்தை என் வழியாக வெளியிடுகிறான். என் கீதம் அவனுடைய நிறைவை உலகத்திற்கு அறிவிக்கிறது. அதனால் இனிமை நிரம்பி இருக்கிறது. இருந்தும் என்ன? எப்போது மூங்கிற் காட்டிற்குத் திரும்புவோம் என்ற ஏக்கம் அல்லவா என் மனத்தின் ஆழத்தில் இடைவிடாமல் அரித்துக்கொண்டிருக்கிறது? அது என் வழியாக வரும் பாட்டிலே கலந்து விடாதா? எவ்வளவு இன்பகரமான இராகத்தைத்தான் அவன்—என்னை என் வீட்டிலிருந்து பிரித்தவன்—ஆலாபனை செய்யட்டுமே! எவ்வளவு குதூகலமான கீதத்தை வேண்டுமானாலும் இசைக்கட்டுமே! என் உடம்பின் ஸ்பரிசம் அதற்கு ஏற்படும்போது, என்னை வதைக்கின்ற தாபமும் அதில் ஒட்டிக் கொள்ளாதா?'

இப்படியாகத் தன்னிடம் குழல் பேசியதாகச் சொல்லுகிறான் ஜலாலுத்தீன் ரூமி. குழலா இப்படிப் பேசியது? இல்லை. ஜலாலுத்தீனுடைய சோக உள்ளமே குழலின் வார்த்தையாக வடிவெடுத்தது. மனிதன் இந்தப் புல்லாங்குழலைப் போலவே இருக்கிறான்என்பது ரூமியின் கருத்து. மனிதனும் வீடு திரும்பத்தான் துடிக்கிறான்.

அவனும் என்றோ ஒருநாள் பரிபூரணத்திலிருந்து பிரிக்கப்பட்டுத் தனிவியக்தியான திவலைதானே! திவலை கடலை நோக்கி ஏங்குகிறது. இந்த ஏக்கம் மனித வாழ்க்கையின் ஒவ்வொரு பகுதியிலும் பின்னிக்கிடக்கிறது. 'அதெப்படி, பொன்னும்,பொருளும், புகழும் வேண்டுமென்றுஆசைப் பட்டு ஆலாய்ப் பறக்கும் லோகாயதவாதிகளுக்கு வீடு திரும்ப வேண்டும் என்ற ஏக்கம் ஏது? இப்படிப்பட்டவர்கள்தானே உலகத்தில் பெரும்பாலோர்?' என்று கேட்கலாம். ஆமாம், இவர்களுக்கும் முடிவான திருப்தி இவர்கள் நாடிச் செல்லும் பொருள்களால் ஏற்படுகின்றதா? இல்லையே? ஏன் இல்லை? அவர்கள் அறியாமலேயே அவர்கள் வாழ்க்கையின் ஆழத்தில், மனிதனுக்கு இயற்கையாக அமைந்துள்ள இந்த ஏக்கம் அரசு செலுத்துகிறது என்றுதான் சமாதானம் சொல்ல வேண்டும்.

ஒரு சிலர் இருக்கிறார்கள். அவர்கள் இந்த ஏக்கம் இருப்பதை உணர்ந்து, அதையே வளர்த்து, அதன் மூலமாக ஏற்படும் வேதனையைப் பூரணமாக அனுபவிக்கிறார்கள். இப்படிச் செய்வதால் தங்கள் ஏக்கத்திற்கும் வேதனைக்கும் முடிவு காண்பதில் ஊக்கம் அதிகரிக்கும், கடைசியில் தாங்கள் நாடும் விடுதலையைப் பெற்றும் விடலாம் என்பது இவர்கள் நம்பிக்கை. இவர்கள் ஞானிகள். பிரிவு என்னும் வேதனையை முழுவதும் உணர்ந்தவர்கள். இவர்களுடைய தவிப்பின் வேகமே அந்தத் தவிப்புக்கு மருந்தையும் தந்து, சாந்திமயத்திலே அவர்கள் வாழ்க்கையைச் சேர்த்தும் விடுகிறது.

கம்பராமாயணப் பாத்திரங்களில் பிரிவென்னும் துயரமே தன் வாழ்க்கையாக அமைந்தவன் பரதன். குகனும், அசோகவனத்துச் சீதையும் பிரிவினால் துயரப் படுகிறார்கள். உண்மைதான். இராமனைப் பிரியாமல் இருக்கவேண்டும் என்பதில் குகனுக்கு இருந்த ஆத்திரம் மிக உருக்கமாக வருணிக்கப் பெறுகிறது. என்றாலும் பிரிந்த பிறகு அவன் படும் வேதனை காவியத்தில் இடம் பெறவில்லை. சீதை வருந்துகிறாள். வருத்தம் என்றால் அதற்கு ஈடு உண்டா?

'கருதி நாயகன் வரும் வரும் என்பதோர் துணிவால்
கருதி மாதிரம் அனைத்தையும் அளக்கின்ற கண்ணாள்'

ஊண் இல்லாத உடம்பு; இயல்பாகவே அது அழிய நெடுநேரம் ஆகாது. ஆனால், கொக்கியிலே உள்ள தன் உயிரை எப்படியோ காப்பாற்றி வைத்துக்கொண் டிருக்கிருள் சீதை. குணங்கள் என்னும் ஆபரணங்கள் பூண்ட புண்ணியமூர்த்தியான இராமனை இன்னும் ஒருமுறை காணலாம் என்ற ஆசைதான் இதற்குக் காரணம்.

'குணங்கள் என்னும் பூண் எலாம்
பொருந்த புண்ணிய மூர்த்தி தன்னைக்
காணலாம் இன்னும் என்னும்
காதலால் இருந்தேன் கண்டாய்'

என்று பெருமிதத்துடன் தன் துயரத்தைப் பற்றிப் பேசிக் கொள்கிருள் சீதை. இருந்தும், சீதை இராமனோடு உடன் இருந்த பாக்கியமும் காவியத்தில் இடம் பெறுகிறது. இராமன் காட்டிற்குப் புறப்பட்டபோது,

'நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடு?'

என்று அவனைக் கேட்டு, அவனோடு காட்டிற்குப் போவதற்கும் தன் உறுதியினால் உரிமை பெற்றுவிடுகிருள். பிரிவே அவள் வாழ்க்கையாக அமையவில்லை.

ஆனால், பரதனோ பிரிவைத் தவிர வேறொன்றையும் அறியவில்லை. இராமாயணத்தின் இறுதியில் மீட்சிப் படலத்தில் இராமன் அயோத்தி திரும்பும்போது இந்தப் பிரிவும் முடிகிறது. முடிந்த பிறகு பரதன் எந்த வகையான சாந்தியை இராமனோடு இருந்து பெற்ருன் என்பதைக் கம்பர் நமக்குத் தெரிவிக்கவில்லை; தெரிவிப்பதற்கு அவகாசமும் அவருக்கு இல்லை. ஆகவே, பிரிவு என்னும் பீழையின் ஆதிக்கத்தில் முதலில் இருந்து கடைசிவரையில் இருந்தவன் பரதன். அந்த நிலையில், இராமனை அடைய வேண்டும், அவன் பக்கத்திலே இருந்து அவனுக்குத் தொண்டாற்ற வேண்டும் என்ற வெறியே அவன் வாழ்க்கையின் சுருதியாக அமைகிறது.

இந்தச் சுருதியிலே பாடப்பெற்ற அற்புதமான குணகீதம் பரதன் என்ற பாத்திரம்.

## துன்பத்தை நெருங்கும் பாதையில்

பரதன் முதன் முதலில் நம் முன்னே தோன்று வதற்கு முன்பே காவிய அரங்கம் இருண்டு விடுகிறது. வாய்மையும், மரபும் காத்துத் தசரதன் மறைகிறான். தந்தை இட்ட கட்டளை என்று சிறிய தாய் சொன்னதை நிறைவேற்ற இராமன் கானகம் செல்கிறான். கோசலநாடு பொலிவு இழந்து இடிந்து போகிறது. அயோத்தியோ துயர நகரமாக மாறிவிடுகிறது. இந்தத் துன்பச் சூழலில் அடியெடுத்து வைக்கும் பரதனைத்தான் நாம் முதன் முதலில் காவியத்தில் பார்க்கிறோம். ஆனால், அதற்கு முன் கண நேரத்திற்கு அவனுடைய மகிழ்ச்சியிலும் பங்குகொள்ளுகிறோம்.

மகிழ்ச்சியா? ஆமாம். அவன் கேகய நாட்டில், இருந்துவருகிறான். அது அவன் மாமன் வீடு. அங்கே சுகபோகங்களுக்கும் செல்வத்திற்கும் குறைவு ஒன்றும் இருந்திருக்க முடியாது. கோசல நாட்டு இளவரசன், கேகய அரசனுடைய அன்புக்கு உகந்த மருமகன், இவனுக்கு என்ன குறைவு? இருந்தாலும் அயோத்தியி லிருந்து தூதர்கள் வந்தவுடன் பரதன் நடந்துகொள் வதைப் பார்க்கும்போது அவன் மனம் அயோத்தியி லேயே லயித்திருக்கிறது என்பது நன்றாய்த் தெரிகிறது. தூதர்களைப் பார்த்ததும் பரதனுடைய முதற் கேள்வி,

'நிதிலன்கொல் திருமுடியான்'

தசரதச் சக்கரவர்த்தி சுகமா?' என்பதே. 'வலியன் — அதாவது வலிமை பெற்றிருக்கிறான் என்கிறார்கள் அவர்கள். இது பச்சைப் பொய். இந்தக் காலத்தில் இதை இராஜதந்திரம் என்று சொல்வார்கள். இதன் தன்மையை ஆராய நமக்கு நேரமில்லை. நம் கவலை பரதனைப்பற்றி யல்லவா? அவன் இந்த வார்த்தையைக் கேட்டு மகிழ்கிறான். அவனுடைய அடுத்த கேள்வி,

'இலைகொள் பூண் இளங்கோ எம்பிரானொடும்
உலைவில் செல்வத்தனோ

இலை போன்ற ஆபரணங்களை அணிந்த இளவரசன் லக்ஷ்மணன் எம்பிரானாகிய இராமனோடு குறைவற்ற செல்வமுடையவனாய் இருக்கிறானா?' என்பது. இதில் இராமனை 'எம்பிரான்' என்று பரதன் குறிப்பிடுவதும், இராமனோடுகூட இருப்பதே 'உலைவில் செல்வம்' என்ற பொருள் அவன் சொற்களில் தொனிப்பதும் நமது கவனத்தைக் கவர்கின்றன. 'உண்டு' என்பது தூதர் பதில். இதைக் கேட்டதும் பரதன் கைகளைத் தலைமேல் வைத்து, அயோத்தி இருக்கும் திசையை நோக்கி வணங்குகிறான் :

'தலையில் ஏந்தினன் தாழ் தடக்கைகளே.

அவன் முகத்திலே மகிழ்ச்சிச் சிரிப்பு ஒளி வீசுகிறது. உடம்பில் மயிர்க் கூச்சு ஏற்படுகிறது. உள்ளத்தில் வான் உயர் காதல் பொங்குகிறது. அயோத்தியிலிருந்து 'வருக' என்ற செய்தி ஏந்திவந்த ஓலைச் சுருளின்பேரில், மலர்களைத் தூவுகிறான் :

'வாள் நிலா நகை தோன்ற மயிர்ப் புறம்
பூண வான் உயர் காதலில் பொங்கினான்
தாள் நிலா மலர் தூவினன்.'

காரணம் வேறொன்றுமில்லை. தன்னுடைய முன்னவனாகிய இராமனைக் காணலாம் என்னும் ஆசைதான்.

'தம்முனைக் காணலாம் எனும் ஆசை கடாவவே.'

இராமனிடத்தில் பரதனுக்கு இவ்வளவு அன்புஇருக்கிறது என்பது இப்போதுதான் முதன் முதலில் நமக்குத் தெரியவருகிறது. இதற்கு முந்தி பரதனைப்பற்றிய சில குறிப்புகள் காணப்படுகின்றன. இராமனுடைய குலத்தின் பெருமையைப்பற்றி ஜனகனுடைய சபையில் விவரித்தபோது விசுவாமித்திரன்,

'தன்னரிய பெரு நீதித் தனியாறு புக மண்டும்
பள்ளமெனும் தகையானைப் பரதன் எனும் பெயரானை'

என்று பேசி, பரதன் ஒரு நீதிக் கடல் என்பதைக் குறிப்பிடுகிறன். பரதனைப் பற்றிய இந்த உண்மையைத் தெரிந்துதானே என்னவோ, இராமன் காட்டுக்குப் புறப்படும்போது,

'ஆளான் பரதன் அரசு'

என்று அயோத்தி நகரத்து மக்களில் சிலர் சொல்லுகிறர்கள். 'பரதன் முடிசூடப் போகிறன்' என்று இராமன் சொன்னவுடன் 'இது முறைமைக்கு விரோதம், இருந்தாலும் பரதன் நிறைந்த குணம் உடையவன். உன்னைவிட நல்லவன்,

முறைமை என்பது ஒன்று உண்டு மும்மையின்
நிறை குணத்தவன் நின்னினும் நல்லனல்
குறைவிலன்'

என்று கோசலை பேசுகிறள்.

'கல்வியும் இளமையும் கணக்கில் ஆற்றலும்
வில்வினை உரிமையும் அழகும் வீரமும்
எல்லையில் குணங்களும் பரதற்கு'

உள்ளன' என்று கூனிகூட நற்சாட்சிப் பத்திரம் படிக்கிறள். ஆனல், இராமனிடத்தில் பரதனுக்குள்ள அன்பை இவர்களில் ஒருவராவது பேசவில்லை. இப்போதுதான் முதல் தடவையாக அந்த அன்பு பரதனுடைய செய்கையின் மூலம் வெளிப்படுகிறது.

'எழுக சேனை' என்று பரதன் கட்டளை இடுகிறன். உடனே புறப்படுகிறன். பொழுதும் நாளும் குறிக்கவில்லை. அயோத்திக்குத் திரும்பவேண்டும், இராமனைக் காணவேண்டும் என்று துடிக்கும் அவனுக்குப் பொழுதையும் நாளையும் பற்றி எண்ண நேரம் ஏது? சேனை எழுகிறது. கோலாகலத்துடன் அயோத்தி நோக்கிச் செல்கிறது. இதைக் கம்பர் ஒன்பது பாடல்களில்

வருணிக்கிறார். பேரியின் விம்மலும், யானை குதிரை இவற்றின் ஆரவாரமும், வானை அளந்து பரவிய மாகதர் பாடலும், அதைத் தழுவி ஒலிக்கும் மத்தள நாதமும் நம் நெஞ்சையே நிறைத்துவிடுகின்றன. பரதன் மனத்திலே பொங்கும் களிப்பு வெறியே இந்தச் சேனையின் குதூகல மாக வடிவெடுத்துவிட்டதோ?

ஆமாம்; இது என்ன அசம்பாவிதம்? அயோத்தி யில் தசரதன் இறந்துகிடக்கிறான், இங்கே பரதனுடைய சேனை கேகய நாட்டிலிருந்து புறப்பட்ட விமரிசையைப் பற்றி ஒன்பது பாடல்களா, பரதனைக் கோசல நாட்டிற்கு ஒரே பாடலில் கொண்டு வர இந்தக் கம்பருக்குத் தெரி யாமலா போயிற்று என்றெல்லாம் கேட்கத் தோன்று கிறது. ஆனால், அயோத்தியில் நிகழ்ந்துள்ள கொடுமை ஒன்றும் பரதனுக்கு இப்போது தெரியாது. அது மாத் திரம் இல்லை. நடந்தொன்றும் தெரியாமல், 'அயோத் திக்குப் போகப் போகிறோம், இராமனைக் காணப் போகி றோம்' என்று உவகை துள்ளப் புறப்படும் பரதனுடைய மகிழ்ச்சியில், கதை முழுதும் தெரிந்த நமக்கு. ஆழ்ந்த சோகம் ஒன்று சித்தியாகிறது. தாய் இறந்து கிடக்கிறாள். அவள் தூங்குகிறாள் என்று எண்ணி அவளைத் தன் சிறு விரல்களால் தட்டி எழுப்ப முயன்று அவளிடம் கொஞ்சி மழலை பேசுகிறது குழந்தை. இந்தக் காட்சியில் மனத்தை உருக்கும் சோகம் தோன்றுதா? இதுபோலத்தான், தைலத்தில் கிடக்கும் தசரதன் நம் கண்முன்னே நிற்கும் காரணத்தால், பரதனுடைய மகிழ்ச்சியும், அதன் எதிரொலியாக வடிவாகும் அவன் சேனையின் ஆரவார மும், நம் மனத்திலே வேதனையைப் பயிர் செய்கின்றன. என்ன குதூகலம் வேண்டிக் கிடக்கிறது, தசரதன் போய்விட்டான், அயோத்தியில் இராமன் இப்போது இல்லை, அந்த நகரம் பாழடைந்ததுபோல ஆகிவிட்டது என்று பரதனிடம் சொல்லத் துடிக்கிறோம். இந்தத் துடிப்பே சேனை எழுச்சி வருணனையில் நமக்குக் கிடைக் கும் அவலச் சுவைக்கு அத்தாட்சி. ஆனால், நம்முடைய துடிப்பினால் என்ன பயன்? நமது குரல் காவியப் பாத்தி ரங்களின் காதில் விழவா போகிறது?

கம்பர் காதில் விழுகிறது. உடனே நாம் விரும்பிய படி கேகய நாட்டிலிருந்து கோசல நாடு வரை பரதன் செய்த பிரயாணத்தை ஒரே பாடலில் முடித்து விடுகிறார்:

‘ ஆறும் கானும் அகன் மலையும் கடந்து
ஏறி ஏழ்பகல் நீந்திப் பின் எந்திரத்து
ஆறு பாகு மடை உடைத்து ஒண்முளை
நாறு பாய் நெடும் கோசலம் நண்ணினான்.’

ஏழு நாட்களில் பரதனுடைய நீண்ட பயணம் முடிகிறது. கோசல நாட்டின் எல்லையை அடைந்து விடுகிறான். ‘ இதோ, என்னுடைய நாடு வந்து விட்டது. கருப்பஞ்சாறு வயல்களிலே வழிந்தோடும் செல்வத் திருநாடல்லவா இது?’ என்று, களிப்புடன் மலர விழித்து நாட்டைப் பார்க்கிறான்.

ஆனால், கண்டது என்ன? ஏர் துறந்த வயல்கள், நீர் துறந்த நெற் பயிர், அழகு துறந்த நாடு. ‘ஏன் இப்படி, நாட்டிற்கு என்ன வந்துவிட்டது?’ என்று எண்ணுகிறான். போகும் பாதையிலே வேறு காட்சிகளும் தென்படுகின்றன. சோலைகளில் சீந்துவாரற்று அழுகிக் கிடக்கும கனிகள் ; பறிப்பவர் இல்லாமல் தாமாகவே கீழே விழுந்து வதங்கிய மலர்கள்; வழியிலே கிராமம் ஒன்று. பக்கத்திலே உள்ள வயல்களில் கதிர் முற்றிய நெற் பயிர் கேட்பாரற்றுத் தலைசாய்ந்து கிடக்கிறது. குளமடை அருகிலே வளமாக வளர்ந்த பச்சென்ற பயிர்கள் ஒருவரும் நீர் பாய்ச்சாத காரணத்தால் லோபி களின் தலைவாசலில் வாடிக்கிடக்கும் யாசகர்போல உலர்ந்து துவளுகின்றன.. வீடுகளில் சந்தோஷ அடை யாளம் எதுவும் இல்லை. அகிற் புகையைக் காணோம். விளக்குகள் அணைந்து கிடக்கின்றன . கூட்டிலே உள்ள கிளி கூடப் பேச மறந்தது போல் ஊமையாய் முடங்கிக் கிடக்கிறது. ஜன நடமாட்டம் குன்றி விட்டது. பாதை யிலே போகின்ற ஓரிருவர் ஏதோ இயந்திரங்களைப்போல் செல்கிறார்கள். உற்சாகமா,களிப்பா, எழுச்சியா, ஊக்கமா ஒன்றையும் காணோம். வளம் துன்னிய கோசல நாட்டை விட்டுத் திருமகள் போய் விட்டாளா? ஏன் இப்படி நாடு வெறிச்சோடிக் கிடக்கிறது?

பரதன் மனத்திலே விவரிக்க முடியாத பயம் தோன்றுகிறது. ஏதோ தீங்கு நடந்திருக்கிறது. அயோத்தியில் இந்தச் செய்திதான் தனக்காகக் காத்திருக்கிறது என்ற எண்ணம் பரதனுடைய உள்ளத்தில் ஊன்றுகிறது. பதைப்புடன் அயோத்தியை நோக்கி விரைகிருன்.

இதைப் பார்த்துக்கொண்டு நிற்கும் நமக்கு, கேகய நாட்டிலிருந்து சேனை புறப்பட்ட குதூகலத்தைக் கம்பர் ஏன் விரிவாக வர்ணித்தார் என்ற இரகசியம் விளங்குகிறது. ஒன்பது பாடல்களில் அதை வருணித்த கவிஞர் ஒன்பது பாடல்களிலேயே, அதாவது அதே அளவிலேயே,கோசல நாடு பொலிவிழந்திருப்பதையும் சித்திரிக்கிருர். பிந்திய சோகச் சித்திரத்திற்குப் பகைப் புலமாய் அமைந்திருக்கிறது முதல் வர்ணனை. வெள்ளைச் சுவரில் அல்லவா கறுப்பின் வேகம் தெளிவாய்த் தெரியும்?

பரதன் அயோத்தியை நெருங்குகிருன். மாடங்களிலும், கோபுரங்களிலும் கொடிகளையும் தோரணங்களையும் காணேம். சூரியனை நிறுத்துவன போல் நிமிர்ந்து மண்டி அசையும் அந்தக் கொடிக்காடு எங்கே?

> ‘அண்டமுற்றும் திரிந்து அயர்ந்தாய் அமிர்து
> உண்டு போதி என்று ஒண் கதிர்ச் செல்வனை
> விண் தொடர்ந்து விலக்குவ போல்வன
> கண்டிலன் கொடியின்நெடும் கானமே.’

‘வாருங்கள், வேண்டிய செல்வத்தை யெல்லாம் இங்கே பெறலாம்’ என்று அழைப்பது போல் அதிரும் முரசின் குரல் காதில் விழவில்லை. நீர் வற்றிய ஆறு வெறும் மணற்காடாகத் தோன்றுகிறதே அதுபோல, தேரும் குதிரையும், யானையும் பல்லக்கும், வண்டியும் அலை அலையாய்ச் செல்லும் வீதி இப்போது வறண்டு ஜன நடமாட்டம் இல்லாமல் நீண்டு கிடக்கிறது.

உருத் தெரியாத தீமையின் பாரம் நெஞ்சை அழுத்தத் தன் தம்பி சத்துருக்கனைப் பார்த்து ‘மன்னனுடைய தலைநகரமா இது? லட்சுமி துறந்த பாற்கடலைப் போல் அல்லவா இருக்கிறது? இப்படியும் உண்டா?

)து என்ன கோலம்?' என்று கேட்கிறான் பரதன். றகு தசரதனுடைய அரண்மனையை நோக்கி வேக மாகப் போகிறான், முடிவில்லாத் துயரத்தில் அடியெடுத்து வைக்க.

## துயரக்கடல்

தசரதனுடைய அரண்மனையில் சூன்யம் அரசு செலுத்துகிறது. அரசனைக் காணவேண்டும் என்னும் விருப்பத்தோடு செல்லும் பரதன் இதையே காண் கிறான். தசரதனை எங்கும் காணவில்லை. பரதன் மனத்தில் என்ன என்னவோ சந்தேகங்கள் தமது முட்டைகளைப் பரப்புகின்றன. 'ஐயன் இராமனைக் கண்டு இதற்குப் பரிகாரம் தேடுவோம்' என்று தொழுத கையோடு திரும்பு கிறான். அப்போது தாதி ஒருத்தி வந்து, 'உன் தாய் அழைக்கிறாள்' என்று சொல்ல, பரதன் கைகேசியின் அரண்மனைக்குப் போகிறான்.

'ஆய காலையில் ஐயனை நாடித் தன்
தூய கையில் தொழல் உறுவான் தனை
'கூயள் அன்னை குறுகுதிர் 'என்றொரு,
வேய் கொள் தோளி தொழுது விரும்பினன்.'

பரதனுடைய இயல்பு தெரிகிறதல்லவா? அயோத் திக்கு வந்தவன் தந்தையைக் காணத் துடிக்கிறான். அவரைக் காணவில்லை என்றவுடன் இராமனை நாடு கிறான். தன் தாயைப்பற்றி அவன் எண்ணவில்லை. அவள் அழைத்ததன் காரணமாக அவளைச் சந்திக்கப் போகி றான். சந்தித்தவுடன் அவனைப் பேசவிடாமல் 'என் தந்தையும், தாயும், உடன் பிறந்தோரும் சுகமாக இருக்கிறார்களா?'

'நிதிலர் எந்தை அன்னையர் எங்கையர்'

என்று கேட்கிறாள் கைகேசி. பரதனுடைய மனம் வேறு எங்கேயோ இருக்கிறது. 'ஆம்' என்று ஒரே வார்த் தையில் பதில் சொல்லிவிட்டு, 'அன்புடைய தந்தையி

பாதத்தைத் தொழ விம்முகிறேன். அவர் எங்கே?' என்று பரபரக்கிறான்.

‘மூண்டு எழுகாதலான் முளரித் தாள்தொழ
வேண்டினென் எய்தினென் உள்ளம் விம்முமால்
ஆண்தகை நெடுமுடி அரசர் கோமகன்
யாண்டையான் பணித்திர்’

என்று இருகை கூப்பினான்.

‘வேண்டினென் எய்தினென்’ அதாவது ‘விரும்பினேன், வந்தேன்’ என்ற சொற்களில், தசரதனைப் பார்க்கவேண்டும் என்ற ஆவலே கேகய நாட்டைவிட்டுப் பரதன் வந்ததற்குக் காரணம் என்ற தொனி பேசுகிறது. இராமனைக் காணலாம் என்னும் ஆசை பரதனைத் தூண்டியது என்பதும் நமக்கு முன்பே தெரியும். ஆகவே, இரண்டு ஆசைகள்; இரண்டும் அன்பினால் விளைந்தவை; இரண்டிலும் கைகேசியின் பேச்சினால் மண் விழுகிறது. அப்படி அவள் என்ன பேசுகிறாள்? அதைவிட முக்கியமான கேள்வி எப்படிப் பேசுகிறாள் என்பது. அதையும் பார்ப்போம்.

பேசத் தொடங்கும் கைகேசியை ‘அழிவில் சிந்தையாள்’—வருத்தமில்லாத சிந்தையை உடையவள்—என்று கம்பர் குறிப்பிடுகிறார். அவள் வார்த்தையும் அதற்குப் பொருத்தமாகவே இருக்கிறது. ‘அசுரர்களுடைய வலிமை ஒடுங்கும்படியாக நிமிர்ந்த சேனையைச் செலுத்தியவன் தசரதன். ஆகவே, தேவர்களுக்கு மிகவும் வேண்டியவன். அத் தேவர்கள் கைதொழுது வரவேற்க, தசரதன் வானுலகம் அடைந்தான்' என்கிறாள் கைகேசி.

‘ஆனவன் உரைசெய அழிவில் சிந்தையாள்
‘தானவர் வலிகெட நிமிர்ந்த தானை அத்
தேன் அமர் தெரியலான் தேவர் கைதொழ
வானகம் எய்தினன் வருந்தல் நீ’ என்றாள்.

மகனைப் பார்த்ததும், கணவனை இழந்து வருந்தும் ஒருத்தி, என்ன சொல்வது என்று தெரியாமல் திகைப்

பதும், துக்கம் நெஞ்சை அடைக்க விம்முவதும், கண்ணீர் விடுவதும் சாதாரணம்; அதாவது உண்மை யிலேயே அவள் துயரத்தில் கலங்கும் ஒருத்தியானல். கைகேசிக்குத் துளியாவது திகைப்போ, கலக்கமோ, தடுமாற்றமோ இருப்பதாகக் காணும். 'இறைவ னுடைய திருவடி நீழலை அடைந்தார்' என்று சம்பிரதாய முறையில் பேசும் சாவோலையின் வாசகத்தை ஒத்திருக் கிறது அவளுடைய பேச்சு. இந்த அழகில் 'நீ வருந்தாதே' என்று வேறு முடிக்கிருள். 'அடி பாவி, தசரதன் மறைவினல் ஒரு நாடே பொலிவிழந்து விட்டது. அவன் உயிர் இழந்ததற்கும் காரணம் நீதான். இப்போது நடந்த கதை தெரியாமல் மகன் கலங்குகிருன். எப்படித்தான் உனக்கு இப்படிப் பேசத் துணிவு வந்தது? என்ன கல் மனம் உனக்கு?' என்று நமக்குக் கேட்கத் தோன்றுகிறது. இப்படிப்பட்டவளை 'அழிவில் சிந்தையாள்' என்று கம்பர் குறிப்பிடுவதில் தவ றென்ன? தவறு ஒன்றுமில்லை; ஆனல், இந்தக் கம்பர் தானே அவளை இப்படிப் பேசவைக்கிருர்? துயரம் படிந்த சொற்களில் பரதனிடம் பேசியதாகக் கைகேசியை அவர் காட்டியிருக்கலாமே? ஏன் காட்டவில்லை?

அதுதான் காவிய இரகசியம். தசரதன் பேரிலும், இராமன்பேரிலும் பரதனுக்கு உள்ள அன்பைக் காட்டப் போகிருர் கம்பர். இந்த அன்பு பல வழிகளில் தன்னை இனம் காட்டிக் கொள்வதையும் வர்ணிக்கப் போகிருர். தசரதன் இறந்தான் என்ற செய்தி காதில் விழுந்ததும் அடியற்ற மரம்போல் பரதன் சாய்கிருன். தன்னுணர்வு பெற்றவுடன் 'காதிலே தீயை வைத்ததுபோல் அவ் வளவு கொடுமையான சொல்லை நீ அல்லாமல் வேறு யார்தான் சொல்லுவார்கள்?

தீயெரி செவியில் வைத்தனைய தீயசொல்
நீ அலது உரைசெய நினைப்பரோ?'

என்று கைகேசியைப் பார்த்துப் பரதன் கேட்பது பொருத்தமாகவே தோன்றுகிறது. ஏன் தெரியுமா? கைகேசியை 'அழிவில் சிந்தையாள்' என்று கணநேரத்

திற்கு முன்பு தானே உணர்ந்தோம்? இந்தச் சூழ் நிலையில் பரதனுடைய கடுமையான சொல் நியாயம் என்றுதான் நமக்குப் படும். 'பேயானாலும் தாய்' என்பது பழமொழி. ஆனால், பேய் என்ற உணர்ச்சி ஓங்கி நிற்கும் போது தாய் என்ற எண்ணம் மறைகிறது. அந்த எண்ணம் தோன்றினாலும் 'இவளா தாய்? அட கடவுளே, இந்தப் பேயா?' என்ற ஆத்திரம் ஒருபுறம்; தாயாய் இருந்தும் இப்படி மகனிடம் நடந்து கொள்ளுகிறாளே என்ற இரக்கம் ஒரு புறம்; இரண்டும் சேர்ந்து மகனுடைய கோபத்தையும் வெறுப்பையும் அனுதாபத்தோடு பார்க்க நம்மைத் தூண்டுகின்றன. இது காரணமாக, பரதன் தாயை வெறுப்பது குற்றமாகத் தோன்றவில்லை. ஆனால், இப்படிப்பட்ட சூழ்நிலையைக் கவிஞன் அமைக்காதிருந்தால், என்ன இருந்தாலும் பரதன் தன் தாயிடம் இப்படி நடந்து கொள்ளலாமா என்று எண்ணத்தான் தோன்றும்.

தாயிடம் கடுமையாக ஒரு வார்த்தை, பளீரென்று ஒரு கண்டனம், அதற்குள் தசரதன் மறைந்த சோகம் பரதனை ஆட்கொண்டு விடுகிறது. தசரதனை எண்ணி எண்ணி மனமுடைகிறான்; புலம்புகிறான். 'இக்ஷ்வாகு வம்சத்துப் பூர்வ புருஷர்களுடைய பழம் பெருமையைத் தன் வீரத்தால் புதுக்கினானே சிவபெருமான் வில்லை ஒடித்த அந்த வீரன், அந்த வீரப் புதல்வனை விட்டு, எப்படி ஐயா, நீ பிரிந்து போனாய்?

முதலவன் முதலிய முந்தையோர் பழங்
கதையையும் புதுக்கிய தலைவன் கண்ணுடை
நுதலவன் சிலையின் நோன்மை நூறிய
புதல்வனை எங்கனம் பிரிந்து போனாய்?'

என்று கேட்கிறான். சிறிது நேரத்தில், 'ஓகோ, இராமன் இந்தச் சாம்ராஜ்யத்தை ஆளவேண்டும். இப்போது வெறுங்கையனாக இருக்கிறான், இது கூடாது. அவன் கையில் ஆக்ஞா சக்கரம் சுழலவேண்டும் என்றெல்லாம் எண்ணித்தான் இவ்வுலகைவிட்டு மறைந்தாயோ? ஆனால், உன் மகன் முடிசூடும் வைபவத்தைக் காணாமல்

போய்விட்டாயே! இது நியாயமா?' என்று இரங்கு கிறான்.

'கொற்றவன் முடி மணக்கோலம் காணவும்
பெற்றிலைபோலும் நின் பெரிய கண்களால்.'

இந்தச் சொல் காதில் விழுந்ததும் நமக்குத் துணுக் கென்கிறது. நடந்த விபரீதமெல்லாம் நமக்குத் தெரியு மல்லவா? இராமன் முடிசூடும் விழாவைக் கண்டு களிப் பதற்கு எவ்வளவு ஆசைப்பட்டான் தசரதன்?

'பூணார் அணியும் முடியும் பொன் ஆசனமும் குடையும்
சேணார் மார்பும் திருவும் தெரியக் காணக்கடவேன்'

என்று தன் ஆசை ஒடிந்த வேதனையில் புலம்பினானே? இந்த ஞாபகம் பரதனுடைய வார்த்தையைக் கேட்டதும் நமக்கு வருகிறது. அதோடு தன்னைப்பற்றி ஒரு வார்த்தைகூடப் பேசாமல், தசரதனைப்பற்றியும், இடை இடையே இராமனைப் பற்றியுமே துயர வெறியிலுங்கூடப் பேசும் இந்த பரதனுடைய அன்பின் பெருமை நமது நெஞ்சைத் தொடுகிறது.

பரதனுடைய புலம்பல் சுழன்று சுழன்று அவன் மனத்தின் ஆழத்தில் உள்ள இராமபக்தியில் கடைசி யாகச் சங்கமம் ஆகிறது. 'இந்தச் சோகத்திற்கு மருந்து அது ஒன்றுதான். அது என் தந்தையும் தாயும், தலைவனும் தமையனுமாகி நிற்கும் அந்தக் குணக்கடல் இராமன் திருவடியில் வணங்குவதே.

எந்தையும் ஆயும் எம்பிரானும் எம்முனும்
அந்தமில் பெருங்குணத்து இராமன் ஆதலால்
வந்தனை அவன் கழல் வைத்தபோது அலால்
சிந்தை வெம் கடுந்துயர் தீர்கலாது'

என்று முடிவு கட்டுகிறான்.

பரதனுடைய உள்ளத்தின் அடி நாதம் நமது காதில் விழுகிறது. 'எல்லாமும் அவனே, அவனன்றி வாழ் வில்லை' என்ற ஞானியின் பக்திப் பரவசத்தைத்தான் பரதனுடைய இராம பக்தியில் காண்கிறோம். இதைச் சிறி

தளவு கைகேசிகூடக் கண்டுவிடுகிருள். அவள் குரலி லும் கனிவு சிறிது தோன்றுகிறது. ஏதோ பேசுகிருள். அது பரதன் சீற்றப் புயலைக் கிளப்பிவிடவே உதவு கிறது. அந்தப் புயலைச் சொற்களில் வடித்துக் கவிதை யாக்கும் கம்பருடைய பேராற்றலையும் நமக்குக் காட்டு கிறது. எப்படி என்று பார்க்கலாம்.

## அன்பிலே மூண்ட அனல்

நீருக்குள்ளே நெருப்பு முளைக்குமா? முளைக்காது என்பது நம்முடைய சாதாரண அனுபவம். முளைக்கும் என்பது பழைய காலத்து நம்பிக்கை. அலைமோதிப் புரளும் தண் கடலின் ஆழத்திலே, அந்தக் கடல் வரம்பு மீறிப் பொங்காமல் இருக்கும்படி பார்த்துக்கொண்டு, அணையாத தீ உட்கார்ந்திருப்பதாக நம்முடைய முன் ஞேர்கள் நெடுங்காலத்திற்குமுன் நம்பிஞர்கள். இது குருட்டு நம்பிக்கை என்று இன்று நாம் நினைக்கலாம். கவைக்கு உதவாத கற்பனை என்று ஒதுக்கியும் விடலாம். நீருக்குள் நெருப்பு பயிராகுமோ என்னவோ, ஒன்று தெரிகிறது. அன்பு நிறைந்து, தண்ணீரைப்போலக் குளிர்ந்திருக்கும் உள்ளத்தில், சில சமயங்களில் கோபத் தீ மூண்டு பிரம்மாண்டமாய் வளர்ந்து விடுகிறது. இந்தக் கோப நெருப்பிற்கு அன்பே காரணமாகியும் நிற்பதுதான் வேடிக்கை.

இராமனிடத்திலே பரதன் அளவில்லாத அன்பு வைத்திருக்கிருன். இது நமக்குத் தெரியும்.

> "எந்தையும் யாயும் எம்பிரானும் எம்முனும்
> அந்தமில் பெருங்குணத்து இராமன்"

என்பதுதான் பரதனுடைய சித்தாந்தம். தசரதன் இறந்தான் என்ற செய்தியைக் கேட்டுப் புழுங்கித் துடிக்கும்போது, 'இந்தத் துயரத்திற்கு முடிவுகாண வேண்டுமாஞல், இராமனுடைய பாதத்திலே வணங்க வேண்டும். வேறு வழியில்லை' என்று பரதன் தீர் மானிக்கிருன். வேதனையிலே, பயத்திலே, தாயின் அணைப்பை நாடிக் கைநீட்டும் குழந்தையைப் போல

அண்ணன் எங்கே' என்று இராமனைக் காணத் திரும்புகிருன். ஆனால், இராமனை எப்படிக் காண்பது? அவன் தான் காட்டிற்குப் போய்விட்டானே! ஏதோ, சர்வ சாதாரணமான விஷயத்தைச் சொல்வதுபோல, கைகேசி இதைச் சொல்லுகிருள். 'இராமனு? அவன்தான் மனைவியோடும் தம்பியோடும் காட்டிற்குப் போய்விட்டானே?'

'தேவி தம்பி என்று
இவ்விருவோரொடும் கானத்து ஏகினன்'

என்கிருள். பரதனுக்கு ஒரே திகைப்பு. 'காட்டிற்குப் போய் விட்டானு? என்ன காரணம்?' என்று கலங்குகிருன். 'இராமன் ஏதாவது தவறுசெய்து விட்டானு? அப்படி அவன் என்ன செய்திருக்க முடியும்? இராமனு தீமை புரிபவன்? அப்படியே அவன் ஏதாவது செய்திருந்தாலும், அதைத் தீமை என்று கருத இடமேது? குழந்தையின் கைகால்களை அமுக்கிப் பிடித்துக்கொண்டு தாய் பாலூட்டுகிருள். அடாடா, குழந்தையை வருத்துகிருளே என்று சொல்லுவது உண்டா? வெளிப் பார்வைக்குத் தீமையாகத் தோன்றும் ஒன்றை இராமன் செய்தாலும் அது உலகத்திற்கு நன்மையைத்தானே தரும்? அது தாயின் செயல் அல்லவா?

''தீயன இராமனே செய்யுமேல் அவை
தாய்செயல் அல்லவோ தலத்துளோர்க்கு எலாம்''

என்று தெளிகிருன். 'எப்போது போனுன்? இராமன் காட்டிற்குப் போனது தசரதன் இறந்த பின்பா அல்லது அதற்கு முன்பா?' என்று கேட்கிருன்.

'தசரதன் இருக்கும் போதுதான்' என்கிருள் கைகேசி.

பரதனுடைய கலக்கம் அதிகரிக்கிறது. 'இராமன் குற்றம் ஒன்றும் செய்யவில்லை என்று நீயே சொல்கிருய். பொருமையினுல் இராமனுடைய பகைவர் செய்த சூழ்ச்சியின் விளைவோ என்ருல், அப்படியும் இருக்க முடியாது. தெய்வக் குற்றம் என்று எண்ணவும் இடமில்லை. பிறகு ஏன் போனுன்? பெற்றவன் இருக்கும்போது மகன் காட்

டிற்குப் போக நேர்ந்தது ஏன்? தசரதன் இறந்த காரண மும் என்ன?' என்று பரதன் கேட்கிருன். இராமன் காட்டிற்குப் போனதுதான் தசரதன் உயிர் நீத்ததற்குக் காரணமோ என்ற சந்தேகம் அவன் மனத்திலே தலை தூக்குகிறது.

பரதனுடைய பதற்றம் கைகேசியைச் சிறிது தாக்கி யிருக்கவேண்டும். பரதன் கேகய நாட்டிலிருந்து வந்த வுடன் எவ்வளவோ பெருமையோடு தன் சாதனையை அவனிடம் தெரிவிக்கவேண்டும் என்றுதான் கைகேசி திட்டமிட்டிருந்தாள். இப்போதும் சிறிது பெருமை யோடுதான் தொடங்குகிருள்.

'வாக்கினல் வரம்தரக் கொண்டு மைந்தனைப்
போக்கினேன் வனத்திடைப் போக்கிப் பார்உனக்கு
ஆக்கினேன்'

என்று ஆரம்பிக்கின்றவள்,பரதனுடைய நிலையில் தன்னை இழந்து, என்ன சொல்கிருேம் என்ற நிதானமில்லாமல் உண்மையைக் கக்கிவிடுகிருள். 'இப்படி எல்லாம் செய் தேன், ஆமாம்; அவனைக் காட்டிற்கு அனுப்பினேன். நாட்டை உன்னுடையது ஆக்கினேன். ஆனல், ஆக்ஞா சக்கரம் செலுத்திய மன்னவன் தசரதன் இருக்கிருனே, அவன் இராமனைப் பிரிந்தது தாங்காமல் தன் உயிரை விட்டான்.

'... ... ... அவன் அது பொறுக்கலாமையால்
நீக்கினன் தன் உயிர் நேமி வேந்து'

என்று முடித்துவிடுகிருள்.

தண்ணென்று அன்பினல் நிறைந்த பரதன் உள் ளத்திலே சரேலென்று கோபத்தீ மூள்கிறது. அந்தத் தீ அவன் மூச்சிலே ஜ்வாலையாக ஓடுகிறது; மயிர்க்காம்பு தோறும் நெருப்புப் பொறியாகப் பொடிக்கிறது.

" துடித்தன கபோலங்கள் சுற்றும் தீச்சுடர்
பொடித்தன மயிர்த் தொளை புகையும் போர்த்தது
மடித்தது வாய் நெடு மழைக் கை மண் பக
அடித்தன ஒன்ெறாடு ஒன்று அசனி அஞ்சவே."

இப்படிக் கொதித்து எழுந்த பரதனுடைய கோபம் முழுவதும் தாயின்பேரில் பாய்கிறது. தாயா, இந்தக் கொடுஞ் செயலைச் செய்தவள் தாயா ?

'கடியவள் தாய் எனக் கருதுகின்றிலன்.'

கைகேசியை இப்போது பரதன் தாய் என்று கருதவில்லை. அவனுடைய கோபம் எதையும் செய்து கைகேசியைத் தண்டித்திருக்கும். ஆனால், அந்தக் கோபம் எதனால் விளைந்ததோ அந்த இராமபக்தியே இப்போது கோபத்தைக் கட்டுப்படுத்தி விடுகிறது.

'நெடியவன் முனியும் என்று அஞ்சி நின்றனன்.'

தான் ஏதாவது கைகேசியைத் தண்டித்துவிட்டால் இராமன் கோபித்துக் கொள்வான் என்ற எண்ணம் பரதனுடைய கையைக் கட்டிவிடுகிறது. என்றாலும், உள்ளே பொங்கும் கோபக்கனல் அவன் வாயிலிருந்து சொல் நெருப்பாகப் பாய்கிறது:

'தந்தை இறந்தான், அண்ணன் காட்டிற்குப் போனான். இவ்விரண்டும் உன்னால் நிகழ்ந்தவை என்பது கேட்டும், வரம் கேட்ட உன் வாயைக் கிழித்துவிடாமல் நிற்கிறேனே, இது ஒன்றே போதாதா இந்த இராஜ்யத்தைப் பெறுவதில் எனக்கும் ஆசை இருக்கிறது என்று சொல்வதற்கு ?

மாண்டான் எந்தை என் தம்முன் மாதவம்
பூண்டான் நின்கொடும் புணர்ப்பினால் என்றால்
கீண்டிலேன் வாய் அது கேட்டு நின்ற யான்
ஆண்டனனே யன்றோ அரசை ஆசையால்.'

இந்த வார்த்தைகளில்தான் என்ன ஆத்திரம், எவ்வளவு ஆற்றாமை, எவ்வளவு கசப்பு! ஆனால், இது ஆரம்பம். போகப் போக உக்கிரமாகி அவனையே அழித்து விடுமோ என்று தோன்றும்படி மூள்கிறது பரதனுடைய கோபத் தீ.

## தாயா? பேயா?

கைகேசியைப் பார்த்து அவன் சீறுகிறான். 'இவ்வளவு கொடுமையைச் செய்த நீ இன்னும் உயிரோடு இருக்கிறாய். இதைப் பார்த்துக்கொண்டு நானும் ஒன்றும் செய்யாமல் நிற்கிறேன்.' நொடிப்பொழுதில் உன்னை அடித்து வீழ்த்த வேண்டியதுதான் நியாயம். ஆனால், அவன் கோபம் கொள்ளுவான். உலகுக்கெல்லாம் தாயாகி நிற்கும் அந்தப் புண்ணியமூர்த்தி வருந்துவான். இதை எண்ணிப் பேசாமல் இருக்கிறேனேயன்றி, தாய் என்ற பெயர் வைத்திருக்கிறாயே அதனால் அன்று. தாயா? அது வெறும் பெயர்தானே? அதுவா என்னைத் தடை செய்யும்? உண்மையான தாய்மைப் பண்பு படைத்த அவன் கருணைதான், அவனுக்குக் கொடுமை இழைத்த உன்னைக்கூடக் காப்பாற்றுகிறது:

'இனம் இருந்தனை யானும் நின்றனன்
ஏ எனும் மாத்திரத்து எற்றுகின்றிலன்
ஆயவன் முனியும் என்று அஞ்சினேன் அலால்
தாய் எனும் பெயர் எனைத் தடுக்கற் பாலதோ.'

இப்படிப் பேசிய பரதனுக்குத் 'தாய்' என்ற அந்தப் பெயர் ஒரு பயங்கரமான கேலிக் கூத்தாகத் தோன்றுகிறது. அதை எண்ணிக் கசப்புடன் சிரிக்கிறான். 'ஆமாம்', தாய்தான். அவள் செய்கின்ற காரியம் தவறாக இருக்குமா? இராது, இராது. தருமத்திற்குத்தான் ஏதாவது குறைவை ஏற்படுத்துமா? சே, நடக்கக்கூடிய காரியமா? சொல் ஒன்று; அதனால் மன்னவன் இறந்தான்; வீரன் இராமன் காட்டிற்குப் போனான்; நாட்டை ஆள்வதற்குப் பரதன் வந்து சேர்ந்தான். இவ்வளவுதானே நடந்தது?

மானவும் உளன் ஒரு மன்னன் வன்சொலால்
மீளவும் உளன் ஒரு வீரன் மேய பார்
ஆளவும் உளன் ஒரு பரதன்.

எல்லாம் பொருத்தமாகத்தான் இருக்கிறது. தாய் செய்தது அல்லவா? அது தவறாகுமா?

கோன் இலது அறநெறி குறைவுண்டாகுமோ ?

பரதனுடைய கசப்பு தன் பேரிலேயே திரும்புகிறது. 'தாய் தவறு செய்வாளா ? மாட்டாள். மகனுக்குப் பெருமையைத் தேடி வைத்து விட்டாள். அடேயப்பா ! எவ்வளவு அழியாத பெருமை ! வழி வழியாக வந்த மரபை, மூத்தவன் அரசாள்வது என்ற முறைமையைத் தொலைத்து, இக்ஷ்வாகு வம்சத்திற்கே பரதன் களங்கத்தைத் தேடி வைத்தான் என்ற பேச்சு உலகத்தில் என்றும் நிலைத்திருக்கும்படி யல்லவா செய்திருக்கிறாள் ? இதைவிட வேறு பெருமை இருக்க முடியுமா ? பரதா, நீ பாக்கியசாலிதான்.

' வழியுடைத்தாய் வரு மரபை மாய்த்து ஒரு
பழி உடைத்தாக்கினன் பரதன் பண்டு எனும்
மொழி உடைத்தாக்கலின் முறைமை வேறு உண்டோ '

என்று சொல்லிக்கொண்டு வரும்போதே, பரதனுடைய ஆத்திரம் எல்லை மீறிப் போகிறது. கசப்பும், அதனால் ஏற்பட்ட ஏளனச் சிரிப்பும் மறைகின்றன. வெறுப்பு [illegible]

[illegible] அவன் எவ்வளவு பெரிய வீரனாய் இருந்தும் என்ன ? அரத்தினால் அராவிக் கூராக்கிய வேற்படையைக் கொண்டவன்தான். இருந்தும் என்ன ? பாம்புக்கு இடம் தந்தான், அது அவனை வேரோடு சாயும்படி அழித்தது. வரம் கேட்டு வாங்கினாயே ! கற்பென்னும் வரம்பு ஒன்று உண்டு என்பதை எண்ணினாயா ? கணவன் உயிரையே விழுங்கி விட்டாயே ? பாவி, இன்னும் என்னத்தை விழுங்கப் போகிறாயோ ?

கவ்வு அரவு என இருந்தீர் கற்பெனும்
அவ்வரம்பு அழித்து உமை அகத்துளே வைத்த
வெவ் அரம் பொருத வேல் அரசை வேர் அறுத்து
இவ் வரம் கொண்ட நீர் இனி என் கோடிரோ ?'

என்று பேசி வருகின்ற பரதன், கைகேசி உயிரோடு இருப்பதைப் பார்த்து அது சகியாமல், 'நோய் உயிரை

உண்ணும், பார்த்திருக்கிறேன். ஆனால், உயிர் அழியும் போது அதுவும் அழிந்துவிடும். நீயோ, மன்னவன் உயிரைக் குடித்துவிட்டுக் கலங்காமல் இருக்கிருய். ஆகவே, நீ பேய்தான். ஏதோ உன் வயிற்றிலே என்னை வைத்துப் பெற்றுவிட்டாய். பால் ஊட்டி வளர்த்தும் விட்டாய். ஆனால், அதற்குப் பிராயச்சித்தமாக தீராத கொடும் பழியையும் எனக்குத் தேடிவைத்து விட்டாய். ...னும் அருமை மகனுக்கு என்ன தருவதற்காக ...ருயோ தெரியவில்லையே!' என்று நடுங்குகிருன்.

'நோயீர் அல்லீர் நும் கணவன் தன் உயிர் உண்டீர்
பேயீரே நீர் இன்னம் இருக்கப்பெறுவீரே
மாயீர் மாயா வன் பழி தந்தீர் முலை தந்தீர்
தாயீரே நீர் இன்னும் எனக்கு என் தருவீரே.'

'இராமன் தன்னைப்பற்றி என்ன எண்ணுவானே?' என்ற எண்ணம் பரதனை வாட்டுகிறது. 'தசரதன் இறந்துவிடுவான் என்பது தெரிந்திருந்தால் இராமன் காட்டிற்குப் போய் இருப்பானு? மாட்டான். கைகேசியின் சூழ்ச்சி என்ருல்தான் விளைந்ததென்று அவன் எண்ணியிருக்கவேண்டும். இல்லாவிட்டால் காட்டிற்குப் போயிருக்க மாட்டான். நான் என்ன செய்வேன்? எப்படி என் மனத்தை அவனுக்குத் திறந்து காட்டுவேன்?' என்று துடிக்கிருன். 'இராமன் என்னைப் பற்றித் தவருக எண்ணினுல் அதற்கு நியாயம் இருக்கிறது. அவன் காட்டிற்குப் போய்விட்டான் என்று தெரிந்தவுடனே நல்லவனுகிய தசரதன் உயிர்விட்டான், நான் உயிர் விடவில்லையே? இவளையும், இந்தக் கொடியவளையும் கொல்லவில்லையே? பிறகு அன்புடையவன்போல அழுதுவிட்டால் போதுமா? யார் இந்த அழுகையை நம்புவார்கள்?

'வில்லார் தோளான் மேவினன் வெங்கானகம் என்ன
நல்லான் அன்றே துஞ்சினன் நஞ்சே அனையாளைக்
கொல்லேன் மாயேன் ... ... ... ... ... ...
நல்லேனே யான் அன்புடையார் போல் அழுகின்றேன்.'

இந்த அன்பு உண்மையான அன்பு என்பதற்குத் தன்னையே சந்தேகிக்கும் இந்த மனப்பான்மையே

சாட்சி. இப்படித்தானே இறைவனுக்குத் தன்னை அர்ப்பணம் செய்து பெருவாழ்வு பெற்ற மாணிக்கவாசகர் உருகினார்? தன்னுடைய பக்தியை உண்மையானது என்று அவர் நம்பினாரா? இல்லையே!

'நாடகத்தால் உன்னடியார் போல்
நடித்து நான் நடுவே
வீடகத்தே புகுந்திடுவான்
மிகப் பெரிதும் விரைகின்றேன்'

என்று தன் அன்பை வெறும் நடிப்பாக அல்லவா அவர் கருதினார்? எல்லையற்ற இலட்சியத்தை நாடிச் செல்லும் உள்ளம் இப்படித்தான் தன் சாதனையில் அவநம்பிக்கை கொள்ளும். 'என் அன்பும் ஒரு அன்பா?' என்று பேசும்போதுதான் பரதனுடைய அன்பின் பெருக்கு நமக்குத் தெளிவாகிறது. அது கடலினும் பெரியது என்பது உறுதிப்படுகிறது.

இதை இன்னோர் இடத்திலும் காண்கிறோம். கங்கைக் கரையில் குகனைச் சந்தித்த பரதன் 'இராமன் இரவை எங்கே கழித்தான்?' என்று கேட்கிறான். 'இங்கேதான். இந்தக் கல்லின் மேலே பரப்பிய புல்தான் அவன் படுக்கை. இங்கேதான் அவன் இராப்பொழுதைப் போக்கினான்' என்கிறான் குகன். இதைக் கேட்டுப் பரதன் துடிக்கிறான். 'லக்ஷ்மணன் என்ன செய்தான்?' என்று கேட்கிறான். 'அவனா, ஊன்றிய வில்லோடு இரவு கழியும் வரையில் பெருமூச்சு விட்டுக்கொண்டு நின்றான். அவன் இரவு முழுதும் கண்ணை இமைக்க...

'வில்லை ஊன்றிய கையோடும் வெய்துயிர்ப் போடும் வீரன்
... ... ... ... ... ...கண்கள் நீர் சொரியக் கங்குல்
எல்லை காண்பளவும் நின்றான் இமைப்பிலன் நயனம்'

என்கிறான் குகன். பரதனுக்கு உடனே தன் அன்பின் குறைவுதான் தென்படுகிறது.

'லக்ஷ்மணனும் நானும் இராமனுக்குத் தம்பியராகப் பிறந்தோம். ஆனால், நான் இராமனுக்கு முடிவில்லாத

துன்பத்தைத் தருவதற்குக் காரணமாக அமைந்தேன். அவனோ அந்தத் துன்பத்தை நீக்குவதற்குத் துணையாக அவனோடு போனான். அவன் அன்புதான் எவ்வளவு அருமையானது? அதற்கு எல்லைதான் உண்டா? நானும் அன்புடையவன், இராமனுக்கு அடிமை என்று சொல்லிக்கொள்கிறேனே! அழகு!

யான் என்றும் முடிவிலாத
துன்பத்திற்கு ஏதுவானேன்
அவன் அது துடைக்க நின்றான்
அன்பத்துக்கு எல்லை உண்டே?
அழகு இது என் அடிமை'

என்று புழுங்குகிறான் பரதன்.

பரதனுடைய இராம பக்திக்கு இன்னொரு சாட்சி கைகேசியின் பேரில் அவனுக்கு ஏற்படும் கோபம். அக் கோபம் எப்படிப் பிரும்மாண்டமாய் வளர்கிறது என் பதைச் சிறிது பார்த்தோம். அதன் ஆகிருதியிலே பரத னுடைய அன்புதான் வெளியாகிறது. 'கோபம் என்பது அன்பின் மறுபுறம்' என்றார் கார்லைல் என்ற ஆங்கில ஆசிரியர். இந்தக் கருத்தையே 'மறத்திற்கும் அஃதே (அதாவது அன்பே) துணை' என்று குறிப்பிட்டார் தமிழ் வள்ளுவர். இது எவ்வளவு உண்மை என்பதை இராம னிடத்தில் உள்ள ஈடுபாட்டின் காரணமாகப் பரத னுடைய உள்ளத்திலிருந்து வெடித்து எழும் கோபம் காட்டுகிறது. அந்தக் கோபம் ஆறவே இல்லை. தன் னுடன் வந்த தாயார் மூவரையும் குகனுக்கு அறிமுகப் படுத்தி வைக்கும்போது பரதன் கைகேசியைப்பற்றி என்ன சொல்லுகிறான், தெரியுமல்லவா? 'இவளை யாரென்று கேட்க வேண்டுமா? முகத்தைப் பார்த்தாலே தெரியவில்லையா? இந்தத் துன்பத்திற்கெல்லாம் காரண மானவள். பழி என்ற ஒன்றை—எல்லோரும் வெறுத்து ஒதுக்கும் அதை—விருப்பத்துடன் பேணி வளர்க்கும் செவிலித்தாய். தன் பாவி வயிற்றில் பிறந்த எனக்கும் உயிர் தேயும்படி செய்த தாய். உலகத்தில் உள்ள உயிர்கள் இராமன் காட்டிற்குப் போனதை எண்ணி

வருத்தத்தில் ஆழ்ந்திருக்க, இவள் ஒருத்தி மட்டும் சிறிதும் கவலையில்லாத முகத்தோடு இருக்கிறாளே, இதைப் பார்த்தாலே தெரியவில்லையா? இவள்தான் என்னைப் பெற்றவள்.

படர் எலாம் படைத்தாளைப் பழிவளர்க்கும்
 செவிலியைத் தன்பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலம் கிடந்தேற்கும்
 உயிர்ப்பாரம் குறைந்து தேய
உடர் எலாம் உயிர்இலா எனத்தோன்றும்
 உலகத்தே ஒருத்தி யன்றே
இடர் இலா முகத்தாளை அறிந்திலையே
 இங்நின்றாள் என்னை ஈன்றாள்.'

இந்த வெறுப்பிலும், கோபத்திலும், பரதனுடைய உள்ளத்தில் அணையாத ஜோதியாகச் சுடர்விடும் அன்பைத்தான் காண்கிறோம். என்ன இருந்தாலும் கைகேசி தாய் அல்லவா? குகனுடைய முன்னிலையில், மற்றவர்களும் இருக்கும்போது அவளை இப்படி இழிவு படுத்திப் பேசலாமா என்ற எண்ணம் காவியத்திலே தோய்ந்து வரும்போது நமக்குத் தோன்றவேயில்லை. ஏன்?

## குறை மறைந்தது

'அதோ பாருங்கள், தெரியவில்லையா?' என்றார் நண்பர். எனக்குத் தெரியவில்லை. வானத்தில் வெண் மேகங்கள் சிதறிக் கிடந்தன. நீலமும் வெண்மையும் கலந்த அந்த வெளியில் புறா பறந்து வந்தது, என் கண்ணில் முதலில் தென்படவில்லை. நண்பர் சுட்டிக் காட்டிய பிறகுதான், புறாவின் வடிவம் என் கண்ணுக்குத் தெரிந்தது. புறாவின் நீலமும் வெண்மையும் வானத்தின் வர்ணங்களோடு ஒத்து இருந்ததுதான் இதற்குக் காரணம். ஆனால், இதே புறா இருண்ட மழை வானில் பறந்து வந்திருந்தால், பளிச்சென்று என் கண்ணுக்குத் தோன்றி இருக்கும். அப்போது புறாவின் மங்கலான நீல வர்ணம் நல்ல வெண்மையாகக்கூடக் காட்சியளித்திருக்கும்.

மனமும் இந்த வகையில் கண்ணைப் போன்றதுதான். ஒருவரிடத்திலே அன்பினுல் மனம் நிறைந்திருக்கும் போது அவருடைய குற்றம் எளிதில் நமக்குப் புலனுவதில்லை. ஆனுல், அதற்கு மாருக வெறுப்பு இருந்ததென்ருல், சிறு குற்றம்கூட மிகப் பெரியதாகத் தோன்றும்.

முதலில் கைகேசியைக் கவனிப்போம். கூனி அவள் மனத்தைக் கலக்க முற்பட்டபோது, 'இராமனைப் பெற்ற எனக்குக் குறையேது?' என்று கேகேசி பேசுகிருள் அவளை 'ஆழ்ந்த பேர் அன்பினுள்' என்று கம்பர் குறிப்பிடுகிருர். இராமனுக்கு மகுடாபிஷேகம் என்று கேள்விப்பட்டதும் அவளுடைய மகிழ்ச்சி இராமனுடைய தாயாகிய கோசலையின் மகிழ்ச்சியை ஒத்திருந்தது. இராமனை மாற்ருள் மகனுக அவள் எண்ணவில்லை. இதைக் கம்பர் நமக்கு நேரடியாகவும் சொல்கிருர். அதோடு இப்படி அவள் இருந்ததற்குக் காரணம், தசரதன் அவள் மனத்தில் இடம்பெற்றிருந்ததுதான் என்றும் குறிப்பிடுகிருர்.

' ... ... ... ... மங்கை உள்ளமும்
ஆற்றல் சால்கோசலை அறிவும் ஒத்தவால்
வேற்றுமை உற்றிலள் வீரன்தாதை புக்கு
ஏற்ற அவள் இருதயத்து இருக்கவே கொலாம்'

வேற்றுமையில்லாத உள்ளத்தில் அன்பை வளர்த்த இந்தக் கைகேசியை,

'ஆயபேர் அன்பெனும் அளக்கர் ஆர்த்து எழ
தேய்வுஇலா முகமதி விளங்கித் தேசுஉற'

என்றும், 'தூயவள்' என்றும் கம்பர் பேசுவது பொருத்தமாக இருக்கிறது. கூனியின் சூழ்ச்சியினுல் கைகேசியின் மனம். மாறும்போது 'அடடா, கைகேசியின் மனமும் திரிந்துவிட்டதே' என்ற இரக்கம் நமக்கு ஏற்படும்படியாகக் கவிஞர் செய்கிருர்.

'நீயமந்தரை இவ்வுரை செப்பலும் தேவி
தூய சிந்தையும் திரிந்தது'

என்று தொடங்குகிற கவிஞர், 'இதற்குத் தேவர்கள் மாயமும் அந்தணர் இயற்றிய தவமும் தவிர வேறு எதைக்

காரணமாகச் சொல்லமுடியும்?' என்று முடிவு கட்டுகிருர். அதோடு இப்படிச் சூழ்ச்சியின் விளைவாகக் கைகேசி தன் இரக்கத்தை இழந்ததல்லவா, இராவண வதத்திற்கும் இராமனுடைய அழியாத புகழுக்கும் அடிகோலியது என்றும் நமக்கு ஞாபகப்படுத்தி, கைகேசியின் தவற்றைப் பரிவோடு நாம் பார்ப்பதற்குத் தூண்டுகிருர்.

இதுவரையில் கைகேசியின் கட்சியிலே நாம் நிற்கிறோம். அவள் பெருமையை உணர்ந்து அனுபவிக்கிறோம். அவள் வீழ்ச்சியை இரக்கத்தோடு பார்க்கிறோம். அதற்குக் காரணமாக இருந்த கூனியை விஷப் பாம்பாக எண்ணுகிறோம். அந்த வீழ்ச்சியும் கடைசியில் எல்லோருக்கும் நன்மையாகத் தானே முடியப் போகிறது என்று எண்ணி நம்மைத் தேற்றிக் கொள்ளுகிறோம். ஆனல், கைகேசியின் அரண்மனைக்கு அன்றிரவு தசரதன் வந்தவுடன் இந்த நிலைமை மெல்ல மாற ஆரம்பிக்கிறது. தசரதனுடைய அன்பு, கள்ளங் கபடற்ற தன்மை இவை இரண்டும் நம்மைக் கவர்கின்றன. 'முன்னே எனக்கு அளித்த இரண்டு வரங்களையும் தா' என்று கைகேசி கேட்டவுடன், 'இது என்ன பிரமாதம்?

வரங்கொள இத் துணை மம்மர் அல்லல் எய்தி
இரங்கிட வேண்டுவது இல்லை'

என்று தசரதன் பேசும்போது 'கைகேசியின் வஞ்சனை இவனுக்குத் தெரியவில்லையே' என்று கவிஞர் நம்மிடம் சொல்லுகிருர். கைகேசியின் பக்கத்திலே இதுவரை இருந்த நாம் இப்போது நம்மையும் அறியாமல் தசரதன் கட்சியில் சேர்கிறோம். பிறகு தசரதனுடைய துயரத்தையும், புழுப்போல அவன் துடிப்பதையும் பார்த்து, கைகேசி இவ்வளவு கொடியவளா என்று திகைக்கிறோம். 'ஆ கொடியாய்' என்றும், 'விஷம் பெண்ணாக வந்துவிட்டதா?

நச்சுத் தீயப் பெண்ணுரு அன்றோ

என்றும் தசரதன் பேசும்போது நியாயம் என்று நமக்குத் தோன்றுகிறது. இப்படிக் கைகேசியைப் பற்றி நம்

முடைய எண்ணம் மாறிவருவதைத் துரிதப்படுத்து கின்றவர் போலக் கைகேசியைக் 'கொடியாள்' என்றும் 'உள்ளப் புன்மை' உடையவள் என்றும் கவிஞர் குறிப் பிடுகிறார். 'உயிரை உண்ணுகின்ற நெருப்பைப் போன் றவள். நெருப்பாவது எரிந்து தணிந்து விடும். உயிரை எரிக்கின்ற கைகேசி என்ற இந்த நெருப்போ அணையாத நெருப்பு.

பாயும் கனலே போல் எரிந்து ஆறாதே இன்னுயிர்
உண்ணும் எரியன்னாள்'

என்று கைகேசிக்குக் கவிஞர் புதிய புதிய பட்டம் வேறு சூட்டுகிறார்.

பட்டாபிஷேகம் தடைப்படுகிறது. இதனால், அயோத்தி நகரம் துயரில் அழுந்துகிறது. இராமன் காட்டுக்குப் புறப்படுகிறான். இராமனைப் பிரியவேண்டுமே என்று கோசலை துடிக்கிறாள். முடிசூட்டு வைபவம் நின்றுவிட்டது என்று தெரிந்த லக்ஷ்மணன் பெரும் கோபங்கொண்டு காலத் தீயைப் போல் சீறுகிறான். 'ஒரு பெண்ணால் இது விளைந்ததா? உலகத்திலே பெண்களே இல்லாமற் செய்து விடுவேன்' என்று பொங்குகிறான். இராமனோ, கைகேசியினிடத்தில் சிறிதளவும் வருத்த மின்றி மகிழ்ச்சியோடு அவள் கட்டளையை ஏற்றுக்கொள் கிறான். 'பரதனுக்குக் கிடைக்கும் அரசு எனக்குக் கிடைத் ததைப் போலத்தானே' என்று மகிழ்கிறான்.

பெருந்தன்மையும், இதிலே ஈடுபட்ட அயோத்தி மக்கள் அனைவருடைய துயரமும், காவி யத்தின் மூலமாக நமக்குக் கிடைக்கின்ற அனுபவங்கள். இவற்றின் ஆதிக்கத்திலே இருக்கின்ற நமக்குக் 'கைகேசி நல்லவள்தான்! ஏதோ விதியின் விளை வினாலே அவள் மனம் மாறியது' என்ற எண்ணம் மறந்தே போகிறது. இதற்கிடையில் தசரதன் உயிர் விடுகிறான். நகரம் முழுவதும் துன்பத்தில் அழுந்து கிறது. 'அடி பாவி கைகேசி! உன்னாலல்லவா இவ் வளவு அலங்கோலமும்' என்ற எண்ணமே நம்முடைய மனத்தில் ஓங்கி நிற்கிறது.

நாம் அறியாமல் இந்த எண்ணம் வளர்வதற்கு இராமனுடைய பெருமை துணை செய்கிறது. கங்கைக் கரையில், குகனைச் சந்தித்து அவனைச் சகோதரனாக ஏற்றுக் கொண்ட அன்பு நம் நெஞ்சை அள்ளுகிறது. காட்டிற்குள்ளே இராமன், லக்ஷ்மணன், சீதை மூவரும் போகிறார்கள். சித்திரகூட பர்வதத்தை அடைகிறார்கள். லக்ஷ்மணன் பர்ணசாலை அமைக்கிறான். கல்லிலும் முள்ளிலும் சீதை நடந்து வந்ததையும், அரச குமாரனை லக்ஷ்மணன் பர்ணசாலை அமைத்ததையும் இராமன் கனிந்த மனத்தோடு பாராட்டுகிறான்.

'மேவு கானம் மிதிலையர் கோன்மகள்
பூவின் மெல்லிய பாதமும் போந்தன
தாவில் எம்பிகை சாலை சமைத்தன
யாவை யாதும் இலார்க்கு இயையாதவே.'

'ஒன்றுமில்லாதவர் ஆகிவிட்டோம். ஆகவே, நமக்கு எல்லாம் கைகூடுகிறது' என்று இராமன் பேசும் போதுதான் எவ்வளவு இரக்கம் நமக்கு உண்டாகி விடுகிறது!

இப்படியாக அயோத்தியின் துயரம், தசரதன் துடிப்பு, லக்ஷ்மணன் சீற்றம், குகனுடைய அன்பு, இராமனுடைய கனிவு இவற்றிலெல்லாம் தோய்ந்து, கைகேசியின் கட்சியிலிருந்து விலகி, அவள் செய்தது கொடுமை என்ற எண்ணத்தில் நாம் நிற்கிறோம். இது படிப்படியாக நிகழ்ந்த காரியம். அங்கங்கே கவிஞனுடைய அழுத்தமான சொற்கள், நாம் இந்த நிலைக்கு வருவதற்குத் துணைபுரிகின்றன.

நமக்குள்ள இந்த மன நிலைதான் கவிஞர் தரும் பரதனுடைய குணச் சித்திரத்திற்குப் பகைப்புலமாக அமைகிறது. இதனால் அவன் தாயைக் கடுமையாகப் பேசும்போது 'வேண்டும் வேண்டும்; இன்னமும் வேண்டும்' என்று எண்ணுகிறோம். பரதனுடைய இராம பக்தியில் ஈடுபட்டு விடுகிறோம். அவன் தாயைக் குறை கூறுகிறானே என்று எண்ணுவதற்கு இடம் இல்லாமல் போய்விடுகிறது, வெண் மேகம் படிந்த நீல வானத்தில் பறந்து வந்த புறா கண்ணுக்குத் தெரியாமல் இருப்பது போல.

ஆமாம், இதையெல்லாம் திட்டம் போட்டா கவிஞர் செய்தார் என்று கேட்கலாம். அது எப்படியோ, கவிதா விலாசம் நிறைந்த கவிஞனொருவன் பேசும்போது அவன் திட்டம் போடுகிறானோ அல்லது திட்டம் தானாகவே அமைகிறதோ, முடிவு ஒன்றுதான். காவியப் பாத்திரங்களை வெவ்வேறு பகைப் புலங்களில் நிறுத்தி அவர்களுடைய உன்னதத்திற்கோ அல்லது சிறுமைக்கோ கவிஞன் பிரமாதமான அழுத்தம் தந்துவிடுகிறான். நம்முடைய மனத்தைப் பக்குவமாகத் தயாரித்து அங்கே விதவிதமான பகைப்புலம் அமைக்கிறான். பரதனைப் பற்றியவரையில் கம்பர் திட்டம் போட்டுக்கூட எழுதினாரோ என்று சொல்லக்கூடிய வகையில் காவியத்தின் போக்கு அமைந்திருக்கிறது. குகனோடும் தாய்மார் மூவரோடும் படகிலே கங்கையைக் கடந்து செல்லும் காலத்தில் பரதன் கைகேசியைப் பற்றிக் கொடுமையாகப் பேசுவது நமக்குத் தெரியுமே, அவன் பேசுவதற்முன் கவிஞர் முந்திக்கொள்கிறார். பரதனுடைய பேச்சைவிடக் கடுமையாக அவர் பேச்சு வருகிறது. 'கைகேசியைப் பார்த்து 'இவள் யார்?' என்று குகன் கேட்க, பரதன் சொன்னான்' என்பதைக் கவிஞர் எப்படித் தெரிவிக்கிறார், பாருங்கள்:

'தன் துணைவனை மயானத்திற்கு அனுப்பினாள். மகனைத் துயரக் கடலிலே அழுத்தினாள். கருணைக் கடலாகிய இராமனைக் காட்டிற்குத் துரத்தினாள். மகா விஷ்ணு காலால் அளந்த இந்தப் பூமியை, தன் மனத்திலே நினைந்து செய்யும் கொடுமையால் அளந்தாள். யார் தெரியுமா? இந்தக் கைகேசிதான்' என்கிறார் கவிஞர்.

'சுடு மயானத் திடைத் தன் துணை யேகத்
தோன்றல் துயர்க் கடலின் ஏகக்
கடுமையார் கானகத்துக் கருணை
ஆர்கலி ஏகக் கழற்கால் மாயன்
நெடுமையால் அன்றளந்த உலகெல்லாம்
தன்மனத்தே நினைந்துசெய்யும்
கொடுமையால் அளந் தாள்.'

எப்படி இருக்கிறது! இவரேதான் கைகேசியை 'ஆழ்ந்த பேரன்பினள்' என்றும், 'ஆயபேர் அன்பெனும் அளக்கர் ஆர்த்தெழும்' உள்ளத்தவள் என்றும், 'வேற்றுமை உற்றிலள்' என்றும் பேசியவர். முன்பின் சம்பந்தமில்லாமல், முன்னே சொன்னதற்கு விரோதமாகக் கவிஞர் பேசுகிறாரா என்றால், இல்லை. காவியக் கதை நிகழ்ந்து வரும்போது நம்முடைய மனத்தை வெவ்வேறு பாத்திரங்களோடு ஒட்டவைத்து, நம்முடைய பரிவின் கதியை மாற்றி மாற்றி யமைத்து, பாத்திரங்களுக்கு அதன் மூலமாகப் புதிய தோற்றத்தின் வண்ணத்தைத் தருவதுதான் கவிஞனுடைய மேதை. அதை இங்கே அனுபவிக்கிறோம். அதனால்தான் குற்றமற்ற இராம பக்தனாக மட்டும் நம்முடைய மனத்திலே பரதன் நிற்க முடிகிறது.

## சோதனை இரண்டு

'இந்தக் கொடுமனப் பாவியின் பக்கத்தில் இருக்க மாட்டேன்' என்று கைகேசியை உதறித் தள்ளிவிட்டு, கோசலையைக் காண பரதன் போகும்போது, நாமும் போகிறோம். கோசலையைக் கண்டவுடன் அவள் அடியிலே விழுந்து பரதன் புலம்புகிறான். கோசலையின் பேரில் 'ஏன் ராமன் காடு செல்வதைத் தடுக்கவில்லை?' என்று குற்றம் சாட்டுகிறான்.

'அடித்தலம் கண்டிலென் யான் என் ஐயனை
படித்தலம் காவலன் பெயரற் பாலனோ ?
பிடித்திலிர் போலும் நீர் பிழைத்தீர்'

பரதனுடைய பரிசுத்தமான உள்ளம் கோசலைக்குப் பளிச்சென்று புலப்பட்டு விடுகிறது. தளர்ந்த மனத்துடன் 'அப்பா, பரதா, கைகேசி செய்த வஞ்சகச் செயல் உனக்குத் தெரியாதுபோல் இருக்கிறது.

கைகயர் கோன் மகள் இழைத்த கைதவம்
ஐய நீ அறிந்திலை போலும்'

என்கிறாள்.

அவ்வளவுதான். பரதனுக்கு அளவில்லாத வருத்தம் ஏற்பட்டுவிடுகிறது. கோசலையின் வார்த்தைகளில், கைகேசியின் சூழ்ச்சி பரதனுக்கு ஒரு சமயம் தெரிந்திருக்குமோ என்ற குறிப்பு இருக்கிறதல்லவா? 'உனக்குத் தெரியாது' என்று கோசலை சொல்லவில்லை. 'தெரியாது போல் இருக்கிறது' 'அறிந்திலைபோலும்' என்றே அவள் பேசினாள். தன் அன்பில் நம்பிக்கை இல்லாமல், தன்னையும் இராமனுடைய தம்பி என்று சொல்வது தகுமா ?

'நல்லேனே யான், அன்புடையார்போல் அழுகின்றேன்'

என்று கலங்கிய பரதனுக்கு, கோசலையின் வார்த்தையில் இருந்த சந்தேகக் குறிப்பு, தாங்கமுடியாத வேதனையைத் தந்துவிடுகிறது. அந்தத் துன்ப வெறியிலே அவன் கொடுமையான சபதம் செய்கிறான். கோசலை சந்தேகப் படுவதுபோல், கைகேசியின் சூழ்ச்சியில் தானும் தெரிந்து சம்பந்தப்பட்டிருந்தால், அதற்குத் தண்டனை யாக மிகக் கொடிய பாபங்களைச் செய்தவர் சேரும் கதி யில் தானும் போவதற்குச் சம்மதிப்பதாகப் பரதன் பேசு கிறான். ஒவ்வொரு சபதமும் பரதனுடைய இலட்சியம் ஒன்றைச் சுட்டிக் காட்டுகிறது. அதோடு கம்பருடைய காலத்தில் மக்கள் எதையெல்லாம் பாபமாகக் கருதி வந் தார்கள் என்பதையும் காவியத்தின் இந்தப் பகுதியிலே காணலாம்.

ஆனால், ஒரு பாட்டுப்போதும், பரதனுடைய துடிப்பை அறிவதற்கு. இதோ பரதன் பேசுகிறான்.

'தாய்பசி உழந்து உயிர் தளரத் தான் தனி
பாய்பெரும் பாழ்வயிறு அளிக்கும் பாவியும்
நாயகன் பட நடந்தவனும் நண்ணும் அத்
தீ எரி நரகத்துக் கடிது செல்க யான்'

எவ்வளவு கொடுமையான சபதம்! இப்படிப் பத்துப் பாடல்களில் பல சபதங்களைச் செய்து கள்ளமற்ற தன் மனத்தின் வேதனையைக் கொட்டுகிறான் பரதன். முன்னமேயே நமக்குத் தெரிந்த பரதனுடைய பரிசுத்த

மான தன்மை இன்னும் தெளிவாக நம்முடைய மனத்தில் பதிகிறது.

ஆனால், பரதனுக்குத்தான் இது எவ்வளவு கடுமையான சோதனை! இதோடு விட்டதா? கோசலை அவனை மனமார ஏற்றுக்கொள்கிறாள். 'இக்ஷ்வாகு வம்சத்தில் உனக்கு நிகரான தன்மை உடையார்

முன்னை நம்குல முதல் உளோர்கள்தாம்
பின்னை யாவரே நிகர்க்கும் நீர்மையார் '

என்று பாராட்டுகிறாள். என்றாலும், இன்னொரு சோதனை முளைக்கிறது. தசரதனுடைய உடலை யானைமேல் வைத்து மயானத்திற்கு எடுத்துச் செல்லுகிறார்கள். பிறகு சிதையில் ஏற்றுகிறார்கள். ஈமக்கடனைச் செய்து முடிக்கும்படி பரதனை ஏவுகிறார்கள். பரதனும் தசரதனுக்குச் செய்ய வேண்டிய சடங்குகளைப் புரிவதற்கு எழுந்திருக்கிறான். 'நில்' என்று தடுக்கிறான் வசிஷ்டன். கைகேசி மனம் இரங்காமல் இருந்ததைப் பார்த்துத் தசரதன் கூறிய வார்த்தைகளை வசிஷ்டன் மறக்கவில்லை. 'முனிவா, இப்போதே சொல்லி விடுகிறேன். இவள் என் மனைவி இல்லை. இவள் அரசனுக்க விரும்பும் பரதனையும் என் மகன் என்று கருதமாட்டேன். நான் இறந்தால் அவன் எனக்கு உத்தரக்கிரியை செய்வதற்குத் தகுதி உடையவன் அல்லன்.

சொன்னேன் இன்றே இவள் என்தாரம் அல்ல துறந்தேன்
மன்னே ஆவான் வரும் அப்பரதன் தனையும் மகன் என்று
உன்னேன், முனிவா, அவனும் ஆகான் உரிமைக்கு '

என்றல்லவா தசரதன் பேசி இருக்கிறான்! இதை ஞாபகத்தில் வைத்திருக்கும் வசிஷ்டன் 'அப்பா, பரதா, உன் தாய் செய்த தீமையால் உண்டான துன்பத்தில், அரசனாகிய தசரதன் உன் உறவை நிராகரித்துப் போனான்.

அன்னை தீமையால் அரசன் நின்னையும்
துன்னு துன்பத்தால் துறந்து போனான்.

நீ பிறந்ததனால் தலைமுறை தலைமுறையாக வந்த தருமம் சிதறிப்போயிற்று என்று அரசன் எண்ணியிருக்க வேண்டும்.

துறந்து போயினன் எனவே தோன்றல் நீ
பிறந்து பேர்அறம் பிழைத்தது என்றல் போல்.'

என்று முடிக்கிறான். இதை விடக் கொடுமையான செய்தி பரதனுக்கு ஏது? தாயின் மண்ணாசையால் இராமனைப் பிரிந்து, தந்தையை இழந்து, அதோடு தன் பிறப்புரிமையையும் இழந்து நிற்கிறான் பரதன். தசரதன் உடலுக்குச் சத்ருக்கனே கொள்ளி வைக்கிறான். இதைப் பார்த்துக்கொண்டு செயலற்று நிற்கும் பரதனுடைய உள்ளமே அந்தத் தீயில் வேகிறது.

## போகும் வழியில்

காட்டிற்குப் போய் வரலாம், வாருங்கள். இந்தக் காடு நமக்குப் புதியதன்று. அங்கே சென்று அபூத பயங்கரங்களான விராதனையும் கவந்தனையும் நாம் சந்தித்தது உங்களுக்கு ஞாபகமிருக்கும். காட்டிலேதான் வேதாந்தப் போர்வையைப் போர்த்திக் கொண்டு மாரீசன் என்ற மாயாவி பயத்தில் நடுங்கிக் குலைகிறான். அங்கேதான் கரன் என்ற புயல் வில் ஒன்றின் வளைவிலே ஒடுங்கியது. அதே காட்டில் இராவணசந்நியாசி தோன்றுகிறான்; சீதையின் தீனக் குரல் பரிபவத்தின் எல்லையைத் தொட்டது.

இதையெல்லாம் எண்ணும்போது, 'காடா, அப்பா, நமக்கு வேண்டாம்' என்று சொல்லத் தோன்றுகிறது. ஆனால், காட்டிலே இருளும் தீமையும் மட்டுமே பயிராகின்றன என்று சொல்ல முடியுமா? குகன் என்ற அன்பு விளக்கு காட்டில்தான் ஒளி வீசியது. ஜடாயுவின் தியாகம் அங்கேதான் தெய்வ மரணமாக மலர்ந்தது. பரத்வாஜனும், சரபங்கனும், அகத்தியனும், சபரியும் காட்டின் மோனத்தில்தான் ஆத்மாவின் குரலைக் கேட்

டனர். ருசியமுக மலைக் காட்டிலேதான் 'சொல்லின் செல்வனான' அனுமன் சொல்நலம் கடந்த சத்தியத்தைத் தொடுகிறான்.

ஆம்; வனத்தின் இருளிலும், அன்பும் அருளும் இல்லாமல் இல்லை. அது மாத்திரமன்று. இப்போது நாம் பரதனோடு—'செம்மை நன் மனத்து அண்ணல்' என்று கோசலை வாழ்த்தினாளே, அந்தப் புண்ணியமூர்த்தியோடு-காட்டிற்குப் புறப்படுகிறோம். போவதற்குத் தடை என்ன ?

'பரதா, தந்தைக்கு ஈமக்கடன் ஆற்றுவதற்கு உனக்கு உரிமை இல்லை. உன் தந்தையின் ஆணை இது' என்று பரதனைத் தடுத்து நிறுத்தினான் வசிஷ்ட முனிவன். பிறகு அந்த வசிஷ்டனே தருமத்தின் பெயரால் 'கோசல நாட்டின் மணி முடியை ஏற்றுக் கொள்' என்று பரதனை வேண்டுகிறான்.

' தருமமா ? பேஷ்! இருக்கும், இருக்கும். மூத்தவன் இருக்கும்போது இளையவன் அரசாள்வது தருமமாக ஏன் ஆகாது ? தாய் செய்த காரியம் அல்லவா ? அதில் தவறு இருக்குமா ? தவிர, உங்களைப் போன்ற முனிவர்கள் வேறு இதைத் தருமம் என்று சொன்ன பிறகு கேட்பானேன் ? அது தருமந்தான்.

மூன்று உலகினுக்கு ஒரு முதல்வனும் முதல்
தோன்றினன் இருக்க யான் மகுடம் சூடுதல்
சான்றவர் உரை செயத் தருமம் ஆயதே!
ஈன்றவள் செய்கையின் இழுக்கு உண்டாகுமோ ?

தருமந்தான். ஆனால், இந்தத் தருமம் என்னால் கடைப்பிடிக்கக் கூடியது அன்று. காட்டிற்குப் போய், இராமனைத் திரும்ப அழைத்துவந்து அவனுக்கு முடி சூட்டி மகிழ்வேன். இல்லாவிட்டால் அவனோடு காட்டிலேயே இருந்து தவம் செய்வதில் அழுந்திவிடுவேன். எதற்கும், உடனே காட்டிற்குப் புறப்பட வேண்டும். இராமனைச் சந்திக்க வேண்டும்' என்று முடிவு கட்டி விடுகிறான் பரதன்.

போகின்ற வழியிலே பரதனுடைய தன்மையைப் பளிச்சென்று எடுத்துக் காட்டும் சம்பவங்கள் நடைபெறுகின்றன. காட்டிற்குப் போகும் ஜனத்திரளைத் தள்ளிக் கொண்டு கூனியும் போகிருள். நகர வாசலுக்கருகில் இதைச் சத்துருக்கன் பார்த்து விடுகிருன்; உடனே மனம் கொதித்து, கொன்றுவிட வேண்டும் என்ற எண்ணத்தோடு அவளைப் பற்றுகிருன். பரதனுடைய இராமபக்தி சத்துருக்கன் போக்கைத் தடுக்கிறது. 'அவளை ஒன்றும் செய்யாதே. கேட்டால் ஐயன் கோபம் கொள்ளுவான். அவனுக்குத் துரோகம் செய்த இவள் பேரில் எனக்கும் வெறுப்பும் ஆத்திரமும் இல்லையா? இருந்தாலும் இவளைத் தண்டியாமல் விட்டு விட்டுப் போவதே நமது கடமை. அதுவே இராமனுடைய சித்தத்தின்படி நடப்பது.

வேதனைக் கூனியை வெகுண்டும் என்னினும்.
போதும் நாம்'

என்ற சத்துருக்கனை நல்ல வார்த்தை சொல்லி அழைத்துப் போகிருன் பரதன். பரதனுடைய தன்மை தெரிகிறதல்லவா? இராமனிடத்திலே எல்லையற்ற அன்பு; இது காரணமாக அவனுக்குத் தீமை செய்தவர்கள் பேரில்-அவர்கள் யாராக இருந்தாலும், தாயே ஆனாலும்-அளவற்ற கோபம்; தான் இராமனுடைய அடிமை. ஆகவே, அவன் சித்தத்தின்படி நடப்பதே தன் பொறுப்பு என்ற அடக்கம்; தனக்குத் தீமை இழைத்தவர்களிடமும் இராமன் கருணை காட்டுவான் என்ற நம்பிக்கை - இவையெல்லாம் பரதனுடைய குணங்கள். இவற்ருேடு இராமனைப் பிரியாமல் அவனோடு எப்போதும் இருக்க வேண்டும் என்ற தவிப்பு; இது நிறைவேருமல் இருப்பதால் உண்டான வேதனை; இந்த வேதனைக்கு மருந்து தேடவே காட்டிற்குப் போகிருன் பரதன்.

பரதனுடைய கரை காணுக் காதலின் அகண்டத்தைக் காட்டும் அன்புப் பேரொளியாகக் குகன் வருகிருன். இதை முன்னமேயே பார்த்திருக்கிரும். பரதனை
பிற் காண வந்த குகனை,

'உங்கள் குலத் தனி நாதற்கு உயிர்த் துணைவன்'

என்று சுமந்திரன் சொன்னவுடன் 'அப்படியா ? இராமனுடைய அன்புக்குப் பாத்திரமானவனா ? அப்படியானால் என்னை வந்து அவன் பார்ப்பதற்குள் நானே அவனைச் சென்று காண்பேன்.

மன் முன்னே தழீஇக் கொண்ட மனக்கு இனிய துணைவனேல்
என் முன்னே அவன் காண்பேன் யானே சென்று'

என்று உவகையோடு போகிறான் பரதன். குகனைச் சந்தித்தவுடன் 'இவன் ஏழை வேடன்தானே' என்ற எண்ணத்தின் சாயல்கூட பரதன் மனத்தில் எழவில்லை. குகனுடைய பாதத்தில் விழுந்து அவனை வணங்குகிறான். 'இங்கேதான் இராமன் படுத்திருந்தான்' என்று கல்லின் மேல் பரப்பிய புல்லினால் ஆகிய படுக்கையைக் குகன் காட்டியதும், பரதன் புழுப்போலத் துடிக்கிறான். 'என்னால் அல்லவா ராமனுக்கு இவ்வளவு துன்பமும் ?

இயன்றது என் பொருட்டினால்
இவ்இடர் உனக்கு என்ற போழ்தும்
அயின்றனை கிழங்கும் காயும்
அமிர்து என வலிய புல்லில்
துயின்றனை எனவும் ஆவி துறந்திலென்

என் அன்பும் ஒரு அன்பா ? என்னால் எனக்கு இவ்வளவு நஷ்டம் என்பது தெரிந்தும் உயிரை வைத்துக் கொண்டிருக்கின்றேனே ?' என்று புழுங்குகின்றான்.

பிறகு, இரவு முழுதும் தூங்காமல், வில்லை ஊன்றிய கையோடும், பெருமூச்சோடும், லக்ஷ்மணன் காவல் காத்து நின்றான் என்று குகன் சொல்ல, 'அவன் அல்லவா தம்பி ! நானும் தம்பிதான்; ஆனால், இராமனுக்குத் துன்பம் விளைக்கவே பிறந்தேன். அவனோ வரம்பில்லாத தன் அன்பினால் இராமனுடைய துன்பத்தைத் துடைக்கிறான்.

இராமனுக்கு இளையார் என்று
முன்பு ஒத்த தோற்றத்தேயில்
யான் என்றும் முடிவிலாத
துன்பத்திற்கு ஏதுவா னேன்
அவன் அது துடைக்க நின்றான்.

நானும் இராமனுக்கு அடிமை என்று சொல்லிக் கொள்ளுகின்றேனே வெட்கமில்லாமல்' என்று தன்னையே வெறுத்துக் கொள்கிறான்.

உடனே இராமனைக் கண்டு அவன் அடியில் வீழ்ந்து தன் பாபத்தைப் போக்கிக் கொள்ளவேண்டும் என்ற ஆசை மூள்கிறது. 'வேடர் தலைவனே! இந்தக் கங்கை யாற்றைக் கடக்க உதவி செய்து எங்களை அக்கரை சேர்த்து விட்டாய் என்றால், துயரக் கடலில் இருந்து எங்களைக் கரையேற்றியவன் ஆவாய். இராமனிடத்தில் எங்களைச் சேர்த்தவனும் ஆவாய்.

இவ்விடைக் கங்கையாற்றின் ஏற்றினை ஆயின் எம்மை
வெவ் இடர்க் கடலின் ஏற்றி வேந்தன்பால் விடுத்தது'

என்று வேண்டிக் கொள்கிறான். அவ்வளவுதான். ஓடங்கள் வந்து குவிகின்றன. பரதனுடைய சைன்யம் கங்கையைத் தாண்டுகிறது. பரதனும் ஓடத்தில் ஏறிப் போகிறான். அக்கரை சேர்வதற்குள் அவனுடைய மனநிலையைக் காட்டும் சம்பவம் ஒன்று நடைபெறுகிறது. சேர்ந்த பிறகும், அதே போன்ற இன்னொரு சம்பவம் ஏற்படுகிறது. பரதனை நாம் உணர்வதற்கு எத்தனை விதமான சூழ்நிலைகளைத்தான் கவிஞன் அமைத்துத் தருகிறான்!

## நிகழ்ச்சி விளக்குகள்

காட்டிற்குப் போகும் வழியில் இரு நிகழ்ச்சிகள் பரதனுடைய உள்ள நிலையைக் காட்டும் விளக்குகளாக அமைகின்றன.

கங்கையாற்றின் பரந்த வெள்ளத்தைக் கடந்து, குகன் செலுத்தும் தோணி போகிறது. தோணியில் பரதனும், கோசலை, சுமித்திரை, கைகேசி ஆகிய தாய்மார் மூவரும் இருக்கின்றனர். இப்போதுதான் குகனுக்குத் தசரதன் மனைவியர் மூவரையும் இன்னார் என்று தெரிந்து கொள்ளச் சந்தர்ப்பம் கிடைக்கிறது. இதை அவன் பயன்படுத்திக் கொள்கிறான். இதன் மூலமாகப் பரத

னுடைய உள்ளத்தை இன்னும் ஒருமுறை காண்பதற்கு நமக்கும் வாய்ப்புக் கிட்டுகிறது.

கோசலையைப் பார்த்து 'யார் இவர்?' என்று பரதனைக் கேட்கிறான் குகன். பரதன் சொல்வதைக் கேளுங்கள் :

'வேந்தர் வைகும்
முற்றத்தான் முதல் தேவி மூவுலகும்
ஈன்றானை முன் ஈன்றானைப்
பெற்றத்தால் பெறும் செல்வம்
யான் பிறத்தலால் துறந்த பெரியாள்

தசரதன் என்ற பேரரசனுடைய முதல் தேவி; விஷ்ணுவின் அவதாரமாகிய இராமனைப் பெற்ற பெருஞ் செல்வத்தை, பாவி நான் ஒருவன் பிறந்தேன் அல்லவா, அதனால் தானாகவே விட்டுக் கொடுத்த பெரியவள்' என்கிறான் பரதன். தனக்குக் கிடைத்த அளக்க முடியாத செல்வத்தைத் துறவியைப் போல ஒதுக்கிய கோசலையின் பெருமையைப் பேசும் பரதன், அந்தப் பேச்சின் மூலமாக தன் இராம பக்தியையும், தன்னால் அல்லவா கோசலைக்கு இவ்வளவு துயரம் ஏற்பட்டது என்ற வேதனையையும் காட்டி விடுகிறான். இது போலவே, சுமித்திரையைக் குகனுக்கு அறிமுகம் செய்விக்கும்போது, 'எல்லோரும் வணங்குதற்கு உரிய ஒப்பற்ற தலைவனாகிய இராமனுக்குத் தம்பி ஒருவன் இருக்கிறான் என்பது அவனைப் பிரியாமல் உடன் சென்ற லக்ஷ்மணன் மூலமாக அல்லவா தெரிகிறது? நானும் தம்பி, அவனும் தம்பி, என்றால் சரியாகிவிடுமா ? அவன் அன்புக்கு நிகரேது ? அவனைப் பெற்ற பெரியவள் இந்தச் சுமித்திரை.

யாவர்க்கும் தொழுகுலமாம் இராமன் பின்பு
பிறந்தானும் உளன் என்னப் பிரியாதான்
தனைப் பயந்த பெரியாள்'

என்று பரதன் பேசுகிறான். இராமனை விட்டுப் பிரிந்திருக்கிறோமே என்பதில் பரதனுக்கு உள்ள ஏக்கம் இங்கே பளிச்சென்று வெளியாகிறது.

கடைசியாக, கைகேசியைப் பற்றிக் குகனிடம் பேசும் பரதனுடைய பேச்சில் ஆத்திரமும் கசப்பும் கடலைப் போல் விம்முகின்றன. கைகேசியைப் பார்த்து'இவர் யார்' என்று கேட்டுவிடுகிறான் குகன். அவ்வளவுதான். மலையாகத் திரண்டு வருகிறது பரதனுடைய கோபம். 'இவளா ? துன்பத்திற்கெல்லாம் ஆதிகாரணம் இவளே. உலகத்திலே குற்றத்தையும், பாவத்தையும் தங்களுடையது என்று ஒப்புக் கொள்ள எல்லோரும் அஞ்சுவார்கள். இப்படி எல்லோராலும் கைவிடப்பட்ட பழி என்ற அனாதைக் குழந்தையை இந்தப் புண்ணியவதி எடுத்து வளர்த்தாள். என்னைத் தன் வயிற்றிலே பிறந்தவன் என்று எண்ணினாளா ? என் உயிர் துளித் துளியாய்க் கரைந்து போகும்படி, என்னைச் சாகாமல் சாக வைக்கும் புண்ணியத்தைக் கட்டிக்கொண்டாள். இவளைப் பார்த்ததுமே உனக்கு யார் என்று தெரியவில்லையா? இராமன் காட்டிற்குப் போய்விட்டான் என்பதனால் உலகம் முழுவதும் பொலிவிழந்து நிற்கும் இந்த நிலையில், இவள் ஒருத்தி மாத்திரம் பிரசன்னமான முகத்தோடு நிற்கிறாளே, இதைப் பார்த்தாவது இவள் என்னைப் பெற்ற பாக்கியவதி என்பதைத் தெரிந்து கொள்ளக் கூடாதா ?

படர் எலாம் படைத்தாளைப்
  பழிவளர்க்கும் செவிலியைத் தன் பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலம் இருந்தேற்கும்
  உயிர்ப் பாரம் குறைந்து தேய
உடல் எலாம் உயிர் இழந்த எனத் தோன்றும்
  உலகத்தே ஒருத்தியன்றே
இடர் இலா முகத்தாளை உணர்ந்திலையே
  இந் நின்றாள் என்னை ஈன்றாள்'

இப்படிப் பேசுகிறான் பரதன். எவ்வளவு கொடுமையான வார்த்தைகள் ! கேட்கும்போது நம்மை என்னவோ செய்கின்றன. இந்தக் கடூரமான வாக்கின் மூலமாக வெளியாகும் பரதனுடைய கோபம் அவனுடைய அன்பின் மறுபுறம் என்பது நமக்குத் தெரியும். ஆகவே தாயைப் பற்றி இப்படிப் பேசுகிறானே என்று

நாம் அவ்வளவாக நினைப்பதில்லை. அதோடு பரதனுடைய கடுமையான சொற்களைக் கேட்பதற்கு அச்சொற்களுக்கு முந்திய பாட்டின் மூலமாகக் கம்பர் நம்மைத் தயார் செய்தும் விடுகிருர். அந்தப் பாடல் கம்பருடைய வாக்காக அமைந்திருக்கிறது. அதாவது கதாபாத்திரங்களின் மூலமாகப் பேசாமல் கம்பரே நேரடியாகப் பேசுகிருர். என்ன சொல்கிருர், கேட்போம்: கைகேசியைப் பார்த்து, 'இவர் யார்' என்று குகன் கேட்டான் என்று சொல்ல வருகின்ற கவிஞர், திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவர் போல கைகேசியைப் பற்றிக் குற்றப் பத்திரிகை ஒன்றையே படித்துவிடுகிருர். 'தன் கணவனே மயானத்திற்கு அனுப்பினுள். மகனைத் துயரக் கடலில் அழுத்தினுள். கருணைக் கடலாகிய இராமனை ஈவிரக்கமில்லாமல் காட்டிற்குத் துரத்தினுள். ஏதோ உலகை எல்லாம் மகா விஷ்ணு அளந்ததாகச் சொல்லுகிருர்களே, திரிவிக்கிரம அவதாரம் எடுத்து அல்லவா அவனுல் அதைச் செய்ய முடிந்தது, அந்தப் பரந்த உலகத்தைத் தன் நெஞ்சிலே நினைந்து செய்கின்ற கொடுமையால், மிக எளிதாக இந்தப் பெரியவள் அளந்து விட்டாள். வேறென்ன வேண்டும் இவள் பெருமைக்குச் சாட்சி ? இப்படிப்பட்டவளைப் பார்த்து 'இவர் யார்' என்று குகன் கேட்க, அரசகுமாரனுன பரதன் சொல்லலுற்ருன்' என்ற பொருளில் கம்பருடைய பாட்டு வருகிறது:

சுடு மயானத்திடை தன் துணே ஏகத்தோன்றல்
துயரக் கடலின் ஏக
கடுமை ஆர்கானகத்துக் கருணே ஆர்கலி ஏகக்
கழற்கால் மாயன்
நெடுமையால் அன்று அளந்த உலகு எல்லாம்
தன்மனத்தே நினேந்து செய்யும்
கொடுமையால் அளந்தாளே 'யார்இவர்'
என்று உரை செய்யக்குரிசில் கூறும்.

இந்தப் பாட்டுக் காதில் ஒலித்துக்கொண் டிருக்கும் போதே, பரதன் பேசுகிருன். ஆகவே அவன் பேச்சில் உள்ள கொடூரம் நமக்கு இயற்கையாகப் படுகிறது.

'அதில் என்ன தவறு?' என்று எண்ணும்படி நம்முடைய மன நிலையைத் தயார் செய்துவிடுகிறார் கவிஞர்.

கங்கையைக் கடந்து, ஒரு நாட்பொழுது பிரயாணம் செய்து, பரதனோடு பரத்துவாச முனிவனுடைய ஆசிரமத்தை அடைகிறோம். அங்கேயும் பரதனுக்கு ஒரு சோதனை. 'தானாகவே உன்னை வந்து அடைந்த சாம்ராஜ்யத்தை ஆளாமல் சடை முடியும், மரவுரியும் தரித்துக் காட்டிற்கு நீ வந்த காரணம் என்ன?' என்று பரத்துவாசன் பரதனைக் கேட்கிறான். 'முனிவனே, நல்ல கேள்வி இது, ஏதோ என் கடமையிலிருந்து நான் தவறிவிட்டதாக நீ நினைப்பது போல் அல்லவா இருக்கிறது? இது நியாயமா? அறிஞனாகிய உனக்கு உகந்ததா?

எனக்கு அடுப்பது செய்திலை என்ற சொல்
உனக்கு அடுப்பது அன்றால் உரவோய்'

என்று பரத்துவராசனுடைய அறிவையே சந்தேகிக்கும் தோரணையில் தொடங்கும் பரதன், தன் கடமை எது என்பதைத் தெளிவாகச் சொல்கிறான். 'அரசு இராமனுடையது. அதை ஏற்பதற்கு எனக்கு உரிமை இல்லை. அப்படி ஏற்பது முறைமைக்கு விரோதம். இதைச் செய்வதா என் கடமை? நல்ல வேடிக்கை! தன்னுடைய அரசை இராமனே ஏற்றுக்கொள்ள வேண்டும். அவன் மறுத்தால் நான் என்ன செய்யவேண்டும் என்பது எனக்குத் தெரியும். அவனோடு காட்டில் தங்கிவிடுவேன். அவ்வளவுதான்.

மறையின் கேள்வற்கு மன் இளம் தோன்றல் பின்
முறையின் நீங்கி முழு நிலம் கொள்கிலேன்
இறைவன் கொள்கிலனும் எனில் ஆண்டு எலாம்
உறைவன் கானத்து ஒருங்குடனே'

என்று பரதன் பேசுவதைக் கேட்டதும், பரத்துவாசனுக்கும் மற்றைய முனிவர்களுக்கும் உள்ளம் குளிர்ந்துவிடுகிறது. நம்முடைய மனமும் கனிகிறது. பரதன்

என்ற இந்தத் தியாகமூர்த்தியின் எண்ணம் நிறைவேறுமா என்று கவலைப்படுகிறோம். இந்தக் கவலையோடு சித்ர கூடத்தை நோக்கி அவனைத் தொடர்ந்து செல்கிறோம்.

## பிரிவுக்கு மருந்து

பிரிவுக்கு மருந்து தேடிச் சித்திரகூட மலையை நெருங்குகிறான் பரதன். அவன் வருவதைப் பாருங்கள் :

'தொழுது உயர் கையினன் துவண்ட மேனியன்
அழுது அழி கண்ணினன் அவலம் எது என
எழுதிய படிவம் ஒத்து எய்துவான்'

வந்தவன் இராமனை நெருங்கியதும், 'தருமத்தை நீ நினைக்க வில்லை. தருமம் போகட்டும். என் போன்றவர்களிடம் நீ காட்டுவாயே, அந்த அருளையும் கைவிட்டு விட்டாய். முறைமை என்று ஒன்று உண்டே, அதையாவது பின்பற்றினையா, அதுவும் இல்லை' என்று தன்னை விட்டு இராமன் பிரிந்து சென்ற கொடுமையை இராமனுடைய குற்றமாகவே பேசத் தொடங்குகிறான் :

'அறந்தனை நினைந்திலை அருளும் நீத்தனை
துறந்தனை முறைமையும் என்னும் சொல்லினான்'

அளவிறந்த அன்பும் வேதனையும் இப்படித்தான் பேசும். உண்மையான அன்பாகுல், உடனே அந்தப் பேச்சும் ஒடுங்கிவிடும். 'இப்படி அக்கிரமம் செய்யலாமா?' என்று பேச ஆரம்பிக்கும் பரதனுக்கு, இராமனை அடைந்து விட்டோம் என்ற பரவசத்தில் மேலே ஒன்றும் பேச முடியவில்லை.

'மறந்தனன் மலரடி வந்து வீழ்ந்தனன்.'

பிரிந்திருந்தபோது இருந்த தாபமும், அதனால் ஏற்பட்ட காரண காரிய விசாரமும் மறைந்து விடுகின்றன. இராமனைக் கண்டுவிட்டான் அல்லவா, அதைத் தவிர மற்ற எல்லாவற்றையும் மறந்து அவன் அடியிலே விழுந்து விடுகிறான்.

இராமனைப் பிரிந்திருந்தபோது அனுபவித்த துன்பமும், கோபமும், 'தசரதன் சௌக்யமாய் இருக்கிறானா ?'

என்று இராமன் கேட்டவுடனேதான் மறுபடியும் பரதனுக்குத் திரும்புகின்றனர். 'தசரதன் இறந்து விட்டான்' என்று சொல்ல வரும் பரதன் அதை எப்படிச் சொல்கிருன், கேளுங்கள் :

'ஐய நின்
பிரிவு எனும் பிணியினுல் என்னைப் பெற்ற அக்
கரியவள் வரம் எனும் காலனுல் தனக்கு
உரிய மெய் நிறுவிப் போய் உம்பரான்'

தசரதன் இறந்ததற்குக் காரணம் உண்மையில் இவை தாம்; அதாவது, இராமனைப் பிரிந்ததும், அதை விளைத்த கைகேசி வரமும். ஆனுல், இது பரதனுக்கு நேரில் தெரியுமா? தெரியாது. பிறகு? பிறகென்ன, தன்னைக் கொண்டே தசரதனுடைய மனத்தை அளக்கிருன் பரதன். அவனுக்குத் தெரியும், பிரிவு என்னும் பிணியினுல் வரும் தாங்க முடியாத துயரம். கைகேசி 'கரியவள்' என்பதும், 'உலகையெல்லாம் தன் மனத்தே நினைந்து செய்யும் கொடுமையால் அளந்தவள்' என்பதும், அவள் வரம் யமனுக வந்து முடிந்தது என்பதும் பரதனுடைய தீர்மானம். தன் அனுபவத்தையே தசரதனுடைய அனுபவமாகவும் அவன் சாவிற்குக் காரணமாகவும் பரதன் காண்கிருன். அவன் உள்ளம் இப்போது எவ்வளவு தெளிவாகத் தெரிகிறது!

தசரதன் இறந்தான் என்பதைக் கேட்டதும் இராமன் படும் துயரமும், சீதையின் துடிப்பும் நெஞ்சை அள்ளுகின்ற பகுதிகள். ஆனுல், பரதனுடைய பண்பை ஆராய்ந்து செல்லும் நமக்கு, அவற்றை அனுபவிக்க இப்போது நேரமில்லை. விதிப்படி செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து முடித்த பிறகு, இராமன் பரதனைப் பார்த்து, 'எல்லாம் சரிதான். நீ இந்தத் தவக்கோலம் பூண்டு வருவானேன் ?' என்று கேட்கிருன் :

'வரதன் துஞ்சினுன் வையம் ஆணையால்
சரதம் நின்னதா மகுடம் தாங்கலாய்
விரத வேடம் நீ என்கொல் வேண்டுவான்
பரத கூறு.'

'விரத வேடமா? ஆம். அது வெறும் வேடந் தானே? என் போன்றவர்களுக்குத் தவம் செய்ய உரிமை ஏது? மனைவி என்னும் பதவிக்குத் தகுதியில்லாதவளாய், பொல்லா வரம் ஒன்று கேட்டு, உனக்குப் பொருந்தாத இந்தக் காட்டிலே உன்னை விரட்டி, தசரத சக்கரவர்த்தி யையும் கொன்றாளே புண்ணியவதி ஒருத்தி, அவள் மகனாகிய எனக்குத் தவம் வேறா?

மனைக்கு ஒன்றாதவள் வரத்தில் நின்னையும்
நினைக்கு ஒன்றா நிலை நிறுவி நேமியான்
தனைக் கொன்றாள் தரும் தனையன் ஆதலால்
எனக்கு ஒன்றா தவம் அடுப்பது எண்ணினால்

ஆனாலும் என்ன செய்வேன்? சாகவும் வழி தெரிய வில்லை. தவம் செய்யவும் முடியவில்லை. எப்படி இந்தப் பழியிலிருந்து கரை ஏறுவேன்?

சாவது ஓர்கிலேன் தவம் செய்வேன் அலேன்
யாவதாக இப்பழி நின்று ஏறுவேன்'

என்று பரதன் கலங்குகிறான். 'திரும்பி வந்து விடு. அயோத்திக்குத் திரும்பி வந்து தசரதனுக்கு ஏற்பட்ட கொடுமையும், தாய் செய்த தீமையும் நீங்கும்படி அரசு செய்' என்று மன்றாடுகிறான்.

இராமனை அசைக்க முடியுமா? வசிட்டனும் ஏதோ சொல்லிப் பார்க்கிறான். இராமனுடைய பதில் அவனையும் வாயடைத்து விடுகிறது. 'சரி. அயோத்திக்கு நீ வராவிட் டால் என்ன? எனக்கு வேண்டியதெல்லாம் பிரிவுக்கு மருந்துதானே? உன்னோடு இருப்பதுதானே எனக்குத் தேவை? அயோத்தியில் ஒன்றாக இருந்தால் என்ன? இங்கே இருந்தால் என்ன? யார் வேண்டுமானாலும் அரசாளட்டும், எனக்கென்ன? நான் உன்னோடு காட் டில் இருந்து விடுகிறேன். இது சத்தியம்.

அனையதே ஆண்டவர் ஆள்க நாடு யான்
பனி படர் காடு உடன் படர்தல் மெய்'

என்று முடித்து விடுகிறான்.

பரதனுடைய அன்பு இராமனுக்கு நன்றாகத் தெரியும். இராமனும் இப்போது அந்த அன்பின் பெருக்கைக்கண்டு

அதிசயப்படும் நிலை ஏற்பட்டுவிட்டது. பரதனுடைய பக்தியையே இராமன் பயன்படுத்திக் கொள்ளுகிறான். 'நல்லது. என்னோடு வந்து விடுவாயா? அப்படியானால் நான் சொல்லும் ஆணையைத் தட்டமாட்டாய். இல்லையா? நான் உன்னை வேண்டிக்கொள்ளுகிறேன்.

யான் உனை இரந்தனன் நீ என் ஆணையால்
ஆனதோர் அமைதியின் அளித்தி பார்'

என்று பரதனுடைய கையைப் பிடித்துக்கொண்டு இராமன் பேசியதும், பரதனுக்கு ஏற்றுக்கொள்ளுவதைத் தவிர வேறுவழியில்லை. ஆனால், அப்போதும் இராமனோடு என்றும் பிரியாமல் இருக்கவேண்டும் என்று பரதனுக்கு உள்ள வேகம் பேசிவிடுகிறது. 'ஒப்புக்கொள்ளுகிறேன். உன் அடிமையாக இருந்து நாட்டைக் காத்துவருவேன். ஆனால், பதினான்கு வருஷங்களுக்குத்தான் ஞாபகமிருக் கட்டும். பதினான்கு வருஷங்கள் ஆனவுடன் நீ திரும்பி வந்து அரசை ஏற்றுக்கொள்ளாவிட்டால் நெருப்பில் விழுந்து உயிர்விடுவேன்; உன்பேரில் ஆணை.

ஆம் எனில் ஏழு இரண்டு ஆண்டில் ஐய நீ
நாம நீர் நெடுநகர் நண்ணி நானிலம்
கோ முறை புரிகிலை என்னில் கூர் எரி
சாம் அது சரதம் நின் ஆணை சாற்றினேன்'

என்று இராமன் கட்டளையை, தான் வணங்கும் தெய்வத்தின் ஆணையாக ஏற்றுக்கொள்ளுகிறான் பரதன்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் நிர்விகல்ப சமாதியில் அழுந்தி, பிரிவுக்கு மருந்து தேடிக் கண்டுபிடித்து விட்ட ஆனந்தத்தில், எல்லாவற்றையும் மறந்து, சமாதியிலே லயித்து இருந்தபோது, 'மகனே, இன்னும் சில காலம் நீ இந்த உலகத்தில் இருக்கவேண்டும். பிரிந்திருக்கிறாய் என்று ஏங்காதே. என் கட்டளையை நிறைவேற்றுகிறாய். அதை நீ செய்ய வேண்டாமா? பிறகு என்னிடம் வந்து சேரலாம்' என்று பராசக்தி சொன்ன

தாகவும், அதன்படியே பரமஹம்ஸர் இங்கே இருந்து ஞானத்தைப் பலருக்கு அளித்ததாகவும் சொல்வார்கள். பரதனுடைய நிலையும் இது போன்றதுதான். பிரிவினால் வருந்தினான். அதற்கு மருந்தான இராமனைத் தேடிக் கொண்டு சென்றான். அவனைக் கண்டான்; அந்த மருந்தே, 'சிலகாலம் பிரிந்து இரு; என் கருவியாக நின்று கடமையைச் செய்' என்று போதிக்கிறது. இறைவனுடைய திருவுள்ளத்தைத் தவிரத் தனக்குச் சுதந்தரம் எதுவும் இல்லை என்று உணர்ந்து இந்த உலகில் வாழும் ஜீவன் முக்தனைப்போல்,

'செம்மை நின் திருவடித் தலம் தந்து ஈ'

என்று இராமனுடைய பாதுகைகளைப் பெற்று அவற்றின் நிழலில் வாழச் செல்கிறான் பரதன். இப்படிப் பிரிந்திருப்பதும் பிரிவுக்கு மருந்துதானே?

# இரத்தினப் பரீட்சை

## தானமாலை - மண்டோதரி

சைனு பஜாருக்குப் போகிறோம். அங்கே பல வைரக் கடைகள் இருக்கின்றன. வைரங்களை விற்கவரு கிறார்கள், வாங்க வருகிறார்கள். அவற்றில் ஒரு கடைக் குள் நுழைகிறோம்.

கடை முதலாளி ஜம்மென்று மெத்தையில் உட் கார்ந்து, திண்டில் சாய்ந்துகொண் டிருக்கிறான். அழகிய சிறு தொந்தி, வெளுத்த சொக்காய், சிவந்த மேனி, இப்படியாக அவன் உட்கார்ந்திருக்கும் அழகு கடைக்கே அணி செய்கிறது. அவன் நமது நண்பன்; நாமும்அங்கே போய்ச் சிறிது நேரம் உட்காருகிறோம், அவன் வியா பாரம் செய்யும் கலையைக் கண்டு ரசிக்கும் ஆசையுடன்.

நாம் உட்கார்ந்திருக்கும் சொற்ப நேரத்துக்குள் நல்ல வியாபாரம் நடக்கிறது. வைரங்கள் விற்பனைக்கு வருகின்றன. முதலாளி அவற்றில் ஒன்றைக் கையில் எடுத்துப் பார்க்கிறான். 'சரி, புளு ஜாகர்', ஒரு பக்கம் வைக்கிறான். மற்றொன்றை எடுக்கிறான்; அது வெள்ளை ரகம். வேறொன்றைப் பார்க்கிறான்; அதில் புள்ளி விழுந் திருக்கிறது. இப்படியே தன்னிடம் வரும் வைரங்கள் அனைத்தையும் ஒரு பார்வையிலேயே தரவாரியாகப் பிரித்து, அதற்கு விலையும் மதிப்பிட்டு விடுகிறான்.

நமக்கு ஆச்சரியம்! அவனுடைய சாமர்த்தியத்தை நம் மனத்துக்குள்ளேயே வியந்துகொள்கிறோம். ஏன்? நம் கண்களுக்கு எல்லா வைரங்களும் ஒரே மாதிரியாய்த் தான் இருக்கின்றன. ஒரே மாதிரிதான் டாலடிக் கின்றன. ஒரே மாதிரிதான் பட்டை தீர்ந்திருக் கின்றன. நமக்கு அவற்றுள் ஒரு வித்தியாசமும் புலப் படவில்லை; எத்தனை தடவை திருப்பித் திருப்பிப் பார்த் தாலும் ஒரு வேற்றுமையும் தெரியவில்லை. ஆனால், அவனோ, ஒரே பார்வையில் விலையைக்கூட மதிப்பிட்டு விடுகிறான்! நமக்கு ஆச்சரியமாய் இராதா?

இப்படித்தான் மனிதரிலேயும், பலவிதமான மனிதர் கள், பல ரகப்பட்ட குணபேதங்களை உடையவர்கள் இருக்கிறார்கள். இவர்கள் எல்லோரும் ஒரே மாதிரியான மனிதர்களாகத்தான் நம் கண்ணுக்குத்தோன்றுகிறார்கள்; உடுக்கிறார்கள்; உண்கிறார்கள்; பழகுகிறார்கள்; இன்பங் களையும் துன்பங்களையும் அனுபவிக்கிறார்கள். எல்லோ ருக்குமே இவை ஒரே மாதிரியாகத்தான் இருக்கின்றன என்று நாம் எண்ணிவிடுகிறோம்.

ஆனால், கவிஞன் வைர வியாபாரியைப்போன்றவன். வைரத்தின் ஒளி வைர வியாபாரியின் கண்களைக் கூச வைத்துவிடுவதில்லை. மனிதரின் மேல்பூச்சும் கவிஞனின் உணர்ச்சிகளை மயக்கி விடுவதில்லை. வைர வியாபாரி யைப்போலவே அவனும் ஒவ்வொரு மனிதனையும் கையி லெடுத்து மதிப்புப் போடுகிறான். அவரவருடைய பண்பு களுக்கேற்றவாறு தரம் பிரித்தும் விடுகிறான். இவ்வள வும் ஒரே பார்வையில். நமக்குப் பிரமிப்புத் தட்டுகிறது. கவிஞனையே பார்த்து வியந்தபடி நிற்கிறோம்.

ஒரே ஒரு வித்தியாசம். வைர வியாபாரி எந்த வைரத்தை எடுத்து உயர்ந்தது என்று சொல்கிறானோ, அதைத்தான் நாமும் நம்பவேண்டி இருக்கிறது. அவன் வாக்குத்தான் வைரத்தைப் பொறுத்தமட்டில் வேதவாக் காக ஆகிவிடுகிறது. அதன் உண்மை பொய்களைக் கண்டறிய நம்மால் முடியாது. அப்படிக் கண்டுபிடித்து விட்ட ஆனந்தத்தையும் நாமடைய முடியாது. நமக்கு அது ஒரு குறையாய்த்தான் நின்று விடுகிறது.

ஆனால், இந்த விஷயத்தில் கவிஞன் அப்படியில்லை. அவன் எடுத்துக் கொடுக்கும் சரக்குகளின் தாரதம்மியங்களை நாமும் காண முடிகிறது; அனுபவிக்க முடிகிறது. புதிதாக ஒன்றைக்கண்டுபிடித்துவிட்ட ஆனந்தத்தையும் அடைந்துவிடுகிறோம். ஏனென்றால் கவிஞன் நமக்கும் தெரியும்படி வைரங்களைப் பக்கத்திலே வைத்துத் தாரதம்மியங்களை விளக்கிக் காட்டிவிடுகிறான்.

கம்பனையே எடுத்துக்கொள்வோம். அவனுடைய விசாலமான காவிய உலகத்திலே எத்தனை வகையான மனிதர்களைக் காண்கிறோம், அவர்களோடு உறவாடுகிறோம்! ஒவ்வொருவருடைய தரத்தையும் எவ்வளவு துல்லியமாக உணர்ந்து கொள்கிறோம்! நம்முடைய வாழ்க்கையில் நாம் தினந்தோறும் பழகிவரும் மனிதர்களைக்கூட இவ்வளவு நன்றாக நாம் தெரிந்துகொண்டதில்லை. ஏன் தெரியுமா? நமக்கு அந்த வைரப் பரீட்சை தெரியாது. கவிஞனுக்குத் தெரியும். அதுதான் கவிதையின் பெருமை.

ஒரு சிறு உதாரணத்தைப் பார்ப்போம்:

இராவணனுடைய மகன் அதிகாயன் யுத்தகளத்தில் வீழ்கிறான். "'வான் அஞ்சுக, வையம் அஞ்சுக.' உன் தம்பியைக் கொன்ற பழி தீர்க்காவிடில் 'யார்க்கோரு நன் மகனே இனி நான்?" என்று வீரம்பேசிப் போர்க்களம் சென்றமகன் உண்மையிலேயே மகனாக இல்லாமல் போய்விட்டான்.

இராவணனுடைய சோகம் அளவு கடந்துபோகிறது. முதல் நாள் போரில் தானே தோல்வியடைந்தான். பிறகு கும்பகருணனைப் பறிகொடுத்தான். இப்போது மகனும் பலியானான். சோகத்துக்குக் கேட்கவா வேண்டும்?

அவமானத்தால் சாம்புகிறான்; கோபம் பொங்குகிறது. 'பூமியைச் சுருட்டிவிடலாமா? வானைப் பிளந்துவிடலாமா? இந்த உலகிலுள்ள ஜீவராசிகளை எல்லாம் ஒரு கணத்தில் பிசைந்து கொன்றுவிடலாமா? இவ்வளவும் ஒரு பெண்ணால் வந்த விபரீதமல்லவா? பெண்ணினத்தையே பூண்டில்லாமல் அழித்துவிடலாமா?'

என்றெல்லாம் அவன் கோபத்தில் எண்ணுகிறுன் கோபத்திலே நகைப்புப் பிறக்கிறது. அதற்குள் மகன் சாவு நினைவுக்கு வரவே, அழுகை பொங்குகிறது. செய்வதின்னதென்று தோன்றுமல் சீற்றம் மீதூர, மானம் சுட, கரைகாணுத் துன்பத்தில் மரத்துப்போய் உட்கார்ந்திருக்கிறுன் இராவணேசுவரன்.

இப்படிப்பட்டவன் எதிரில், அலறி அழுதுகொண்டு ஓடி வருகிறுள் தானமாலை. அதிகாயன் தாயல்லவா? பெற்றவயிறு பற்றி எரிகிறது. கூந்தல் இரிந்து சரிய, கண்களில் இரத்தக்கண்ணீர் சொரிய, ஓவென்று அரற்றிக்கொண்டே இராவணன் முன்னே வந்து அடியற்ற மரம் போலச் சாய்கிறுள்.

அவள் சோகம் இராவணனை மேலும் உலுக்கிவிடுகிறது. உணர்ச்சியின் அழுத்தத்தில், இறுகிப் பாருங்கல்லாய் விடுகிறுன். கற்சிலைபோல் ஆடாமல் அசையாமல் உட்கார்ந்திருக்கிறுன்.

தானமாலை இராவணன் கால்களில் விழுந்தாள்; புரண்டழுதாள். பொருமினுள். 'இந்திரனுக்குக்கூடத் தோற்காத மகனைக் கேவலம்,

வாட்டா மனிசன் தன் உந்து சிலைப்பகழிக்கு
உண்ணக் கொடுத்தேனே !

எல்லாரும் போய்விட்டார்கள். அக்ஷயகுமாரன் போய்விட்டான். அதிகாயனும் மாண்டொழிந்தான். மண்டோதரி மகன் ஒருவன்தான் இருக்கிறுன். இனிமேல் நீ திக்குவிஜயம் போகலாம். உலகைக்கட்டி ஆளலாம்' என்று இராவணனுடைய வீரத்தைப் பழித்துப் புலம்புகிறுள்.

இராவணன் பிரமை பிடித்தவன் போல் உட்கார்ந்திருக்கிறுன். அவளுக்கு ஒரு தேறுதல் வார்த்தைகூடச் சொல்லவில்லை. அவன் பொருட்டுத் தன் மகனையே பலி கொடுத்துவிட்டு நிற்கிறுள். ஒரு தேறுதல் வார்த்தைக்குக் கூடப் பஞ்சமாய்ப் போய்விட்டதா? ஆத்திரம் பொங்கி எழுந்துவிட்டது அவளுக்கு. 'இந்தக் கேடு

உன்னால் வந்தது அல்லவா? கொடியாய்!' என்று கதற லானாள்.

அவளுக்கு அப்போது விபீஷணன் நினைவு வரு கிறது. 'ஆஹா! அவன்தான் எவ்வளவு விவேகமுடை யவன்! படித்துப் படித்துச் சொன்னானே? அவன் பேச்சை இந்த இராவணன் கேட்டிருந்தால்? அதுதான் கேட்கவில்லை, போகட்டும்—அந்தக் குலக் கிழவன் மாலியவான் சொன்னானே, அதைத்தான் கேட்டானா இந்தப் பாவி?' என்றெண்ணுகிறாள். உள்ளம் துடிக் கிறது; வறண்ட நாக்கு வார்த்தைகளை உதிர்க்கிறது:

'உம்பி உணர்வுடையான்
சொன்ன உரை கேளாய்!
நம்பி குலக் கிழவன்
கூறும் நலம் ஓராய்'

இந்த முரட்டுத்தனம் கடைசியில் எங்கே கொண்டு போய்விட்டது?

'கும்பகருணனையும் கொல்வித்து
என் கோமகனை
அம்புக்கு இரையாக்கி'

விட்டது. உனக்கு ராஜ்யம் வேறா? நீ அரசா ஆள்கிறாய்? நீ அரசனா?

இராவணன் இன்னும் வாய் திறக்கவில்லை. கற்சிலை போலவே இருக்கிறான். தான மாலையின் உணர்ச்சியோ பொங்கும் கடல் போல் அவனைச் சுற்றி மோதுகிறது. அந்த ஆவேசத்தில், 'ஏதையா சிந்தித்திருக்கின்றாய்?' என்று அதட்டலோடு பேச ஆரம்பிக்கிறாள். 'சிந்தித்துச் சிந்தித்து நீ கொண்டுவந்த தீவினைகள் போதாதா? நீ சிந்தித்துச் செய்த கொடுமையால் எத்தனை அரக்க மங்கையர் தங்கள் தாலிகளை இழந்தார்கள்? அவர் கள் துன்பந் துடைக்க எண்ணுகிறாயா? அவர்களுடைய இறந்து போன கணவர்களை உயிர்ப்பித்து விடப் போகிறாயா?

'ஏதையா சிந்தித்திருக்கின்றாய் எண்ணிறந்த
கோதைமார் வேல்அரக்கர் பட்டாரைக் கூவாயோ?'

இவ் வார்த்தைகளில் எவ்வளவு விஷம்! இதோடு அவள் நிற்கவில்லை. கண்ணீர் மறைக்கும் கண்களால் இராவணனைப் பார்க்கிறாள். ஆத்திரம் பொங்குகிறது.

அவனுடைய செயல்கள் அவள் நினைவிலே சுழல்கின்றன. அவனுடைய அடங்காக் காமம் அவள் மனத்திலே கூத்தாடுகிறது. அந்தக் காமத்தால் வந்த தன்றோ இவ்வளவும்! 'நான் மகனை இழந்து நிற்பது அந்தக் காமத்தால் வந்ததல்லவா? என் மகனை மட்டுமா அது பலி கொண்டது? இவன்...?'

என்ன சொல்லுகிறோம், யாரிடம் பேசுகிறோம் என்பது தெரியாமல், 'பேதையாய்க் காமம் பிடிப்பாய், பிழைப்பாயோ? என் மகன் மட்டுமா மாண்டான்? மண்டோதரி மகனும் மாள்வான். நீ மட்டும் வாழ்ந்திருக்கவா போகிறாய்? அந்த மானிடப் பெண் இருக்கிறாளே,—உன் பேய்க் காமம் சிறை வைத்த சீதை— அந்தச் சீதையால் இன்னும் வருவ சிலவேயோ?' என்றெல்லாம் இராவணனை அவன் எதிரிலேயே தூஷிக்கிறாள் தானமாலை.

என்ன செய்வாள் பாவம்? அளவுகடந்த புத்திர சோகம். துன்பத்திலே அரசன் என்றும், கணவனென்றும் பார்க்கத் தோன்றுமா? உணர்ச்சிகளுக்கு அடிமையாகி, என்ன சொல்கிறோம், என்ன செய்கிறோம், இதைச் சொல்லலாமா, கூடாதா, என்றெல்லாம் பகுத்தறிய இயலாமல் வாடிய அவள், ஆத்திரத்தில், வாயில் வந்ததை எல்லாம் பொரிந்து தள்ளுகிறாள். அவள் துக்கத்தில் நாமும் பங்குகொள்கிறோம். அவளுடைய சீற்றம் இயற்கையானதாகத்தான் நமக்குப் படுகிறது.

இது ஒரு ரக வைரம். இதைக் காட்டும் கம்பன் மற்றொரு ரக வைரத்தையும் நம்முன் வைக்கிறான். அதையும் பார்ப்போம்:

இராவணனுடைய மூத்த புதல்வன் இந்திரசித்து லக்ஷ்மணனால் அடியுண்டு மாண்டுவிடுகிறான். இராவணன்.

'எனக்கு நீ செய்யத்தக்க கடனெலாம் ஏங்கி ஏங்கி
உனக்கு நான் செய்வதானேன்'

என்று புலம்புகிறான். மூன்றுலகமும் அஞ்ச ஆணை விட்ட அவன் பெண்களைப் போல வாய்விட்டரற்றுகிறான். தன்னையே பழித்துக்கொள்கிறான் :

'மைந்தன்
தலையும் ஆருயிரும் கொண்டார்
என உடல் தாங்கி நின்ற
புலையனேன் எனினும் ஆவி சுமக்கின்றேன்.

நான் உண்ணும் உணவைவிட நாய் உண்ணும் உணவு சிறந்தது' என்றெல்லாம் நிந்தித்துக்கொள்கிறான்.

தன் கடந்த வாழ்க்கை அவன் நினைவுக்கு வருகிறது. 'அந்தக் காலத்தில் இப்படி நடந்திருந்தால்...? அந்தப் பயத்தினாலேயே இந்த உலகம் நசித்துப் போயிராதா ? இன்றோ இந்திரசித்து மாண்டு விட்டான். அவனைக் கொன்ற தவசிகள், கேவலம் அந்த

விரதியர் இருவரோடும் ஆண்டுள
குரங்கும் இன்னும் மாண்டிலர்.

என்ன ஆச்சரியம்? இராவணா! நன்றாயிருக்கிறது உன் வீரவாழ்க்கை!' எவ்வளவு அளவற்ற துக்கத்திலிருந்து பிறக்கிறது இந்தச் சுய நிந்தனை !

இந்த நிலையில் புழுவாகத் துடிக்கும் இராவணன் முன்னே வருகிறாள் அவனுடைய பட்ட மகிஷி, இந்திரசித்தின் தாய், மண்டோதரி.

இவளும் தானமாலையைப் போலவே மார்பிலே அடித்து அரற்றிக்கொண்டு, மனம் மறுகித்தான் வந்தாள். ஆனால், தானமாலை அனுபவிக்காத கொடுமை இவளை எதிர்நோக்கி நிற்கிறது. தலையற்றுக் கிடக்கும் தன் மகன் உடலைக் காண்கிறாள். உணர்வற்று அதன்

மேல் விழுகிருள். அவளுடைய துக்கம் கரையற்றது. அளவுடைய துக்கத்தில்தானே ஒப்பாரி எழும் ?

மகனுடைய சவத்தின் மேல் விழுந்த மண்டோதரி,

உயிர்த்திலள், உணர்வும் இல்லள்,
உயிரிலள் கொல்லோ என்னப்
பெயர்த்திலள் யாக்கை, ஒன்றும்
பேசலள், விம்மி யாதும்
வியர்த்திலள். நெடிது போது
விம்மலள்.

இப்படி உணர்வற்றுக் கிடந்த அவளுக்கு மெல்ல மெல்ல நினைவு வருகிறது. அரிய ஒன்றைத் தான் இழந்து விட்டதை உணர்கிருள். தன் மகன் இறந்தான் என்பதை நினைக்கிருள். வாய் விட்டரற்றுகிருள். இப்போது அவளுடைய துக்கத்தின் கடுமை சிறிது குறைந்து விடுகிறது. ஆகவே புலம்ப முடிகிறது அவளுக்கு.

அங்கே தானமாலே புலம்பிஞள். இங்கே மண்டோதரியும் புலம்புகிருள். நமக்கு இரண்டும் புலம்பல்தான். ஆஞல், கவிஞன் தன் அனுபவத் தராசில் இவர்கள் இரண்டு பேரையும் நிறுக்கிருன். இருவர்க்கும் உள்ள வித்தியாசத்தை நமக்கும் காட்டிவிடுகிருன்.

மண்டோதரியின் மனத்தில் இந்திரசித்தின் வீர வாழ்க்கை சித்திரச் சுருளாக அவிழ்கிறது. 'கலேயினுல் திங்கள் என்ன வளர்கின்ற காலத்தே, சிலேயினுல் அரியை வென்ற' வீரம் அவள் நினைவுக்கு வருகிறது.

'தாளரிச் சதங்கை யார்ப்பத்
தவழ்கின்ற பருவந் தன்னில்
கோளரி இரண்டு பற்றிக்
கொணர்ந்தனே கொணர்ந்து கோபம்
மூளுறப் பொருத்தி'

விளேயாடிய விளேயாட்டை நினேந்து விம்முகிருள். 'அம்புலி வா' என்று அழைத்தபோதே ஓடிவந்த சந்திர

லைப் பிடித்து வைத்துக்கொண்டு, பயப்படாதே என்று அபயமளித்து விளையாடிய விளையாட்டைக் காண,

'ஏசற்றேன், எழுந்திராயே'

என்று அந்த முண்டத்தைக் கொஞ்சுகிருள்.

துக்கத்தின் கடுமை இன்னும் கொஞ்சம் தணிகிறது; தன் மகன் சாவை நினைத்துப் பார்க்கிருள். எப்படிப் பட்ட மகன்?

'முக்கணன் முதலினோரை உலகொரு மூன்றிேனாடும்
புக்க போரெல்லாம்'

வென்றவன் மட்டுமில்லை, வென்று நின்றவன். சாதாரண மாக, போரிலே தோற்றவனுக்கு மட்டுமன்று, வெற்றி பெற்றவனுக்கும் பல இடர்கள் நேரிடலாம். ஆனால் இந்திரசித்தனோ வென்று முன்போலவே கொஞ்சமும் துயரமின்றி நின்றவன். அப்படிப்பட்டவனை இன்று, மனிதன் ஒருவன் கொல்ல மாள்பவன்? மண்டோதரிக்கு நம்பவே முடியவில்லை. எங்கேயாவது அணு உதைத் தால் மேருகிரி அசையுமா?

அவளுடைய ஆச்சரியம் அச்சமாக மாறுகிறது. இவ்வளவு நடந்ததற்கும் மூலகாரணம் என்ன என்று சிந்திக்கிருள்.

'பஞ்செரி உற்றதென்ன
அரக்கர்தம் பரவை எல்லாம்
வெஞ்சின மனிசர்கொல்ல
விளிந்ததே! மீண்டதில்லை!

அரக்கர்கள் போகிருர்கள்; கூட்டம் கூட்டமாகப் போகி ருர்கள்; தனித் தனியாகப் போகிருர்கள். ஆனால், ஒரு வன் கூடத்திரும்பி வரவில்லை. எல்லோரும் அம் மனிதர் கள் விடும் அம்பு பட்டு மாண்டுபோய்விடுகிருர்கள். ஏன்? ஏன்? ஏன்? எல்லாம் சீதையால் விளைந்தது அல்லவா?

அஞ்சினேன் அஞ்சினேன்
இச் சீதை என்று அமிழ்தால் செய்த
நஞ்சினால் இலங்கை வேந்தன்
நாளைஇத் தகையனன்றோ ?'

இதைக் கேட்கிறான் இராவணன்; அவன் நெஞ்சைச் சுட்டுவிடுகின்றன இச் சொற்கள். இவ்வளவு பேரையும் பலி கொடுத்தும் தணியாத அவன் காமத்தை, மண்டோதரியின் அச்சத்தின் காரணமாய் வந்த இச் சொற்கள் தணித்து விடுகின்றன. வாளை உருவிக் கொண்டு சீதையை வெட்ட ஓடுகிறான்.

தானமாலையும் சீதையை நினைத்துக்கொள்கிறாள். ஆனால், 'தவறு முழுவதும் இராவணனுடையதுதான். தான்செய்த தவற்றுக்கானதண்டனையையே இராவணன் அனுபவிக்கிறான்' என்பது அவளுடைய முடிந்த முடிபு. அவளுடைய ஆத்திரமெல்லாம், இராவணன் ஒருவனுடைய காமத்துக்காக—தகாத செய்கைக்காக—மற்றவர்கள் பலியாக வேண்டுமா என்பதுதான்; அந்த ஆத்திரந்தான் பீறிக்கொண்டு வருகிறது அவள் புலம்பலிலே.இதனால் தான் அவன்குற்றங்களை எல்லாம் படபட வென்று பொரிந்து தள்ளிவிடுகிறாள், அவன் எதிரிலேயே.

மண்டோதரியின் பேச்சு சீதைபேரில் திரும்புகிறது. சீதையை அமுதாற் செய்த நஞ்சு என்று மண்டோதரி பேசுகிறாள். இராவணன் செய்வது தவறு என்பது அவளுக்குத் தெரியாதா ? நன்றாகத் தெரியும்.

ஆனால் எத்தகைய கேடுகெட்டவனாயினும், எவ்வளவு கொடியவனானாலும், அது மற்றவர்களுக்குத் தெரிந்த விஷயமாயிருந்தாலும் கூட, அதை மறைத்து, தன் கணவன் நல்லவன், உயர்ந்தவன், என்று பேசும் ஒரு பெண்ணைப் போற்றாமல் என்ன செய்வது? மகனைப் பறிகொடுத்துத் தவிக்கும்போது கூட, இதற்குக் காரணமான தன் கணவனைத் தாழ்ந்தவனாக நினைக்க மண்டோதரியால் முடியவில்லை. அவள் நினைவு

இராவணன் கதி என்னவாகும் என்றே எண்ணுகிறது. அந்தநினைவில் அவள் துக்கம் முழுவதும் அச்சமாக மாறி விடுகிறது. 'மூவுலகங்களையும் வெல்லும் வன்மை வாய்ந்த மகனும் போய்விட்டானே! தனித்து நிற்கும் என் கணவனைக் காப்பாற்ற இனி யார் இருக்கிறார்கள்?' என்றுதான் அவள் மனம் நடுங்குகிறது.

இராவணன் இறந்த பிறகுங்கூட அவன் செய்த குற்றத்தைப் பற்றிப் பேசுவதற்கு மண்டோதரி கூசுகிறாள். சீதை இவ்வளவு அழகியாக, இவ்வளவு கற்புடையவளாக இருக்க வேண்டுமா என்றுதான் நொந்து கொள்ளுகிறாள். அவருக்கென்ன, வலிமை உடையவர், பேரரசர். அவர் ஏதோ ஒரு பெண்ணின் பேரில் ஆசை கொண்டார், அது இயற்கைதானே என்று தோன்றும்படி, 'ஏந்துபுயத்து இராவணனார் காதல்' என்று இராவணனுடைய காம நோயைக் குறிப்பிடுகிறாள். தானமாலையோ இராவணனையே நேருக்கு நேராக.

'பேதையாய்க் காமம் பிடிப்பாய் பிழைப்பாயோ'

என்று கேட்டாள். இராவணன் இறந்த பின்பும், அவனையும், இலங்கை அரக்கர் வெள்ளத்தையும் சுட்டெரித்த அவனுடைய காமத்தீயைப்பற்றி 'இராவணனார் காதல்' என்றுதான் மண்டோதரியால் பேச முடிகிறது!

தானமாலை, மண்டோதரி இருவரும் இராவணன் மனைவியர்தாம்; இருவருக்கும் ஒரே மாதிரியான புத்திர சோகந்தான். ஆனால் ஒரே காற்றில் சவுக்க மரம் சலசலப்பதையும், மூங்கில் உடம்பைத் திருக்கிக்கொண்டு முனகுவதையும் நாம் காண்பதில்லையா? அதுபோலவே சோகப்புயல் வீசும்போது தானமாலையின் பேச்சும் செயலும் ஒரு மாதிரி; மண்டோதரியின் போக்கு வேறு மாதிரி. இவ்விரு பாத்திரங்களையும் கவிஞன் என்ற வைர வியாபாரி மதிப்புப்போட்டு, நமக்கும் விளங்கும்படி காட்டிவிடுகிறான். நன்றாகத் தெரிகிறது, ஒன்று புள்ளி விழுந்த வைரம்; மற்றொன்று குற்றமில்லாத "புஷ்ஜாகர்."

# கரும் பாம்பு

## சூர்ப்பணகை

சாந்தி மயமான கோதாவரிக் கரை. அரசு துறந்த கதையும், அயோத்தியின் துயரமும், தசரதன் மறைந்த வேதனையும், சித்ரகூடச் சாரலில் வீசிய பரதனுடைய சோகப் புயலும் பழைய நினைவுகள் ஆகிவிட்டன. லக்ஷ்மணன் கட்டிய பர்ணசாலையில் நிர்மலமான காதல் ஒன்றே வளர்ந்து வருகிறது. இப்போதெல்லாம் இராமனுக்கும் சீதைக்கும் இடையிலே பேச்சு என்பது தேவையில்லை. அவர்களுடைய முதிர்ந்த அன்பு, பேச்சை இலைத்த காரியமென்று ஒதுக்கி வைத்துவிட்டு, ஒரு பார்வை, ஒரு புன்முறுவல் இவற்றிலே நிறைவு அடைந்து விடுகிறது. காலையும், மாலையும், இரவும், வனத்தின் ஏகாந்தத்தில் அவை பயிர் செய்யும் அழகும், இந்தக் காதலை வளர்க்கவே உதவுகின்றன. எதைப் பார்த்தாலும் இராமனுக்குச் சீதையின் ஞாபகம்; அது போலவே சீதைக்கு இராமனுடைய நினைவு. இருவர் மனத்திலும் பூரணமான இன்பம்.

பூரணச் சந்திரனைத்தானே ராகு பீடிக்கிறான்? இராமன்-சீதை இவர்களுடையஅன்பின்பேரிலும் கரும்பாம்பு ஒன்றின் நிழல் விழுகிறது. ராகுவையும் வெட்கித் தலை குனிய வைக்கும் கொடுமையும், கருமையும், ஆகிருதியும்

படைத்த இந்தப் பாம்பு, பார்ப்பதற்கு மட்டும் காலும் கையும் தலையும் உள்ள மனித உருவம் பெற்று, ஜனஸ் தானக் காட்டிலிருந்து பஞ்சவடிக்குள் நுழைகிறது. மனித உருவந்தான்; ஆனால் விகாரமான உருவம். செம் பட்டை மயிர்; முறம் போன்ற நகம்; கோரைப் பற்கள்; உயிர்களை எல்லாம் விழுங்கித் தடித்த பெருவயிறு. யார் இது?

இவள் வருவதைப் பார்த்துக் கொண்டு நிற்கும் கம்பருக்கு இவள் யார் என்பது தெரிந்து விடுகிறது. நமக்குச் சொல்ல ஆரம்பிக்கிறார். ஆனால், அவருடைய மனம் இவள் இங்கே வருவதால் விளையப் போகும் விபரீ தங்களையெல்லாம் பளிச்சென்று பார்த்து விடுகிறது. பேசுகிறார்: 'வருவது யார் தெரியுமா? இராவணன் தங்கை சூர்ப்பணகை. தங்கைதான், உடன் பிறந்தவள்தான், ஆனால், உடன் பிறந்துதானே வியாதி உடம்பை அழிக் கிறது? அதுபோலவே இவளும் தன் அண்ணனாகிய இராவணனை வேரோடு நாசம் செய்யப் போகிறாள்.

நீலமா மணி நிற நிருதர் வேந்தனை
மூல நாசம் பெற முடிக்கும் மொய்ம்பினாள்.

கூனியை அறிமுகப்படுத்தியபோது

இன்னல் செய் இராவணன் இழைத்த தீமைபோல்
துன்னரும் கொடுமனக் கூனி தோன்றினாள்

என்று கம்பர் பேசியது ஞாபகத்திற்கு வருகிறது. புதிய பாத்திரங்களை அரங்கத்தில் ஏற்றும்போது, காவியப் பொருளுக்கும், அவர்களுக்கும் உள்ள சம்பந்தத்தைச் சுட்டிக் காட்டுவது கம்பருடைய வழக்கம். கூனியின் சூழ்ச்சியால் இராமன் வனம் புகுந்தான் என்றால், சூர்ப் பணகை விளைத்த கலகமே சீதாபகரணத்திற்கு வித்தா கிறது. இராவணன் என்ற தீமை அழிவதற்குக் கூனியும், சூர்ப்பணகையும், கைகேசியின் மனமாற்றமும் கருவிக ளாக அமைந்தன என்பதே கம்பருடைய கருத்து. இருந்

தாலும் இப்படிக் கருவிகளாக அமைவதற்கு அப் பாத்திரங்களின் இயல்பே காரணமாக இருக்கிறது என்பதைக் கம்பர் மறப்பதில்லை; நம்மை மறக்க விடுவதும் இல்லை.

இராவணனுடைய அழிவுக்கு ஏதுவாகச் சூர்ப் பணகை இருந்தாள் என்பது இராமாயணக் கதைதெரிந்த எல்லோருக்கும் தெரியும். ஆனால் இராவணனுடைய நாசத்திற்கு அடிப்படையான காரணம் இராவணனேதான்— அதாவது அவனுடைய காமமும், அகங்காரமும். அது போலவே அந்த நாசத்திற்கு நிமித்த காரணமாகச் சூர்ப் பணகை வந்து சேர்ந்தாள் என்றால், அப்படி அவள் வருதற்கு அவளுடைய இயல்பே அவளை இட்டுச் சென்றது.

காட்டின் இருட்டிலிருந்து அந்த இருட்டின் ஒரு பகுதியைப்போல் வெளியே வந்த சூர்ப்பணகை, ஐந்து ஆலமரங்களுக்கு அருகிலே சாந்திமயமாய் விளங்கிய பஞ்சவடிப் பர்ணசாலையைக் கண்டாள். வாசலில் வீற்றிருந்த இராமனைக் கண்டதும் அவனுடைய வடிவழகிலே தன் நெஞ்சை இழந்து, பிரமித்து நிற்கிறாள். 'என்ன அழகு! இப்படியும் சௌந்தர்யமுடைய ஆண்மை உண்டா? சிவபெருமானால் எரிக்கப்பட்டு அனங்கனான மன்மதனே தவம்செய்து திரும்பவும் உடலைப் பெற்று இங்கே வந்து விட்டானோ?' என்று திகைக்கிறாள்! காட்டு வெளியிலே புல் மண்டிக்கிடக்கிறது. அதைப் பார்த்த சூர்ப்பணகை சிரித்துக் கொள்கிறாள். 'இப்போதல்லவா தெரிகிறது, இவ்வளவு அடர்த்தியாக இந்தப் புல் வளர்ந்திருப்பதன் காரணம்? இந்தப் பூமி தேவி பாக்கியசாலி; கடலே அவளுக்குச் சேலை; நல்ல அழகி; பெண் யானையைப்போல் நடையுடையவள்; இதுவெல்லாம் பிரமாதமில்லை; எல்லாவற்றிற்கும் மேலாக இந்த அழகனுடைய திருவடி சம்பந்தம் இவளுக்குக் கிடைத்துவிட்டது. இதனால் புளகாங்கிதம் அடைந்திருக்கிறாள். அதன் அடையாளமே இந்தப் புல். பூமி தேவி பாக்கியவதிதான்' என்று சூர்ப்பணகை தனக்குத் தானே சொல்லிக்கொள்வது காதில் விழுகிறது :

உடுத்த நீர் ஆடையள்
    உருவச் செல்வியள்
பிடிதரு நடையினள்
    பெண்மை நன்று இவன்
அடித்தலம் தீண்டலின்
    அவனிக்கு அம்மயிர்
பொடித்தன போலும் இப்புல்'

இப்படியாகச் சூர்ப்பணகையின் உணர்ச்சிப் பெருக்கில் கவிதைகூட உதயமாகிவிடுகிறது.

இராமனுடைய அப்ராக்ருத சௌந்தர்யத்தில் சூர்ப்பணகை தன்னை மறந்தாள் என்பது இயற்கையாகவே தோன்றுகிறது. ஆனால் இதோடு சூர்ப்பணகை நிற்கவில்லை. 'இந்த அழகனை உடனே அடைய வேண்டும், இல்லாவிட்டால் அமுதத்தையே பருகினாலும் என் உயிர் நிற்காது' என்று எண்ணுகிறாள். போகட்டும், ஆனால் அடுத்த கணத்தில்,

சென்று எதிர் நிற்பதோர் செய்கை தேடுவாள்.

இதென்ன வேடிக்கை. பெண்களுக்கு இயல்பாக உள்ள அடக்கம் இவளிடம் இல்லையா ? எப்படி இருக்கும், அரக்கிதானே, என்று சமாதானம் தேடும்போதே, சூர்ப்பணகையின் தன்மையில் ஓர் அம்சத்தையும் உணர்ந்துகொள்ளுகிறோம். 'அன்னியனாயிற்றே, முன் பின் தெரியாத இவனிடம் சென்று எப்படிப் பேசுவது, என்ன பேசுவது? பேசினாலுந்தான் என்ன, மனத்தில் உள்ள ஆசையை வெளிப்படையாகச் சொல்லிவிட முடியுமா?' என்றெல்லாம் சூர்ப்பணகை எண்ணவில்லை. பார்த்தாள்; ஆசைப்பட்டாள் ; உடனே பெற்றுவிட வேண்டும் என்று செய்கையில் இறங்குகிறாள். மலை போன்ற காமம், புலன்களைப் போனபோக்கில் விட்டு, விஷயானுபவத்தில் தங்கு தடையில்லாமல் யதேச்சையாகத் திரிந்ததால் ஏற்படும் போக வெறி-இவை இரண்டும் இருக்கின்ற இடத்தில் அடக்கத்திற்கும், செய்வது சரியா என்ற யோசனைக்கும் இடமேது? சூர்ப்பணகை

யிடம் எந்தக் காலத்திலாவது பெண்மையின் மென்மை இருந்ததா என்பது நமக்குத் தெரியாது. பஞ்சவடியிலே அவள் தோன்றும்போது இச்சையை நிறைவேற்றி நிறைவேற்றித் தடித்துப்போன மிருகத்தன்மையைத் தான் அவளிடம் காண்கிறோம்.

அவளுக்கு இதைப் பற்றிக் கவலை இல்லை. அவளு டைய கவலையெல்லாம் தன்னுடைய விகாரமான வடி வத்தைப் பற்றித்தான். கோரைப் பல்லும் குடைபோன்ற வயிறும் உள்ள அரக்கி என்று தன்னை ஒதுக்கிவிட்டால் என்ன செய்வது என்று எண்ணுகிறாள். அவள் காரிய வாதி. எடுத்த காரியத்தை எப்படியாவது சாதிக்க வேண் டும். எப்படியானாலும் சரிதான். பொய்யும் வஞ்சனையும் பயன்பட்டால் அவற்றைக் கையாளுவதில் அவளுக்குத் தயக்கமில்லை. மந்திர பலத்தினால் அழகிய பெண் ணொருத்தியின் வடிவத்தைப் பெறுகிறாள், 'பொங்கு ஒளி விசும்பினில் பொலிய' மின்னுகின்ற தளிர்க் கொடியைப் போல இராமன்முன் தோன்றுகிறாள்.

அவளுடைய அழகு பிரமிப்பை உண்டாக்குகிறது கலீரென்று ஒலிக்கும் நூபுரமும், கலகல வென்று ஒலிக் கும் மேகலை முதலிய ஆபரணங்களும், கூந்தலைச் சுற்றி மொய்த்து ரீங்காரம் செய்யும் வண்டுகளும், தையல் ஒருத்தி வருகிறாள் என்று கட்டியம் கூறுகின்றன. சப்தம் வரும் திசையைநோக்கி இராமன் நிமிர்ந்து பார்க்கிறான். சூர்ப்பணகையின் வஞ்சனையில் விளைந்த அழகு இராம னையும் கண நேரத்திற்குத் திகைக்க வைக்கிறது. இதற் குள் அவள் அவனை நெருங்கி, மருண்ட மான்போல் ஒருபுறத்தில் ஒதுங்கி நின்று கொண்டு, மிகுந்த நாண முடையவள் போலக் கடைக் கண்ணால் அவனைப் பார்க் கிறாள். வேடம் போட்டுக்கொண்டு விடலாம். அதற்குத் தகுந்தபடி நடிப்பதற்குத் திறமை வேண்டாமா? அது இந்த அரக்கியிடம் இருக்கிறது. இராமனைக்கூட சிறிது நேரத்திற்கு மயங்க வைக்கும் அளவுக்கு இருக்கிறது.

'யார் அம்மா நீ? எங்கிருந்து வருகிறாய்? உன் உறவி னர் யாவர்?' என்று இராமன் கேட்கிறான். காட்டின்

நடுவில் இப்படித் திடீரென முளைத்த இவ்வழகிய பெண்ணுருவம் ஓர் உற்பாதம் என்பதை இராமன் உணரவில்லை. சூர்ப்பணகைக்கு மனத்திலே குதூகலம். தன் வஞ்சனை இதுவரையில் வெற்றி அடைந்து விட்டதல்லவா? இனி இராமனோடு பேசியாக வேண்டும். தன்னைப் பற்றிப் பக்குவமாக,அவன் மனத்தைத் திருப்தி செய்யும் வகையில் பேசவேண்டும். முடியுமா? ஏன் முடியாது? சூர்ப்பணகை பேசுகிறாள்; 'யாரென்று கேட்கிறீர்கள்? பிரமதேவனது பேரன் என் தந்தை. திரிபுரம் எரித்த சிவபெருமானுடைய நண்பனான குபேரனுக்கும், கைலாச கிரியை எடுத்துப் புகழ்பெற்று உலகம் மூன்றினுக்கும் அதிபதியாக விளங்கும் இராவணனுக்கும் நான் தங்கை.'

பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி ;
முப்புரங்கள் செற்ற
சேவலோன் துணைவனான
செங்கையோன் தங்கை ; திக்கின்
மா எலாம் தொலைத்து வெள்ளி மலை
யெடுத்து உலகம் மூன்றும்
காவலோன் பின்னை காமவல்லியாம்
கன்னி என்றாள்.

பேச்சில் உள்ள சாதுரியத்தைப் பார்த்தீர்களா? ஒரே மூச்சில் தன் குலம் உயர்ந்தது என்பதையும், செல்வமும் செல்வாக்கும் பெற்றது என்பதையும், தான் கலியாணமாகாத கன்னிப் பெண் என்பதையும் சொல்லி விடுகிறாள். அவள் தனக்குத் தந்துகொள்ளும் காமவல்லி என்ற பெயரும் பொருத்தமாகத்தான் இருக்கிறது. காமம் சுழலும் உள்ளத்தோடுதானே இந்த நடிப்பிலே முனைந்திருக்கிறாள் ?

ஆனால் இராமனுக்குச் சந்தேகம் தோன்றுகிறது. அரக்கனுடைய தங்கையான இவளுக்கு இந்த அழகிய உருவம் எப்படி வாய்த்தது? கேட்டு விடுகிறான் :

'வெவ்வுரு அமைந்தோன் தங்கை என்பது
மெய்ம்மை ஆயின்
இவ்வுரு அமைந்த தன்மை இயம்புதி'

இந்தக் கேள்வியைச் சூர்ப்பணகை எதிர்பார்த்திருக்க முடியாது. ஆனால் அவள் தடுமாறவில்லை. தன்னை அரக்கி என்று இராமன் தெரிந்து கொண்டால் அதற்கு என்ன சமாதானம் கூறுவது என்பதை அவள் முன்னமேயே தீர்மானித்திருக்க வேண்டும். ஏனென்றால் அந்தச் சமாதானத்தையும் இராமன் கேட்ட கேள்விக்குப் பதிலாகத் தந்து விடுகிறாள். 'அரக்கிதான் பிறப்பினால். ஆனால்அரக்கருடைய சகவாசம்பிடிக்காமல் அதை உதறி எறிந்துவிட்டுத் தவம் செய்து பிறப்பின் பீழையைச் சுட்டெரித்துவிட்டேன். இப்போது நான் அரக்கியாக இல்லை. தவத்தினாலே இந்த வடிவத்தையும் பெற்றுவிட்டேன்' என்று கூறுகிறாள். இவளுடைய சாமர்த்தியத்தை கம்பரும் ஒப்புக்கொள்கிறார். நம்மைப் பார்த்து இவள் கொஞ்சமாவது கலங்க வில்லையே, பார்த்தீர்களா? இராமன் கேள்வி கேட்டு முடியும் முன்னே பதில் வருகிறது. தளர்ச்சியோ, தயக்கமோ இல்லை. இவள் சோர்விலாள் என்று குறிப்பிடுகிறார்.

ஆனால் இராமனுக்குச் சந்தேகம் தீரவில்லை. 'ஆமாம்; இங்கே நீ தனியாக வருவானேன்?' என்று கேட்கிறான்.

'அதுவா?' என்று தொடங்கியவள், மறுபடியும், தான் இராவணாதியரோடு சம்பந்தம் அற்றவள் என்று அப்போதுதான் முடித்த பழைய பல்லவியைத் திரும்பவும் பாடுகிறாள்:

'யான் அச்
சீரியர் அல்லர் மாட்டுச் சேர்கிலென் தேவர் பாலும்
ஆரிய முனிவர் பாலும் அடைந்தனென்.'

பொய்யின் போக்கு இதுதான்; தன்னை உண்மை என்று ஸ்தாபித்துக் கொள்வதற்காக அது வேண்டாத அழுத்தத்தையும் இரைச்சலையும் துணையாக நாடும்.

பிறகு 'உன்னிடத்தில் ஒரு காரியம் உண்டு. ஆகவே, உன்னைக் காண வந்தேன்' என்கிறாள். உண்மை

அதுவன்று. இராமனைக் கண்ட பிறகுதான் காரியம் ஏற்பட்டது.

'என்ன காரியம்?' என்கிறான் இராமன்.

உடனே சூர்ப்பணகைக்கு, இல்லாத நாணம் வந்துவிடுகிறது. அதாவது வரவழைத்துக் கொள்கிறாள்.

'எப்படிச் சொல்வேன்? தாங்கள் உணரும் காமத்தின் தன்மையைப் பெண்கள் வாய்விட்டுச் சொல்லிக் கொள்வார்களா? ஆனால், என் வேதனை தாங்க இயலவில்லை. மரண வேதனையாக மூண்டுவிட்டது. என் வருத்தத்தை உனக்குத் தெரிவிக்க வேறு யாரும் எனக்கு இல்லை. காமன் செய்யும் கொடுமை தாளவில்லை; என்னைக் காப்பாற்று' என்று முடிக்கிறாள்.

எப்படி இருக்கிறது நாணம்? இராமனுக்கும் இதுதான் தோன்றுகிறது. 'நாண் இலள்', வெட்கமில்லாதவள் என்று எண்ணுகிறான். அதோடு, 'நொய்யள்', இழிந்த குணம் உடையவள்; 'நல்லளும் அல்லள்', நல்ல குணங்கள் இல்லாதவள் என்றும் ஊகித்து முடிவு கட்டுகிறான். பேச்சை நிறுத்திக்கொள்கிறான்.

## காமப் புயல்

ஆனால் சூர்ப்பணகை விடவில்லை. எப்படி விடுவாள்? அவள் மனத்திலேதான் காமப் புயல் வீசுகிறதே! 'நீ இங்கே இருப்பது தெரியாமல் போய் விட்டது. தெரிந்திருந்தால் முன்னமேயே வந்திருப்பேன். இப்போதோ முனிவர்களுக்குப் பணிவிடை செய்து என் யௌவனத்தை வீணாகக் கழித்துவிட்டேன்' என்கிறாள் அவள். எப்படி இருக்கிறது பேச்சு? சற்று முன்புதான் 'முனிவர்கள் இடத்தில் பழகி, ஆய்வுறு மனத்தேன் ஆகி, அரக்கியாகப் பிறந்த குறையை நீக்கிக்கொண்டேன்' என்று பேசியவள் இப்போது இப்படிப் பேசுகிறாள். இவள் என்ன பச்சோந்தியா? அல்லது கம்பர் முன்னே எழுதியதை மறந்துவிட்டாரா? அப்படி ஒன்றும் இல்லை. சூர்ப்பணகையின் மனத்திலே வீசும் காமப் புயல் பேச்சிலும் செயலிலும் வரன்முறை இல்லாமல் அவளைத்

தடுமாற வைக்கிறது. உணர்ச்சி வேகம் எப்போதுமே தர்க்க அமைதிக்குப் பகை.

அமைதி குலைந்த இந்த நிலையிலும் சூர்ப்பணகையின் சாதுரியம் மங்கவில்லை. இராமன் எழுப்புகின்ற தடை ஒவ்வொன்றிற்கும் உடனே சமாதானம் கூறுகிறாள். 'நீ பார்ப்பனப் பெண் ஆயிற்றே; அரசனாகிய நான் உன்னை எப்படி ஏற்பது?' என்கிறான் இராமன். 'தாய் வழியில் சாலகடங்கடர் என்ற அரச வம்சத்தைச் சேர்ந்தவள் அல்லவா நான்!' என்கிறாள் சூர்ப்பணகை. 'அரக்கர் குலப்பெண்ணை மனிதன் மணந்து கொள்ளலாமா?' என்பது இராமனுடைய அடுத்த கேள்வி. 'அரக்கர் குலமா? அந்தப் பாவத்தைத்தான் முனிவர்களோடு சேர்ந்து தேவர்களை வழிபட்டு முன்னமேயே போக்கி விட்டேனே?' என்பது சூர்ப்பணகையின் பதில். 'இருந்தாலும் உரியவருடைய சம்மதம் இல்லாமல் கலியாணம் செய்து கொள்ளலாமா?' என்று இராமன் கேட்கிறான். 'வேதங்களே வகுத்திருக்கும் காந்தருவ மணம் என்பது நமக்காகத்தானே?' என்கிறாள் சூர்ப்பணகை. அதோடு தன்னைக் காந்தருவ விவாகம் செய்துகொண்டால், பிறகு அரக்கர்கள், இப்போது தனியாக நிற்கும் இராமனுக்குத் துணைவர் ஆகிவிடுவார்கள் என்று தெரிவிக்கிறாள். இராமனுக்கு அரக்கர்களுடைய நட்பாம்! நமக்கு இது வேடிக்கையாக இருக்கிறது. இதைக் கேட்டுப் பரிகாசமாக நகைக்கும் இராமனுடைய சிரிப்பு நம்முடைய மனத்தின் எதிரொலியாகவே தோன்றுகிறது.

'அயோத்தியை விட்டு வந்தது நல்லதாக அல்லவா ஆயிற்று? ராக்ஷஸர் சிநேகம்; சூர்ப்பணகையின் காதல்; பேஷ், பேஷ், வேறென்ன வேண்டும்?

'நிருதர்தம் அருளும் பெற்றேன்
நின் நலம் பெற்றேன் நின்னோடு
ஒருவு அரும் செல்வத்து யாண்டும்
உறையவும் பெற்றேன் ஒன்றோ
திருநகர் தீர்ந்த பின்னர்
செய்தவம் பயந்தது!'

என்று இராமன் நகைக்கிறான்.

இந்தச் சமயத்தில்தான் சீதை வருகிருள். இராமன்—சூர்ப்பணகை சம்வாதம் இதற்குமேல் செல்வதற்கில்லை. சூர்ப்பணகையின் இயல்பில் வஞ்சனை, காமம், பொய் நிறைந்த சாதுரியம், இவற்ருலான பகுதியை,அது காட்டிவிட்டது. இன்னும் அது நீண்டால் ரஸக் குறைவு. கம்பருக்கு இது தெரியாதா? சீதையை அரங்கத்திற்கு அழைத்து வந்துவிடுகிருர். இராமன்—சூர்ப்பணகை சம்பாஷணை முடிகிறது. சீதை வந்தவுடனே சூழ்நிலையே மாறிவிடுகிறது. அவளுடைய பேரழகைக் கண்டவுடன் சூர்ப்பணகை வெட்கித் தலை குனிகிருள். இப்படியும் அழகு இருக்குமா? திருமகள்தான் இந்த மண்ணுலகில் கால்தோய நடந்து வந்துவிட்டளா?

'அரவிந்த மலருள் நீங்கி அடியிணை படியில் தோய
திரு இங்கு வருவாள் கொல்லோ'

என்று திகைக்கிருள். இந்த அப்ராக்ருத சௌந்தர்யத்தின் முன், தன்னுடைய மாயவேடம் வெறும் கேலிக் கூத்தாகவல்லவா போய்விட்டது என்று எண்ணுகிருள். பொருமை பொங்குகிறது. 'இவ்வளவு அழகு வாய்ந்த ஒருத்தியை இராமன் காட்டுக்கு அழைத்து வந்திருக்க மாட்டான். இவளும் என்னைப்போல் இடையிலே வந்தவள்' என்று சூர்ப்பணகையின் சாதுரியம் முடிவு கட்டுகிறது.

அப்படிச் செய்யும்போது, பொருமையால் தாக்குண்டு சாதுரியம் இடறி விழுவதைத்தான் பார்க்கிருேம். சீதை யார் என்ற உண்மை தெரியாமல், தெரிந்துகொள்வதற்கும் தாமதியாமல், அவளைப் பற்றி இராமன் பெருமையாக எண்ணிவிடக் கூடாது, அதை எப்படியாவது தடுத்துவிட வேண்டும் என்று சூர்ப்பணகையின் குயுக்தி வேலை செய்ய ஆரம்பிக்கிறது. 'இவள் யார் தெரியுமா? மாயமும் வஞ்சனையும் நிறைந்த அரக்கி. இவள் அழகைக் கண்டு ஏமாந்துவிடாதே. இந்த அழகு பொய். மாமிசம் தின்று திரியும் இவளைக் கண்டு எனக்குப் பயமாய் இருக்கிறது. 'இவள் அருகே வராமல் விலக்கி என்னைக் காப்பாற்று' என்று பேசத் தொடங்குகிருள் சூர்ப்பணகை..

இராமன் நகைக்கிறான். சூர்ப்பணகையோ வெகுண்டு 'நீ எங்கேயடி வந்தாய்?' என்று சீதையை வெருட்டு கிறாள். பொறாமையும், வஞ்சமும் சூர்ப்பணகையின் காமப் புயலுக்கு நெருப்பின் தன்மையைத் தந்துவிடு கின்றன. இதைக் கண்ட இராமன் சீதையை அழைத் துக்கொண்டு பர்ணசாலைக்குள் போய்விடுகிறான்.

தனியே விடப்பட்ட சூர்ப்பணகை, தன் உள்ளத் திலேயே முளைத்த காமச் சூறாவளியில் அடிபட்டுத் தவிக்கிறாள்.

இரவு வருகிறது. தென்றல் மெல்ல உலாவுகிறது. அன்றிலின் குரல் கேட்கிறது. எங்கும் வெள்ளிமுலாம் பூசி நிலவு துள்ளுகிறது. சூர்ப்பணகையின் காமவெறி மிதமிஞ்சி மலையாய் வளர்ந்து விடுகிறது. விரக தாபம் என்பது யாருக்கும் ஏற்படலாம். ஆனால், எந்த உணர்ச்சி யும் அவரவர் தன்மைக்குத் தகுந்தபடி, அந்தத் தன்மை யைப் புலப்படுத்தும் முறையில்தான் தன்னை இனங்காட் டிக்கொள்ளும். கோபம் என்பது ஒன்றுதான். ஆனால், 'குணமென்னும் குன்று ஏறி நின்றார் வெகுளி'க்கும், குடிகாரன் ஒருவனுடைய கோபத்திற்கும் வித்தியாச மில்லையா? விரகதாபமும் அப்படித்தான். அது வெளியாகும்போது விரக தாபம் என்பது தெரி கிறது. அதோடு யாருடைய விரகதாபம் என்பதும் தெளிவாகிவிடும். தென்றலும், அன்றிலும், நிலவும் சூர்ப் பணகையின் தாபத்தைத் தூண்டுகின்றன. அது வளர் கிறது. செயலிலும் சொல்லிலும் வெளியாகிறது. அப் போதும் அது அரக்கி ஒருத்தியின் விரகம் என்பதைக் கம்பர் காட்டிவிடுகிறார்.

சூர்ப்பணகையை இங்கேயே நிறுத்திவிட்டுப் பால காண்டத்திற்குப் போவோம். அங்கே மிதிலைக் காட்சிப் படலத்தில் சீதையின் காதலைக் கம்பர் வருணிக்கிறார். இராமனைக் கண்டு தன் மனத்தைப் பறிகொடுத்த சீதை, அன்றிரவு தனிமையில் வருந்துகிறாள். அங்கேயும் நிலவு வருகிறது. சீதையை வெதுப்புகிறது. இதைத் தாங்க முடியாமல் தவிக்கும் சீதை சந்திரனைப் பார்த்து 'நீ அமுதத்தோடும் பெண்ணோடும் கடலில் தோன்றியவன்

ஆயிற்றே! அப்படி இருந்தும், பெண்ணோடு பிறந்த நீ ஓர் ஏழைப் பெண்ணை இப்படி வருத்தலாமா?

> கொடியையல்லை நீ யாரையும் கொல்கிலாய்
> மடுவில் இன் அமுதத்தொடும் வந்தனை
> பிடியின் மென்னடைப் பெண்ணொடு என்றால் எனைச்
> சுடுதியோ கடல் தோன்றிய திங்களே.'

என்று பேசுகிறாள். இங்கு வெளியாகும் சீதையின் மென்மையை நினைவில் வைத்துக்கொண்டு, பஞ்சவடிக் காட்டில், நிலவில், காம நோயில் தவித்திடும் சூர்ப்ப ணகையைப் பார்க்கலாம். அவளுக்கும் சந்திரன் நெருப் பாகத் தோன்றுகிறான். மன்மதன் கொடுமை தாள வில்லை. ஆனால் அரக்கியல்லவா? ஆகவே, சந்திரனைக் கறியாகக்கொண்டு, மன்மதனையே கடித்துத் தின்றுவிடத் தோன்றுகிறது அவளுக்கு.

> 'கலை உவா மதியே கறியாக வன்
> சிலையின் மாரனைத் தின்னும் நினைப்பினள்'

என்று கம்பர் பேசும்போது சூர்ப்பணகையின் தாப வேகம் தெரிகிறது. அதோடு அது அரக்கியின் தாபம் என்பதும் புலப்படுகிறது.

இந்த அரக்கத் தன்மையே மறுநாட் காலையில் இராமனுடைய பர்ணசாலைக்கு எதிரில் பதி போடுகிறது. சீதை தனியாய் இருப்பதைப் பார்க்கிறாள் சூர்ப்பணகை. 'தனி இருந்தனள், சமைந்தது என் கருத்து' என்று எண்ணிக் கொடுமை நிறைந்த மனத்தோடு சீதையைத் தொடர்கிறாள். 'நில்லடீ' என்று வருகிறான் லக்ஷ்மணன். அரக்கி என்பதும், அவள் சீதைக்குத் தீங்கு கருதினாள் என்பதும் அறிந்து சூர்ப்பணகையைத் தண்டிக்கிறான்.

சூர்ப்பணகையின் புலம்பல் காடு முழுதும் அதிர்ந்து கேட்கிறது. அரக்கிதான்; கொடியவள்தான்; காமப் பிண்டம்தான்; என்றாலும் இராவணன் பெருமையை யும், தன் பரிபவத்தையும் சேர்த்துப் பார்த்து, எண்ணி எண்ணி,

'கரன் இருந்த வனமன்றோ
இவை படவும் கடவேனோ
அரன் இருந்த மலைஎடுத்த
அண்ணாவோ அண்ணாவோ'

என்று அவள் கதறும்போது நமக்குச் சிறிது இரக்கம் ஏற்படுகிறது. இந்த இரக்கத்தால் தூண்டப்பெற்று, அவள் கரனிடம் ஓடி முறையிடுவதையும், பிறகு இராவணனிடம் ஓடி, அவன் மனத்தை மாற்றுவதையும் காண, அவளோடு போகிறோம். அங்கேயும் சூர்ப்பணகையின் காமமும், கொடுமையும், சாதுரியமும் வெளியாகின்றன.

## காமமும் கவலையும்

அரற்றிக்கொண்டு கரனிடம் ஓடினாள் சூர்ப்பணகை. கரன் இராவணனுக்குத் தம்பி முறை; இராவணனுடைய சிறிய தாயின் மகன். ஜனஸ்தானத்தில், சூர்ப்பணகையின் காவலுக்காகவும், இராவண சாம்ராஜ்யத்தின் வடக்கெல்லைப் பாதுகாப்புக்காகவும் இருந்த அரக்கர் படைகளின் தலைவன். தன் வீரத்திலும், தன் பதவியிலும் மிகுந்த பெருமை உடையவன். ஆகவே, அவனை 'மாக்கரன்' என்று கம்பர் நமக்கு அறிமுகப்படுத்துகிறார்.

அவன் மாக்கரன் என்பது சூர்ப்பணகைக்கும் நன்றாகத் தெரியும். ஆகவே, அவனிடம் எப்படித் தன் வயிற்றெரிச்சலைத் தெரிவித்தால் அவனுக்கு உடனே கோபம் மூளும் என்பதை, சூர்ப்பணகையால் தீர்மானிக்க முடிகிறது. அப்படித் தீர்மானிப்பதற்கு வேண்டிய சாதுரியம் மானபங்கப்பட்டுத் தவிக்கின்ற இந்த நிலையிலும் சூர்ப்பணகைக்கு இருக்கிறது. நிராசையும், வேதனையும், வஞ்சமும் அந்தச் சாதுரியத்தைச் சீவிக் கூராக்கியே விடுகின்றன. கரனுடைய காலிலே போய் விழுந்த சூர்ப்பணகையை, 'யார் உன்னை இப்படிச் செய்தது, கூச்சமில்லாமல்?' என்று கரன் கேட்கிறான். சூர்ப்பணகையின் பரிபவத்தைப் பற்றிக் குறிப்பிடுவதற்குக் கூடக் கரன் கூசுகிறான். ஆகவே அதற்குக்

காரண பூதர்களாய் இருந்தவர்களுடைய கூச்சமற்ற தன்மையே கரனுக்குப் பெரிதாய்த் தோன்றுகிறது.

'கூசலர் உன்னை இத்தன்மையை
ஆக்கிப் போனவர் யார் கொல்'

என்று அவன் கேட்கிறான். அவன் கூச்சத்தையும் அதன் காரணத்தையுங் கூடச் சூர்ப்பணகை உணர்ந்து கொள்கிறாள். இருக்கட்டும் என்று அதை மனத்தில் வைத்துக்கொண்டு கரனுடைய பெருமைக்கு எது ஆத்திரத்தை மூட்டுமோ அதை முதலில் சொல்லுகிறாள். 'யாரா? யாரென்று கேட்கிறாய்? இரண்டு மனிதர்கள்' என்று தொடங்குகிறாள். இது ஒன்றே போதும் கரனுடைய கோபத்தைத் தூண்டிவிட. ஆனால், இதோடு அவர்கள் தபஸ்விகள் என்றும் சேர்த்து விடுகிறாள். கரனுக்கு மனிதர்களிடத்திலே அலட்சியம்; தபஸ்விகளிடத்திலே பகை. 'மனிதப் பூச்சிகளா?' என்று பிரமிக்கிறான். 'தவம் செய்யும் அடாபிடிகளா?' என்று குமுறுகிறான். இரண்டு வகையிலும் அவன் கோபம் பொங்குகிறது. சூர்ப்பணகைக்குக் கவலை; எங்கேயாவது மனிதர்தானே என்று கரன் அலட்சியமாக இருந்துவிட்டால்? 'சாதாரண மனிதர்கள் இல்லை; வில்லேந்தியவர். அரக்கர்கள் என்ற பெயரைக் கேட்டதும் ஓட்டம் பிடிக்கும் இரண்டு கால் பிராணிகள் இல்லை. அரக்கர்கள் இருக்கும் இடம் தேடித்திரியும் வீரர்கள்' என்றவுடனே கரனுக்குக் கோபம் மாத்திரம் இல்லை, அப்படியானால் அவர்களைக் காண வேண்டும் என்ற வீர உணர்ச்சியும் மேலிடுகிறது. தருமத்தின் கட்சியில் சேர்ந்தவர்கள் என்றும் சூர்ப்பணகை சொல்லி வைக்கிறாள். 'தருமத்தின் கட்சி ஜனஸ்தானத்தில் வாலாட்டுவதா? என் எல்லையில் அது செல்லுமா?' என்றும் கரன் நினைத்திருக்க வேண்டும்.

அதெல்லாம் சரிதான். இப்படிப் பக்குவமாகப் பேசும் போதும், சூர்ப்பணகையின் நெஞ்சைக் கவ்வி நிற்கும் காமம் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது. இராம லக்ஷ்மணர்களுடைய அழகைப்பற்றியும் ஒரு குறிப்பு அவளை அறியாமலே பேச்சின் நடுவில் வந்து விழுந்து விடுகிறது. அவள் பேசுவதைக் கேளுங்கள்:

'இருவர் மானிடர், தாபதர், ஏந்திய
வரிவில் வாட்கையர், மன்மதன் மேனியர்,
தரும நீரர், தயரதன் காதலர்,
செருவில் நேரும் நிருதரைத் தேடுவார்'

'மன்மதன் மேனியர்' என்றவுடன் கரன் சூர்ப்பணகையை ஒரு மாதிரியாகப் பார்த்தானோ என்னவோ, சூர்ப்பணகை தன் தவற்றைத் திருத்திக்கொள்ள நினைக்கிறாள். 'உன் வலிமையை அவர்கள் லக்ஷியம் செய்வதாகத் தெரியவில்லை. தருமத்தின் வழிதான் அவர்களுக்குப் பெரிது. ஆமாம், அரக்கர்களை வேரறுப்பதையே கொள்கையாக உடையவர்கள்' என்று மறுமுறை இராம லக்ஷ்மணர்களின் தரும நாட்டத்தையும், அரக்கர்களிடம் அவர்களுக்குள்ள பகைமையையும் அழுத்தமாகக் கூறுகிறாள்.

கரன் அசைந்து கொடுக்கிறான் என்பதைக் கண்ட சூர்ப்பணகை, முன்னே கரன் காட்டிய கூச்சத்தின் காரணத்தை உணர்ந்தவள் அல்லவா, அதை இப்போது பயன்படுத்திக் கொள்கிறாள். தான் இராவணன் தங்கை என்பதைச் சூர்ப்பணகை மறக்கவில்லை. கரனும் மறக்கவில்லை என்பதை அவனுடைய கூச்சத்தில் சூர்ப்பணகை கண்டாள். இப்போது அந்த இராவணன் பெயரை உபயோகிக்க அவள் தயங்கவில்லை. குரலைச் சிறிது தாழ்த்திக் கொண்டு 'நல்ல அழகி ஒருத்தி அவர்களோடு இருந்தாள். அவளை இலங்கையர்கோனுக்குக் கொண்டுபோகலாம் என்று எண்ணி, அவள் மேற் பாய்ந்தேன். அவ்வளவுதான். அம் மனிதர்கள் கோபித்து எழுந்து இப்படி மூக்கைத் துண்டமாக்கினர்' என்று முடிக்கிறாள் சூர்ப்பணகை.

தற்பெருமை, தபஸ்விகளிடம் இயற்கையாக உள்ள வெறுப்பு, 'இதேதடா சங்கடம். நம்முடைய காவல் எல்லையில் இப்படி நடந்துவிட்டதே! இராவணன் என்ன சொல்வானோ?' என்ற கவலை, எல்லாவற்றையும் ஒருங்கே தூண்டுகிறது சூர்ப்பணகையின் பேச்சு. இடையிலே வந்து குதித்த 'மன்மதன் மேனியர்' என்ற சொற்களின்

அசந்தர்ப்பத்தையும் மெல்ல அழித்து விடுகிறது. கரன் கோபாவேசத்தோடு போருக்கு எழுகிருன்.

பிறகு நடந்த போரின் கதையைத் தாண்டிச் செல்வோம். கரன் முதலியோர் மடிந்தபிறகு,

'வாக்கினுல் உங்கள் வாழ்வையும் நாளையும்
போக்கினேன் கொடியேன்'

என்று புலம்பும் சூர்ப்பணகைக்குத் தன் வாக்கின் பலம் தெரிந்தே இருக்கிறது. 'ஐயோ, என் ஆசையால் என் மூக்கையும், என் வாக்கினுல் உங்கள் வாழ்வையும் தொலைத்தேனே!' என்று ஓலமிடுகிருளே தவிர, அந்த ஆசையும் ஓயவில்லை; அந்த வாக்கு சாதிக்க இருக்கும் தீங்கும் முற்றுப்பெறவில்லை. இரண்டின் வேகத்தையும் மறுபடியும் காண்பதற்கு அவளோடு இலங்கைக்குப், போகவேண்டும்; போவோம்.

## தீயை மூட்டிய தீமை

கம்பருடைய கற்பனை இரதத்தில் ஏறி சூர்ப்பணகைக்கு முன்னரே இலங்கையை நாம் அடைந்துவிடுகிறோம். இலங்கையின்செல்வமும், இராவணேச்வரனுடைய பெருமையும் நம்மைப் பிரமிக்க வைக்கின்றன. சிறிது நேரத்திற்கு, சூர்ப்பணகையை மறந்து விடுகிறோம். தேவர்கள் யாவரும் கைகட்டி வாய் புதைத்துக் குற்றேவல் புரியும் காட்சியைப்பார்த்து, இராவணனுடையஅளவில்லாத ஆற்றலின் அகலத்தில் கம்பரோடு நம்முடைய மனத்தைப் படரவிட்டு நிற்கும்போது, இலங்கை வடக்குக் கோபுர வாசலிலிருந்து வரும் பேரரொலி நம்முடைய காதில் விழுகிறது. ஆம், சூர்ப்பணகைதான்! இடி முழக்கத்தைத் தோற்கச் செய்யும் குரலில் அரற்றிக்கொண்டு, திறந்த வாயோடு அவள்தான் வருகிருள். வந்துவிட்டுப் போகட்டுமேஎன்று நம்மால் இருக்க முடியவில்லை. இலங்கைக்கு வரும் வழியில் 'கரன் முதலிய அரக்கர் அழிந்து போனதை மறந்துவிட்டவள் போல, சீதையின் தன்மையை இராவணனுக்குச் சொல்லும் நோக்கத்தோடு

சூர்ப்பணகை வருகிருள்' என்று கம்பர் அறிவித்தாரே, அது இப்போது நமக்கு ஞாபகம் வருகிறது. 'ஆமாம், சீதையின் தன்மையைப் பேச வருவானேன்? தனக்கு ஏற்பட்ட பரிபவத்தைச் சொல்லி முறையிடுவதற்கு அண்ணனிடம் வருவது இயற்கை. சீதையைப் பற்றிப் பேசுவதிலே இவளுக்கு என்ன லாபம்?' என்று நம்மையே கேட்டுக் கொள்கிறோம்.

இந்தக் கேள்விக்குப் பதில் வேண்டுமானால் சூர்ப்பணகை என்ற பாத்திரத்தின் இயல்பைக் கவனிக்க வேண்டும். கம்பர் இதற்கு உதவி புரிகிருர். கரன் முதலியோர் இறந்ததை மறந்தவள்போல இராமனிடம் தனக்கு உள்ள பேராசையால் மனம் வெம்பி, சீதையின் தன்மையைப்பேச இலங்கைக்கு வருகிருள் சூர்ப்பணகை என்பது கம்பர் கூற்று.

'இரைக்கு நெடும் பழனை அரக்கர் இறந்ததனை
 மறந்தனள்போல்இராமன் தூங்க
வரைப்புயத்தின் இடைக் கிடந்த
 பேராசை மனம் கவற்ற ஆற்ருளாகித்
திரைப் பரவைப் பேரகழித் திண்நகரில்
 கடிது ஓடிச் சீதை தன்மை
உரைப்பென் என,

வருகிருள் சூர்ப்பணகை' என்கிருர் கம்பர். சரிதான், இராமன் பேரில் ஏற்பட்ட ஆசை இன்னும் அடங்கவில்லையா? இராமனை எப்படியாவது பெற்றுவிடவேண்டும், இதுதானே சூர்ப்பணகையின் கவலை? இதற்காகச் சீதையின் தன்மையைப் பற்றி இராவணனிடம் எதற்காகப் பேசுவது? இதுவே கேள்வி. சீதையைப் பற்றிப் பேசுவது என்று சூர்ப்பணகை போட்ட திட்டம் அவளுடைய சமயோசிதபுத்தியின் கூர்மையைத் தெளிவாகக் காட்டுகிறது. இராவணனுடைய பலவீனம் அவளுக்கு நன்ருகத் தெரியும். பெண்கள் விஷயத்தில் அவனுக்குச் சபலம். இதைச் சூர்ப்பணகை நன்ருக அறிவாள். ஒரு காமப்பூச்சி மற்ருென்றை அளந்துவிடாதா? சீதையைப் பற்றிப் பேசுகிறபடி பேசிவிட்டால், இராவணன் அவளை எப்படியாவது கவர்ந்து வந்துவிடுவான். அப்போது

இராமனையும் சிறைப்பிடித்து வருவான். தன் ஆசையும் நிறைவேறும் என்பதுதான் சூர்ப்பணகையின் மனக் கோட்டை.

ஆனால், இராமனுடைய வில் ஒன்று
அதைச் சமாளிப்பது சமாளியமான காரியமா? கரதூஷணர்கள் பட்டபாடு சூர்ப்பணகைக்குத் தெரியாதா? தெரியும். ஆனால், அவளை ஆட்டி வைக்கும் காமத்தின் மிகுதியில், கரதூஷண திரிசிரவதத்தை மறந்துவிட்டவள் போலவே அவள் நடந்துகொள்ளுகிறாள். காமப் பிண்டம் ஒன்று, தன் பசியை ஆற்றிக் கொள்ள எதை வேண்டுமானாலும் செய்யத் தயார்; மற்றையோர் பல வினைத்தைக் கருவியாகக் கொண்டு தன் இச்சையைப் பூர்த்தி செய்து கொள்ள அது துடிக்கிறது; அந்தத் துடிப்பில் பிறருக்குத் தீங்கு நேருமே என்ற கவலை அதற்கு இல்லை. இந்தக் காமப் பிண்டத்தின் பெயர் சூர்ப்பணகை.

இதையெல்லாம் இராவணனிடம் அவள் பேசுகின்ற பேச்சில் பார்த்துவிடலாம். 'யாவர் செயல்' என்று கேட்கிறான் இராவணன். கரன் கேட்ட கேள்விதான்; ஆனால், கரன் இரண்டு அடிகளில் கேட்பதை இரண்டே வார்த்தைகளில்கேட்கிறான் இராவணன். ஜனஸ்தானப்படைத் தலைவன் பெருமைக்கும், இலங்கேச்வரனுடைய பராக்கிரமத்திற்கும் உள்ள வித்தியாசம் பளிச்சென்று நமக்குத் தோன்றுகிறது. 'இருவர் மானுடர் தாபதர்' என்று கரன் கேட்ட கேள்விக்கு உடனே பக்குவமான பதில் தரும் சூர்ப்பணகை இராவணன் முன் சிறிது தடுமாறுகிறாள்.

'மானுடர் தடிந்தனர் வாளுருவி' என்று சொல்லுகிறாள். உண்மைதான். ஆனால், இதை முதன் முதலில் சொல்லாமல், அதற்குப் பதிலாகச் சுற்றி வளைத்து,

'கானிடை அடைந்து புவி காவல்
புரிகின்றார்
மீனுடை நெடுங்கொடியோனை
அனையர் மேல் கீழ்
ஊனுடை உடம்புடைமை
ஓர் உவமை ஒவ்வா
மானுடர் தடிந்தனர்கள் வாள்உருவி'

என்று பேசுகிறாள். இது ஏன்? இராவணனுடைய முன்னிலையில் பேசுகிறோம் என்ற நினைவு ஒரு காரணமாய் இருக்கலாம். இதைவிட முக்கியமானது, சூர்ப்பணகையின் மனத்தில் காமம் பிருமாண்டமாக வளர்ந்து விட்டதுதான். கரதூஷண திரிசிர வதங்கூட இந்தக் காமத்திற்கு உணவாக அமைந்து, அதுதடிப்பதற்கு உதவியது. ஆம்; இல்லாவிட்டால், கரன் முதலியோர் ஒன்றும் செய்யவில்லையா? அம் மனிதர்களைக் கொல்ல வில்லையா? என்று இராவணன் கேட்கும் போது சூர்ப்பணகை சொல்லும் பதிலில் கரன் முதலியோர் அழிந்ததைப் பற்றிச் சிறிதாவது வருத்தமோ அங்கலாய்ப்போ இராதா? அந்தப் பதிலைக் கேளுங்கள் :

'சொல் என்று என் வாயிற் கேட்டார்
தொடர்ந்தெழு சேனையோடும்
கல் என்ற ஒலியிற் சென்றார்
கரன் முதல் காளை வீரர்;
எல்லொன்று கமலச் செங்கண் இராமன்
என்று இசைத்த ஏந்தல்
வில் ஒன்றில் கடிகை மூன்றில்
ஏறினர் விண்ணில்'.

எப்படி இருக்கிறது, பார்த்தீர்கள் அல்லவா? கரனும் அவன் வீரர்களும் அதிர்ந்து சென்ற கம்பீரக் காட்சியும், அந்த வீரர் வெள்ளத்தை ஒரே வில்லைத் துணையாகக் கொண்டு மூன்று நாழிகைக்குள் விண் ஏற்றிய இராமனுடைய வீர சௌந்தர்யமும் இந்தப் பாட்டின் பொருளாக நிற்கின்றன. கரன் பட்டான். ஆனால் இராமனுடைய பெருமையைத்தான் சூர்ப்பணகை அதிலே கண்டாள். தன் உறவினர் தனக்காகப் பலியானதை அவள் எண்ணவில்லை. இராமனுடைய வில்லின் சேவகமும், அவன் மரகத வடிவும், கமலக் கண்களுமே அவள் மனத்தில் நிரம்பி நிற்கின்றன.

'யாவர் செயல்' என்று இராவணன் கேட்டதற்குப் பதில் சொல்லும் சூர்ப்பணகை, தன் பேச்சிலிருந்து இராம லக்ஷ்மணர்களுடைய அழகைப்பற்றிய குறிப்புகளை

விலக்க முடியாமல் தவிக்கிறாள். 'முனிவர்களை வணங்கு கிறார்கள். அம் முனிவர்களுக்காக அரக்கர் குலத்தை வேரறுக்க முடிவு செய்திருக்கிறார்கள். உன்னைத் தூசி யாக மதித்திருக்கிறார்கள்' என்பதைத்தான் அழுத்தமாகக் கூற எண்ணுகிறாள். இப்படிச் சொன்னால்தான் இராவண னுக்குக் கோபம் வரும் என்பது சூர்ப்பணகைக்குத் தெரியாதா? தெரியும். இருந்தாலும் இராம லக்ஷ்மணர்க ளுடைய உருவ அழகும், பராக்கிரமும், சூர்ப்பணகையின் சொல்லைத் தம்மை நோக்கித் திருப்புகின்றன. அவள் என்ன செய்வாள்? 'மன்மதனை ஒப்பர்', 'இந்துவின் முகத்தார்', 'நீரில் எழு நாளக்கந்த மலரைப் (அதாவது தாமரையை) பொருவு (ஒத்த) கண்ணர் (கண்களை உடையவர்)', 'மாரர் உளரே இருவர்' என்றெல்லாம் இராம லக்ஷ்மணர்களுடைய வடிவைத் தன்னையும் அறியாமல் பாராட்டுகிறாள். அதுபோலவே 'வட மேரு வின் வலிமையையும், ஏழுலகின் உரத்தையும் அழிக்க வல்லவர்; விற் கலையைப் பயின்றவர்; அவர்களை விஞ்சிய வில் வல்லார் உலகிலே இல்லை. இவ்விருவரும் திரிமூர்த்திகளுக்குச் சமானமானவர்கள்' என்று அவர் களுடைய பராக்கிரமத்தையும் புகழ்கிறாள்.

ஒன்று கவனிக்க வேண்டும். இராமனிடத்தில் அல்லவா முதலில் சூர்ப்பணகை ஈடுபட்டாள்? ஆனால் அவனைப்பற்றி மாத்திரம் இங்கே அவள் பேசவில்லை. லக்ஷ்மணனைப் பற்றியும்—தன்னை மூக்கரிந்துவிட்ட அவனைப் பற்றியும்—சேர்த்தே பேசுகிறாள். இதென்ன கூத்து என்று நினைக்கிறோம். சூர்ப்பணகை இராமனிடம் முறையிட்ட சம்பவம் ஞாபகத்திற்கு வருகிறது. அப்போது 'நீ என்னை ஏற்றுக்கொள்ளாவிட்டாலும் இளையவனையாவது என்னை ஏற்றுக்கொள்ளும்படி சிபாரிசு செய்.

இளங்கோவோடு எனை இருத்தி'

என்று சூர்ப்பணகை கேட்டாள். இதுவே காமத்தின் இயற்கை. இராமனிடத்தில் சூர்ப்பணகைக்கு ஏற்பட்டது காதலானால், அவனைத் தவிர வேறொருவனையும் சிந்தை

யாலும் தொடாத நிலையல்லவா உண்டாகி இருக்கும்? அது இல்லை. சூர்ப்பணகைக்கு வேண்டியதெல்லாம் அழகிய ஆடவன் ஒருவன். இராமன் கிடைக்காவிட்டால் அவனுக்கு அழகிலே அநேகமாகச் சமானமான லக்ஷ்மணன்தான் இருந்துவிட்டுப் போகட்டுமே என்று அவள் தீர்மானிக்கிறாள். மிருக இச்சைதான் அவளை ஆட்டுகிறது என்பதற்கு இதைவிட அத்தாட்சி வேண்டுமா?

இராம லக்ஷ்மணர்களுடைய அழகையும், வீரத்தையும் பற்றி இப்படிச் சூர்ப்பணகை பேசி வந்ததும், கரன் முதலியோருடைய வதத்தை அவள் உற்சாகமாக வருணித்ததும் இராவணனுக்கு அவளிடத்திலே சிறிது சந்தேகத்தை உண்டாக்குகிறது. 'ஆமாம்; நீ என்ன குற்றம் செய்தாய்?

நீ இடை இழைத்த குற்றம்
    என்னைகொல், நின்னை இன்னே
வாயிடை இதழும் மூக்கும்
    வலிந்து அவர் கொய்ய'

என்று கேட்கிறான். சூர்ப்பணகை விழித்துக் கொள்ளுகிறாள். 'என் பேரில் உள்ள குற்றமா?' என்று இராவணன் கேட்ட கேள்வியைத் திருப்பிச் சொல்லிக்கொண்டு, சூர்ப்பணகை பதில்சொல்லத் தொடங்குவதில் இருந்தே, அவள் தன்னைச் சமாளித்துக்கொள்ள முயல்கிறாள் என்பது தெரிகிறது. சீதையைப் பற்றிப் பேசவேண்டும், அவளைப் பற்றியே பேசவேண்டும் என்றே ஆரம்பிக்கும் இந்த நிலையிலும் இராமன் நினைவு குறுக்கிடுகிறது.

'என் வயின் உற்ற குற்றம்
    யாவர்க்கும் எழுதவொண்ணாத்
தன்மையன் இராமனோடும்
    தாமரை தவிரப் போந்தாள்
மின் வயின் மருங்கு கொண்டாள்
    வேயினின் மென்தோள்கொண்டாள்
பொன்வயின் மேனி கொண்டாள்
    பொருட்டினால் புகுந்தது'

என்று தொடங்கிய சூர்ப்பணகை 'யாவர்க்கும் எழுத வொண்ணுத் தன்மையன் இராமன்' என்று இடையில் வந்து குதித்த சொற்களை ஏன் சொன்னேம் என்று பல்லைக் கடித்துக்கொண்டு ஒரே மூச்சில் ஆவேசத்தோடு சீதையின் அழகை வருணிக்கப் புகுகிருள்.

பொருமை, இராவணன் சந்தேகத்தைத் துடைக்க வேண்டும், அவன் காமத்தைக் கிளறிவிட வேண்டும் என்ற ஆத்திரம், இராமலக்ஷ்மணர்களைப்பற்றிப் புகழ்ந்து அதிகமாகப் பேசிவிட்டோமே என்ற கவலை, இவை எல்லாம் ஒன்ருகச் சேர்ந்து சூர்ப்பணகையின் வார்த்தைகளுக்கு அளவில்லாத சக்தியைத் தந்துவிடுகின்றன. சூர்ப்பணகை சமத்காரமாகப் பேசக் கூடியவள்தான்; என்ருலும் சீதையை அவள் இங்கே வர்ணிக்கும்போது தன்னையே வென்றுவிடுகிருள். அவ்வளவு வேகம், அவ்வளவு கவிதை, அவளுடைய பேச்சில் விம்முகின்றன. 'சீதையா? அவளைப்பற்றிப் பேசிவிட முடியுமா? தாமரையில் உள்ள லக்ஷ்மியும் அவளுக்குச் சேடியாகுந் தகுதி உடையள் இல்லை. அப்படியானல்,

யாமுரை வழங்கும் என்பது
ஏழைமைப் பாலது அன்ருே?

அவள் நெற்றியிலே சிதறிக் கிடக்கும் அளகம் மஞ்சை ஒத்திருக்கும். அவள் கூந்தலோ மழை மேகத்தைப் போன்றது. அடிகள் பஞ்சு; விரல்கள் பவளம்; சொற்கள் அமுதம்; அவள் முகம் தாமரையின் அளவுதான்; ஆனல் கண்களோ, அப்பா, அவை கடலினும் பெரியவை.

மஞ்சு ஒக்கும் அளக ஓதி
மழை ஒக்கும் வடித்த கூந்தல்
பஞ்சு ஒக்கும் அடிகள்
செய்ய பவளத்தின் விரல்கள், ஐய,
அஞ்சொற்கள் அமுதில்
அள்ளிக் கொண்டவள் வதனம் மைதீர்
கஞ்சத்தின் அளவிற்று ஏனும்
கடலினும் பெரிய கண்கள்.'

சீதையின் வடிவத்தைப்பற்றி பல இடங்களில் நேராகவும், பாத்திரங்கள் மூலமாகவும் கம்பர் பேசுகிருர். என்ருலும் சூர்ப்பணகைக்கு அவர் தருகின்ற வருணனைச் சக்தியின் அளவும் தன்மையும் வேறு எங்கும் காண முடியாது. அளவிலே மிகுந்தது என்பதுமாத்திரம் அன்று. இச்சையைத் தூண்டக்கூடிய வகையில் அது அமைந்திருக்கிறது. வெற்றியும் பெறுகிறது. சீதையின் அழகிலே இராவணன் ஈடுபட்டுவிட்டான் என்பதைக் கண்ட சூர்ப்பணகை 'சரி, அவளைக் கொண்டு வந்துவிடு' என்பதைப் பக்குவமாகச் சொல்லுகிருள். முதலில் நேரடியாக அதைச் சொல்லாமல், 'கொண்டு வந்தால் எப்படி இருக்கும் தெரியுமா? இந்திரனுக்கு சசி, சிவனுக்கு உமை, திருமாலுக்கு லக்ஷ்மி, நீ மாத்திரம் சீதையைப் பெற்றுவிட்டால்...!

சீதையைப் பெற்ருய் நீயும்;
அந்தரம் பார்க்கின் நன்மை அவர்க்கில்லை உனக்கே ஐயா.'

என்று சொல்லி, சீதையைக் கவர்ந்து வரவேண்டும் என்ற எண்ணத்தை இராவணன் மனத்தில் விதைக்கிருள். பிறகு அதை,

'மேகத்தின் மின்னை முன்னே
வென்ற நுண்ணிடையை நீயும்
மாகத் தோள் வீர பெற்ருல்'

என்று திருப்பிச் சொல்லி வளர்க்கிருள். அதன் பிறகு, 'இப்படிச் செய்தால் உனக்கு நன்மையைத் தான் செய்கிறேன். ஆனல், உன் அந்தப்புரத்தில் உள்ள மகளிருக்குத் தீங்கே இழைக்கிறேன். சீதை வந்து விட்டால் அவர்களை நீ திரும்பியும் பார்க்கமாட்டாய் அல்லவா?

வள்ளலே உனக்கு நல்லேன்
மற்று நின் மனையில் வாழும்
கின்னை போல் மொழியார்க்கு
எல்லாம் கேடு சூழ்கின்றேன் அன்றோ'

என்று அந்த எண்ணத்தை நன்ருக வேரூன்றிவிட முயல்கிருள். முயற்சி பலித்துவிட்டது என்று கண்டதும், 'சீதையைக் கொண்டுவந்து அவளோடு இன்பத்தை அனுபவி.

தேன் கொண்டு ஊடாடும் கூந்தல்
சிற்றிடைச் சீதை என்னும்
மான் கொண்டு ஊடாடு நீ'

என்று முடிக்கப் போகின்றவள் இதுதான் சமயம் என்று தன் காரியத்தையும் மறவாமல், அதையும் சொல்லி வைக்கிருள்:

'உன் வாள் வலி உலகம் காண
யான் கொண்டு ஊடாடும் வண்ணம்
இராமனைத் தருதி என்பால்'

சீதையின் அழகைக் கேட்டமாத்திரத்திலே மயங்கி நிற்கும் இராவணன் இந்த வேண்டுகோளைக் கவனித்தானே என்னவோ! வேதனையும் அவமானமும் தாங்காமல் துடிக்கும் பெண்மையின் வேடத்தை மேற்கொண்டு, நீலிக்கண்ணீர் வடித்து, 'இப்படிப் பட்ட சீதையை உன்னிடம் கொண்டு வந்து சேர்க்க முயன்றதுதான் என் குற்றம். அதற்காக என்னை இப்படி அவமானப்படுத்தி விட்டார்கள். இனிமேல் எனக்கு வாழ்வு ஏது? உன்னிடம் இதைச் சொல்லி விட்டு உயிரை விடலாம் என்று துணிந்துதான் வந்தேன்.

முடிந்த தென் வாழ்வும் உன்னின்
சொன்ன பின் உயிரை நீப்பான் துணிந்தனென்'

என்று பேச்சை முடிக்கிருள் சூர்ப்பணகை. 'இவள் தான் மானி ஆயிற்றே; உயிரைவிடப் போகிருளே, பின் எதற்காக 'இராமனைத் தருதி' என்று சற்று முன் கேட்டாள்?'' என்றெல்லாம் கேட்டுக்கொள்ளும் நாம், சூர்ப்பணகை நடித்தது ஓர் அற்புத நாடகம் என்பதைத் தெரிந்து கொள்ளுகிருேம்.

இராவணனுக்கு இதற்கெல்லாம் இப்போது நேர மில்லை. சீதை ஒருத்தியைத் தவிர மற்றைய எல்லா வற்றையும் அவன் மறந்துவிடுகிறான். 'வந்த காரியம் பலித்துவிட்டது' என்று உணர்ந்து, சூர்ப்பணகை அந்த இடத்திலிருந்து நழுவிவிடுகிறாள்.

மறுபடியும் ஒரே ஒரு தடவைதான் அவள் தோன்றுகிறாள். அதற்குள் இராவணனுக்குக் காம வெறி தலைக்கேறி விடுகிறது. நிலவையும், தென்றலையும், பகலையும், இருதுக்களையும் பழித்து ஒதுக்கிவிட்டு, இருட்டை வருவித்து, அதன் மத்தியில் நிற்கிறான். அப்போது இருட்டின் நடுவிலே ஒளி மயமான பெண் வடிவம் ஒன்று அவன் கண் முன் உதயமாகிறது. 'இவள்தான் சீதையோ? சூர்ப்ப ணகையை அழைத்துக் கேட்போம்' என்று அவளை அழைக்கிறான். அவள் வருகிறாள். 'கருமையான வாள் போன்ற கண்களோடு, இதோ மயில்போல் என் முன்னே நிற்கிறாளே, இவள்தான் நீ சொன்ன சீதையா?' என்று கேட்கிறான் இராவணன். இருட்டைத் துழாவு கின்றன சூர்ப்பணகையின் கண்கள். 'ஆமாம் ஒரு வடிவம் தென்படுகின்றது. என்ன சௌந்தர்யம்! செந் தாமரைக் கண்கள்; செங்கனிவாய்; அகன்ற தோள்கள்; நீண்ட கைகள்; மாலை ஏந்திய விசாலமான மார்பு! நீலக் குன்று ஒன்றைப்போல் என் முன்னே நிற்கும் இந்தச் சுந்தர வடிவம் இராமனுடையதல்லவா? வந்துவிட் டான்; ஆமாம்; இவன்தான் இராமன்.

செந்தாமரைக் கண்ணொடும்
    செங்கனி வாயினொடும்
சந்தார் தடம் தோளொடும்
    தாழ் தடக் கைகளோடும்
அந்தார் அகலத்தொடும்
    அஞ்சனக் குன்றம் என்ன
வந்தான் இவனாகும்
    அவ் வல்வில் இராமன்'

என்று உணர்ச்சியோடு பேசுகிறாள் சூர்ப்பணகை. அவள் கொடுமை நெஞ்சிலிருந்து இராமன் இன்னும்

மறையவில்லை என்பதைக் கவிஞர் எவ்வளவு அருமை யாகக் காட்டிவிட்டார்!

இராவணன் கேட்கிறான்: 'நீ கண்டதும் நான் கண்டதும் ஏன் மாறுபடுகின்றன?'

சூர்ப்பணகை சொல்கிறாள்: 'நீ கண்டது உரு வெளித் தோற்றம். மிதமிஞ்சிய காதலால் நீயாகவே சிருஷ்டித்துக்கொண்ட பிரமை'.

இராவணன் கேட்கிறான்: 'அப்படியானால் நீ கண் டது என்னவோ? உனக்கு அந்த இராமனிடம்...'

சூர்ப்பணகை சொல்கிறாள்: 'அதுவா? ஆமாம், இராமன், என்று எனக்குத் தீராத இன்னல் செய்தானோ, அன்றிருந்து அவனை நான் மறக்கவேயில்லை.'

"இராமன் இழைத்த தீராத இன்னல்" என்கிறாளே, எதைக் குறிக்கிறாள் சூர்ப்பணகை? தனக்கு நேர்ந்த அங்க பங்கத்தை என்று இராவணன் நினைத்திருக்கலாம். அப்படி அவன் எண்ண வேண்டும் என்பதுதான் சூர்ப்ப ணகையின் கருத்து. ஆனால் நமக்குத் தெரியாதா அவள் குறிப்பிடுவது? இராமனைப் பார்த்ததும் அவள் மனத்திலே எழுந்த காம நோயைத்தான். அந்த நோயைப் போக்கிக் கொள்ளவே இராவணன் மனத்திலே நெருப்பு வைத் தாள். இப்போது அவனுக்கு அவள் தரும் யோசனை இதுதான்: 'சீதையைக் கவர்ந்து வந்துவிடு.

பூமாண் குழலாள்தனை வெளவுதி போதி'

இவ் வார்த்தைகளோடு காவிய அரங்கிலிருந்து சூர்ப்பணகை வெளியேறுகிறாள். அண்ணன் மனத்திலே அணையாத காமத்தீயை மூட்டிவிட்டாள். அரக்கர்குல நாசத்திற்கு அடிகோலிவிட்டாள். அவள் வந்த காரியம் ஆகிவிட்டது. இனி அவள் இருந்தால் என்ன? போனால் தான் என்ன?

# கடல் கடைந்த கை

## வாலி

கடல் கடைந்த கையா ?

ஆம்; பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்த வீர வாலியின் கை. அது கடலை மட்டுமா கடைந்தது? கம்பருடைய காவிய அரங்கத்திலே இந்தக் கை தோன்றி இலட்சியத் தலைவனை இராமனைப் பற்றி நம் மனத்திலே உள்ள பெருமைக் கடலையும் முதலில் கடைந்துவிடு கிறது. பாற்கடலைத் தேவர்களும் அசுரர்களும் கடைந்த போது, அமுதம் எழுவதற்கு முன் ஆலகாலவிஷம் திரண்டெழுந்ததாகப் பேசுகிறது கதை. நம்முடைய மனத்திலும் இப்படித்தான். வாலியை இராமன் கொன்றது நியாயமா, நியாயமேயானாலும்,

> 'ஒளித்து நின்று
> வரிசிலை குழைய வாங்கி
> வாயம்பு மருமத்து எய்தல்'

தருமமாகுமா என்ற கேள்விகள் முதலில் தலைதூக்குகின்றன. இவற்றிலிருந்து விளையும் குழப்பமும், சந்தேகமும் எத்தனையோ பேருடைய மனத்திலே இருளைத்தூவி இராமனுடைய பெருமையை மறைத்துவிடுகின்றன. இந்த இருள் விலகுகிறதா? கேள்விகளுக்குச் சமாதானம்

கிடைக்கிறதா? கடைசியில் நம்முடைய மனத்தில் பரந்து கிடக்கும் பெருமைக் கடலில் இருந்து அமுதம் திரள்கிறதா? கம்பருடைய காவியத்திலே புகுந்து நாம் பெறுகின்ற அனுபவத்தை நிதானமாக ஆராய்வோம். அப்போது உண்மை துலங்கும்.

முதலில் நாம் வாலியைச் சந்திக்கவேண்டும். காவிய அரங்கத்திலே வாலி நேரில் தோன்றுவதற்கு முன் அவனைப்பற்றி விரிவாகத் தெரிந்து கொள்ளுவதற்குச் சந்தர்ப்பம் கிடைக்கிறது. பாத்திரங்களை நேரில் கொண்டு வந்து நிறுத்துவதற்கு முன், அவர்களைப் பற்றிப் பளிச் சென்று ஓரிரு குறிப்புகளைத் தருவது கம்பருடைய வழக்கம். இதை நாம் பல தடவைகளில் பார்த்திருக்கிறோம். கூனி வரும்போது,

> இன்னல் செய் யிராவணன் இழைத்த தீமை போல்
> துன்னரும் கொடுமனக் கூனி தோன்றினள்

என்று கம்பர் பேசுவதும், அவளைப்பற்றி 'துடிக்கும் நெஞ்சினள்' 'ஊன்றிய வெகுளியள்' 'உளைக்கும் உள்ளத்தள்' 'மூன்றுலகினுக்கும் ஓர் இடுக்கண் மூட்டுவாள்' என்று கம்பர் கட்டியம் கூறுவதும் உங்களுக்கு ஞாபகமிருக்கும். 'காற்றினிலும் கனலினும் கடியானைக் கொடியானைக் கரனை' என்று கரனையும், 'எவ்வுயிரும் கையின் வளைத்து வயிற்றடக்கும் கவந்தன்' என்று கவந்தனையும் கவிஞர் அறிமுகப் படுத்துவதையும் நீங்கள் மறந்திருக்கமாட்டீர்கள். ஆனால், இராவணன் ஒருவனைத் தவிர, வேறு எந்தக் காவியப் பாத்திரத்திற்கும் வாலிக்குத் தருவதைப்போல அவ்வளவு நீண்ட அறிமுகத்தைக் கம்பர் தரவில்லை.

இந்த நீண்ட கட்டியத்தைக் கூறுவதற்குக் கதையின் அமைப்பே வாய்ப்பாக இருக்கிறது. சீதையைத் தேடிக்கொண்டு செல்லும் இராம லக்ஷ்மணர்கள், சபரி குறிப்பிட்ட ருச்யமூக பர்வதச் சாரலை அடைகிறார்கள். அவர்கள் வந்தவுடனேயே அங்கே உள்ள சுக்ரீவனும் மற்றைய வானரர்களும் அவர்களைப் பற்றி ஒன்றும் தெரியாத நிலையில் பயந்துவிடுகிறார்கள். பயப்படுவா

னேன்? இங்கே வருகிறது வாலியைப் பற்றிய முதற் குறிப்பு. வில்லேந்தி வருகின்ற இராம லக்ஷ்மணர்களைப் பகைவர்கள் என்றும், வாலியின் ஏவலால் தனக்குத் தீங்கு இழைக்க வருகின்றவர்கள் என்றும் சுக்ரீவன் நினைக்கிறான்; அவனோடு உள்ள மற்றைய வானரர்களும் அப்படியே எண்ணுகிறார்கள்:

'ஓர் கறு உடையார்
வாலி ஏவலின் வரவினர்கள்தாம் வரிசிலையர்'

பிறகு, இராம லக்ஷ்மணர்களைக்கண்டு அவர்களை இன்னார் என்று அறிந்து வரச் செல்லும் அனுமன், அவர்கள் சுக்ரீவனிடம் நட்புக் கொள்ளும் நோக்கத்தோடு வந்திருக்கிறார்கள் என்று தெரிந்தவுடனே, 'சுக்ரீவனுடைய தவம் பலித்தது. அவன் இந்திரன் புதல்வனுடைய கோபத்திற்கு ஆளாகி உலைந்து போனான். உங்கள் வருகையால் அவன் இழந்த செல்வத்தை எல்லாம் மறுபடியும் பெற்றுவிடுவான் என்பது உறுதி.

இரவிதன் சிறுவன் தன்னை
இந்திரன் புதல்வன் என்னும்
பரிவிலன் சீறப் போந்து
பருவரற்கு ஒருவனாகி
அருவி அம்குன்றில் என்னோடு
இருந்தனன் அவன்பாற் செல்வம்
வருவதோர் அமைவின் வந்தீர் '

என்று மகிழ்ச்சியோடு கூறுகிறான். வாலி 'பரிவிலன்' என்ற செய்தி இங்கே நமக்குக் கிடைக்கிறது. இராம லக்ஷ்மணர்களைப்பற்றிச் சுக்ரீவனிடம் தெரிவிக்கச் சென்றதும் 'வந்திருப்பது யார் தெரியுமா? வாலியின் உயிரைக் குடிக்கக் காலனே வந்திருக்கிறான். நம்முடைய துயரமெல்லாம் தீர்ந்தது.

விரைசெய் தார்
வாலி என்று அளவிலா
வலியினன் உயிர் தெறக்
காலன் வந்தனன்
இடர்க் கடல் கடந்தனம்'

என்று சொல்லிக் கொண்டு ஆனந்தக் கூத்தாடு கின்ருன் அனுமன்.

இப்படிக் கூத்தாடுபவன் கோழையா, வலிமை யற்றவனு? இல்லை. இராமலக்ஷ்மணர்களும் ஆச் சரியப்படும்படியாக மேருவை நிகர்த்த பேருருவம் கொண்டு நின்று,

'நாட்படா மறைகளாலும்
நவைபடா ஞானத்தாலும்
கோட்படாப் பதமே ஐய
குரக்கு உருக் கொண்டது'

என்று இராமனுல் புகழப் பெற்ற வீரன். இவனே வாலி யை 'அளவிலா வலியினுன்' என்று குறிப்பிடும்போது வாலியின் பராக்கிரமத்தைப் பற்றி பிரமாதமான உணர்ச்சி நமக்கு ஏற்படுகிறது. பிறகு,

'முரண்வலித் தடக்கை ஓச்சி
முன்னவன் பின் வந்தேனை
இருள் நிலைப் புறத்தின் காறும்
உலகெங்கும் தொடர இக்குன்று
அரண் உடைத்தாகி உய்ந்தேன்
ஆகுயிர் துறக்க அஞ்சிச்
சரண் உனைப் புகுந்தேன்'

என்று இராமனிடம் சுக்ரீவன் சரண்புகும்போது, வாலியின் வலிமை மாத்திரமன்று, அவனைப் 'பரிவிலன்' என்று அனுமன் குறிப்பிட்ட காரணமும் தெளிவாகிறது. அண்ணனுகிய வாலி, தம்பி சுக்ரீவனை உயிருக்குப் பயந்து ஓடும்படி செய்து விட்டானு, என்ன கொடுமை, ஏன் அப்படிச் செய்தான், சுக்ரீவன் ஏதாவது தவறு இழைத்தானு, என்ன இருந்தாலும் தம்பி என்று பார்க்க வேண்டாமா, என்றெல்லாம் கேட்கும் நமக்கு, வாலி யைப் பற்றி இன்னும் விரிவாகத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற முனைப்பு உண்டாகிறது. இதை ஈடு செய்யும் முறையில் வாலியின் வரலாற்றைக் கம்பர் அனுமன் மூலமாக நமக்குத் தருகிருர்.

வாலியைப் பற்றிப் பேசத் தொடங்கும் அனுமன், முதலில்,

வாலி என்றுளான் வரம்பில் ஆற்றலான்

என்று வாலியின் வரம்பில்லாத ஆற்றலையே குறிப்பிடுகிறான். இந்த ஆற்றலுக்கு அடித்தலமாக அமைந்துள்ளது வாலியின் தவ வலிமை என்றும், 'வேதப் பெருங்கடலின் வேலி போன்ற கயிலையங்கிரியில் வீற்றிருக்கிறான் சிவபெருமான். அந்தச் சூலியின் அருளைப் பூரணமாகப் பெற்றவன் இவ்வாலி.

நாலு வேதமாம் நவையில் ஆர்கலி
வேலி அன்னதோர் மலையின் மேல் உளான்
சூலியின் அருள் துறையின் முற்றினான்'

என்றும் அனுமன் சொல்லி விடுகிறான். பிறகு அனுமனுடைய கம்பீரமான சொற்களில் வாலியின் பேராற்றல் நம் கண்முன்னே வடிவாகின்றது. பேசுகின்ற அனுமன் வாலியின் கட்சியைச் சேர்ந்தவனல்லன். இதனாலேயே அவன் வாலியைப் புகழ்ந்து பேசுவது மிகுந்த அழுத்தம் பெறுகின்றது. வாலி கடல் கடைந்த வரலாறுதான் அனுமனுக்கு முதலில் ஞாபகம் வருகிறது. தேவர்களோடும் அசுரர்களோடும் சரிசமானமாகத் தோள்கொடுத்து நின்றானும் வாலி. மந்தரகிரி தேய்ந்து உருக்குலைந்து போகவும், வாசுகி என்ற பாம்பு வேகவும் கடலைக் கடைந்தானும்:

கழறு தேவரோடு அவுணர் கண்ணின் நின்று
உழலும் மந்தரத்து உருவு தேய முன்
அழலும் கோளரா அகடு தீவிடச்
சுழலும் வேலையைக் கடையும் தோளினான்.

வாலி பெற்றிருந்த வரத்தின் மேன்மை அடுத்தபடியாக, அனுமன் மனத்தைக் கவர்கிறது. 'வாலியை எதிர்க்கும் உறுதி படைத்தவர் இல்லை. அப்படி யாராவது அவனோடு போர் செய்யக் கிட்டினார்கள் என்றால், அவர்களுடைய பலத்தில் பாதியை அவன் பெற்றுவிடுகிறான்.

கிட்டினுர் பொரக் கிடைக்கில் அன்னவர்
பட்ட நல்வலம் பாகம் எய்துவான்'

என்று சொல்லி வரும்போதே, இந்த வலிமைக்குக் காரணம் வாலியின் பக்திதான் என்பதையும் அனுமன் உணர்த்துகிருன்;

எட்டு மாதிரத்து இறுதி நாளும் உற்று
அட்ட மூர்த்தி தாள் பணியும் ஆணையான்.

பேசி வருகின்ற அனுமனுடைய சொற்களில் கற்பனை விம்முகிறது. சொற்களைக் கேட்டு வரும் நம்முடைய மனத்திலும் வாலியின் ஆற்றல் எல்லையற்றதாய்க் காட்சி அளிக்கத் தொடங்குகிறது.

## கற்பனைச் சிறகு

எங்கள் ஊர் குரங்குப் பயில்வானை உங்களுக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. எப்படித் தெரிந்திருக்கும்? அவன் போன இடம் புல் முளைத்துவிட்டது. ஆனால், அவன் இருந்த காலத்தில்—அதாவது முப்பது வருஷங்களுக்கு முன்—எங்கள் ஊரிலே அவன் பெயரைச் சொன்னல் அழுத பிள்ளையும் வாய் மூடும். நமக்கேன் வம்பு என்று இருந்தவர்கள், அவன் பேச்சை எடுக்கமாட்டார்கள். ஊர் வம்பை விலைக்கு வாங்கும் புண்ணியவான்கள் கூட, அவன் சம்பந்தப்பட்ட மட்டில் எச்சரிக்கையாய் இருப்பார்கள். மாரியம்மன் கோயில் திருவிழா என்ருல், குரங்குப் பயில்வான் வைத்ததுதான் சட்டம். அவன் எடுக்கும் பாற் காவடிதான் கடைசிக் காவடி. அவன் காவடி வந்த பிறகுதான்—அது எவ்வளவு நேரமானுலும்—அம்மனுக்கு அபிஷேகம் நடக்கும். ஊரிலே போரடி என்ருல் களத்துமேட்டிலே பயில்வானைக் காணலாம். 'என்னுங்க, நல்ல விளைச்சல் தானே?'' என்று குசலம் விசாரித்துவிட்டு அவன் போய்விடுவான். அவனைத் தொடர்ந்து ஊர்க் காணிக்கையாகக் கண்டுமுதல்

நெல்லின் ஒரு பகுதி அவனுடைய வீட்டில் போய் நிற்கும்; இது 'வளமை'. இதிலிருந்து யாராவது தவறி விட்டால் அவருடைய வைக்கோற்போர் திடீரென்று தீப்பற்றி எரியும். படுக்கப் போகும்போது கட்டி வைத்த சேர் காலையில் எழுந்து பார்த்தால் சூன்யமாக இருக்கும். புதிதாகப் பிடித்து வந்த மாடு ஊர்நோக்கித் திரும்பி விடும். அவருடைய வாழைக் கொல்லையில் தாரைக் காணமுடியாது. புளிய மரம் பழத்திற்குப் பதிலாகப் பழுப் பைத்தான் தரும் ; பூத்துக் குலுங்கும் மா மரத்திலிருந்து பூ மட்டுந்தான் அவருக்குக் கிடைக்கும்.

ஆகவே, போலீஸ்காரர்களுக்கும் குரங்குப் பயில் வான் பேரில் ஒரு கண். அவர்களைக் கேட்டால் 'குரங்குப் பயில்வானா? ஆறடி உயரம், நல்ல கருப்பு நிறம், மாறு கண், இடக்கை வாகு, குஸ்தியிலே கை தேர்ந்தவன், ஊரில் நடக்கும் கலகங்களுக்கெல்லாம் ஜவாப்தாரி' என்று சொல்லுவார்கள். இது உண்மைதான். ஆனால் இந்த உண்மையை உங்கள் அனுபவமாக நீங்கள் பற்ற முடிகிறதா? குரங்குப் பயில்வானை நேரிலே கண்ட உணர்ச்சி போலீஸ் வர்ணனையின் மூலமாக உங்களுக்குக் கிடைக்கிறதா? இல்லை.

ஆனால், எங்கள் பேச்சைக் கேளுங்கள். அது அந்தக் காலத்துச் சிறுவர் பேச்சு.

'அடே நம்ப 'குரங்கு' சுண்டு விரலால் தட்டினால் போதும், டிரில் வாத்தியார் நூறு குட்டிக்கரணம் போடு வார்' என்பான் ஒருவன்.

இது நடக்கக் கூடிய காரியமா? நடக்காவிட்டால் என்ன, இதைச் சொல்வதே எங்களுக்குப் பரம திருப்தி. நாங்கள் இந்தச் செய்தியை ஆரவாரத்தோடு வரவேற் போம்.

'உப்பனாற்றுப் பாலத்திலே 'குரங்கு' நடந்து வந்தானாம். பாலம் ஒரே அடியாய் ஆடிச்சாம், உனக்குத் தெரியுமா?' என்பான் இன்னொருவன்.

'இதென்னடா பிரமாதம்? பெருமாள் கோயில் தோப்பில் போன மாசம் 'குரங்கு' என்ன பண்ணி

ளுன் தெரியுமா ? தென்னை மரத்திலே சாய்ந்தான். அவ்வளவுதான். மரம் மடமடவென்று கீழே விழுந்தது. கண்ணுலே பார்த்தேன்' என்று சாதிப்பான் உண்மை விளம்பி.

'எங்கப்பா சொன்னர், 'குரங்கு' லைட்ஹவுஸ் பக்கம் போகக்கூடாது என்று கலெக்டர் உத்தரவு போட்டிருக்கிருனும். 'குரங்கு' மூச்சுவிட்டால் லைட்ஹவுஸ் கீழே விழுந்திடுமே' என்று பெருமை தொனிக்கப் பேசுவான் தாலூக்கா குமாஸ்தாவின் புத்திர சிகாமணி.

இதற்குப் பிறகு அவரவர் கற்பனையின் எல்லை வரையில் நாங்கள் ஒவ்வொருவரும் சென்று குரங்குப் பயில்வானின் பெருமையை எங்கள் அனுபவமாகப் பற்றுவோம்.

ஒரே இரவில் தனியாக நின்று உப்பளுற்று வெள்ளத்தை பயில்வான் அணைபோட்டுத் திருப்பியது; ரயில்வே என்ஜினை இழுத்து ஓடாமல் நிறுத்தியது; மடத்து யானையை ஒரே அறையில் கீழே வீழ்த்தியது; கொள்ளிடம் முதலையை வாயைக் கிழித்துக் கொன்றது; இப்படியாக அப்ராக்ருத சம்பவங்கள் பலவற்றை எங்கள் மனம் சிருஷ்டி செய்து அவற்றின் மூலமாகப் பயில்வானின் வலிமையைத் தொட்டுப் பார்க்கும்.

எதற்காக இதைச் சொல்ல வந்தேன் என்ருல், கவிதையும் இப்படித்தான். செய்தி ஒன்றைக் கற்பனை மூலமாகத்தான் கவிதை அனுபவமாக மாற்றுகிறது. வாலியின் வலிமையை வற்புறுத்தத் தொடங்கும் அனுமனுடைய சொற்களில் இந்தக் கற்பனை வேகத்தைத்தான் காண்கிரேம். 'வாலி கடலைக் கடைந்தான். கண்ணுதல் அருளால் தன்னை எதிர்ப்பவர் பலத்தில் பாதியை அடையும் வர வலிமையைப் பெற்ருன்' என்று சொல்லி விட்டு, 'அவனைவிட வேகமாகக் காற்றும வீசாது. அவன் நெஞ்சிலே முருகனுடைய நெடு வேலும் பாயாது.

'கால் செலாது அவன் முன்னர் கந்தவேள்
வேல் செலாது அவன் மார்பின்

இது மாத்திரமா? மேரு மலை முதலான குல கிரிகள் அவன் அசைந்தால் வேரோடு அசையும். நீண்ட கார் மேகமும் வானமும் சூரிய மண்டலமும் பாதாளமும் அவன் தோள்களால் தூர்ந்து போகும்.

மேருவே முதற் கிரிகள் வேரொடும்
பேருமே அவன் பெயருமேல் நெடும்
காரும் வானமும் கதிரும் நாகமும்
தூருமே அவன் பெரிய தோள்களால்'

என்று பேசும் அனுமன், தன் கற்பனைக்குப் புராணக் கதைகள் என்ற சிறகுகளையும் அமைத்துக் கொள்கிறான். இந்தப் பூமியை அப்படியே தூக்கி நிறுத்தியது ஒரு பன்றி; இது வராகவதாரக் கதை. அன்றொரு நாள் கடலில் கிடந்து மலையொன்றைத் தன் முதுகிலே சுமந்தது ஓர் ஆமை; இது கூர்மாவதாரக் கதை. பின்னொரு நாள் எதிர்த்தவன் மார்பைப் பிளந்தது ஒரு சிங்கம்; இது நரசிங்காவதாரக் கதை. இம் மூன்று கதைகளும் அனுமனுடைய பேச்சுக்கு எப்படிக் கற்பனை வேகத்தைத் தருகின்றன, பாருங்கள் :

பார் இடந்த வெம்பன்றி பண்டைநாள்
நீர் கிடந்த பேராமை நேருளான்.
மார்பு இடந்த மால் எனினும் மற்று அவன்
தார் கிடந்ததோள் தகைய வல்லனோ?

இச் சொற்கள் நம்மை இந்தக் குறுகிய உலகை விட்டு எங்கேயோ இழுத்துச் செல்கின்றன. அங்கே அந்த விசுவவெளியில் பிரும்மாண்டமான வடிவங்கள் கம்பீரமாக உலாவி, வியப்பையும் திகைப்பையும் உண்டாக்கும் பராக்கிரம தீரத்தில் மிதக்கின்றன. நம் மனம் சிறுமையிலிருந்து விடுபடுகிறது. நீளமும் அகலமுமற்ற பெருமை நெடுவெளியில் சஞ்சரிக்கிறது. இந்தப் பெருமையின் தனித்தன்மை வலிமை என்பதையும் உணர்கிறது. பிறகு வாலியின் பக்கம் திரும்பி அவன் 'தார்கிடந்த தோளின்' வரம்பில் ஆற்றலையும் அனுபவமாகப் பற்றி விடுகிறது. இதன் பிறகு 'கடல் ஒலிப்பதும் காற்று தடையில்லாமல் வீசுவதும், சூரியனுடைய தேர்

வானத்தின் மீது செல்வதும் வாலி கோபிப்பான் என்று அஞ்சியே, வேறில்லை.

> கடல் ஒலிப்பதும் கால் சலிப்பதும்
> மிடல் அருக்கர் தேர் மீது செல்வதும்
> தொடரின்மற்றவன் முனியும் என்று அலால்
> அடலின் வெற்றியாய் அயலின் யாவதோ'

என்று வாலியின் ஆட்சித் திறனைப் பற்றி அனுமன் பேசும்போது, 'உண்மைதான்' என்று எண்ணவும் நமக்குத் தோன்றுகிறது.

கவிதை என்பது தினசரிக் குறிப்பில் நாம் எழுதும் 'பெருங்காயம் ஒன்றரை அணு, பேனுக்கத்தி சாணை பிடித்ததற்கு முக்கால் அணு' என்ற சிறுமைக் கணக்கு அன்று. அது உள்ளதை உள்ளபடி கூறுவதும் அன்று. உள்ளதை மனிதனுடைய உள்ளம் உணர்ந்தபடி கூறுவதே கவிதை. கற்பனைச் சிறகை விரித்துப் பறந்து சென்று ஒவ்வொரு உணர்ச்சியின் தொடுவான வளைவையும் கவிஞன் அளந்து வருகிறான். இந்த உணர்ச்சிப் பெருக்கின் ஒளியிலேதான் அவன் செய்திகளைப் பார்க்கிறான். நமக்குச் சொல்லவும் வருகிறான். எப்படிச் சொல்வது? அவனுடைய அனுபவ முகடு எங்கே, நம்முடைய வீட்டுக் கூரை எங்கே? ஏணி வைத்தாலும் எட்டாதே என்று அவன் மயங்குவதில்லை. கதை என்ற அற்புதத்தால் நம் மனத்திற்குக் கற்பனைச் சிறகு அமைக்கிறான். நாமும் அவனுடைய வானத்தின் அளவுக்கு உயரப்பறந்து அவன் உணர்ந்தபடி உலகைக் கண்டுவிடுகிறோம்.

## அனுமன் சொன்ன கதை

கற்பனைச் சிறகு விரித்துச் செல்லும் அனுமனுடைய சொற்கள் வாலியின் ஆற்றலை அளவிட முயன்று அதை அளவற்றதாக நமக்குக் காட்டுகின்றன. பிறகு வாலியைப் பற்றிய வரலாற்றிலே இறங்குகின்றன. அந்த வரலாறு வாலியின் குணங்களில் முக்கியமான இரண்டை வற்புறுத்துகிறது.

அனுமன் சொன்ன கதையைத் துழவிப் பார்ப்போம். அந்தக் கதை மிகுந்த பரபரப்புடன் தொடங்குகிறது. வாலியின் பகைவனை அசுரன் ஒருவன் திடீரென்று மின்னுகின்ற பற்களோடு தோன்றுகிறான். வாலியோடு மோதுகிறான். இந்தத் துவந்த யுத்தம் நடந்த முறையைப்பற்றி அனுமன் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. வந்தான், மோதினான், ஓட்டம் பிடித்தான்; இவ்வளவுதான் அனுமன் சொல்வது:

'முன்னவன் குலப் பகைஞன் முட்டினன்
மின் எயிற்று வாள் அவுணன்.
முட்டி நின்றவன் முரண் உரத்தினால்
ஓட்ட அஞ்சி நெஞ்சு உலைய ஓடினன்.'

ஏன் என்று தெரியவில்லையா ? தன்னைத் தொடர்ந்து வரும் வாலியை எதிர்த்து நின்று சமாளிக்கவோ, பூமண்டலத்தில் எந்த இடத்திலும் உயிரோடு இருக்கவோ முடியாது என்று கண்டு, எட்டுவதற்கு அரிய குகை ஒன்றில் ஒளிந்து கொள்ள இடம் தேடிக்கொண்டான்:

வட்ட மண்டலத்து அரிது வாழ்வு எனா
எட்டரும் பிலம் அதனில் எய்தினன்.

நடந்த போரை வருணிக்காமல் விடும் அனுமன், அப்படிச் செய்வதன் மூலமாக, வாலியின் பிரமாதமான வலிமையை வருணித்தும் விடுகிறான். வந்தவன் சாதாரணமானவன் அல்லன். 'மின் எயிற்று வாள் அவுணன்;' ஆனால், வந்தவுடனே, அவன் ஒளிந்து கொள்ள இடந் தேடி ஓடினன் என்றால் வாலியின் போர்த்திறமையைப் பற்றி வேறு என்ன சொல்லவேண்டும்? சொல்லின் வறுமையே இங்குச் சொல்லின் செல்வமாக நிற்கும் அதிசயத்தைக் காண்கின்றோம்.

ஓடிய மாயாவியை, வாலி விடாமல் துரத்திச் செல்கிறான். போகின்றவனை,

'வெய்தின் எய்தினன் வெகுளி மேவினன்'

என்று குறிப்பிடுகிறான் அனுமன். வீரம் மட்டும் தனித்து நிற்கும்போது வெகுளிக்கு இடமில்லை. 'என்னை

எதிர்த்து வருவதற்கும் ஒருவன் இருக்கிருனு?' என்ற செருக்கே அப்படி ஒருவன் வந்ததும் அவன்பேரில் கோபமாக மாறுகிறது. போருக்கு வந்தவன், தான் தோற்றதற்கு அடையாளமாக ஓடிவிட்டான். வீரத்தைப் பொறுத்த வரையில் அவன் செத்த பாம்பு. ஆனல் அகங்காரம் நிறைந்த உள்ளம், வலி இழந்து தோற்று ஓடிய பகைவனையும் மன்னிக்காது. அவனை ஒழித்து நிர்மூலமாக்கும் வரையில் அது நிம்மதி பெருது கொதித்துக் கொண்டே இருக்கும். வாலியின் வேகம் இந்த அகங்காரக் கொதிப்பையே காட்டுகிறது. மாயாவியைத் தேடிக்கொண்டு பிலத்தின் உள்ளே சென்ற வாலி அங்கே நீண்ட காலம் இருக்கும்படியாக நேரிட்டு விட்டது. காலம் எவ்வளவு கழிந்தால்தான் என்ன? அவன் மனத்திலேஇருந்த கொதிப்பும் மாயாவியின் உயிரைக் குடித்து விடவேண்டும் என்றிருந்த ஆத்திரமும் குன்றவே இல்லை.

'வெம்மை சால்
மோக வென்றிமேல் முயல்வின் வைகிட'

என்று பிலத்தில் வாலி தங்கியதைப் பற்றி அனுமன் பேசுகிருன். வெற்றி மாத்திரம் வாலியின் இலட்சியம் என்ருல், அதை மாயாவி ஓடிய உடனேயே அவன் அடைந்துவிட்டான். ஆனல், வாலியின் 'வெம்மை சால்' இதயம் பகைவன் உயிரைக் குடிக்க வெறி கொண்டு விம்மியது. பிலத்திற்குள்—கண் காணுத, இருளடைந்த குகைக்குள்—வலிய எதிரி ஒருவனைத் துரத்திச் சென்ற வாலி அஞ்சா நெஞ்சுடையவன்தான். ஆனல், அந்த நெஞ்சிலே அஞ்சாமையோடு அகங்காரமும் ஓங்கி வளர்ந்திருக்கிறது. அது 'ஒளித்தவன் உயிர்க்கள்ளை' வாலி உண்ட பிறகுதான் அடங்குகிறது. கொதிப்பு இருந்த இடத்திலே அப்போதுதான் களிப்புத் தோன்றுகிறது.

'ஒளிந்தவன் உயிர்க்கள்ளை உண்டு உளம்
களித்த வாலியும் கடிதின் எய்திஞன்'

எங்கே வந்து சேர்ந்தான்? பிலத்தின் வாயிலுக்குத் தான். அங்கே அவன் கண்ட காட்சி மாயாவியைக்

கொன்று தொலைத்த களிப்பை நீக்குகிறது. மறுபடியும் அகங்காரம் நிமிர்ந்து கோபத்தைக் கக்குகிறது.

பிலத்தின் வாயில் அடைபட்டிருந்தது. பெரிய பாறைகள் குறுக்கே கிடந்தன, பிரும்மாண்டமான குன்றுகள் என்று சொல்லத் தகுந்த பாறைகள். 'அடைத்தது யார்? தம்பி சுக்ரீவனை யல்லவா இங்கே காவலாக நிற்கும்படி ஆணையிட்டுப் பிலத் திற்குள் புகுந்தேன்?' என்று எண்ணிய வாலி உரத்த குரலில் சுக்ரீவனை அழைக்கிறான். பதிலில்லை. 'பேஷ், பேஷ், தம்பியார் காவல் திறமை வெகு நேர்த்தி' என்று பேசும் வாலியின் மனத்திலே, தன்னுடைய ஆணையைச் சுக்ரீவன் மீறிவிட்டான் பார்த்தாயா என்ற ஆத்திரம் மூள்கிறது.

விளித்து நின்று வேறுரை பெறுன் விரைந்து
அளித்தவாறு நன்று இளவலார்

என வால் விசைத்து வாலி எழுகிறான். காலால் எற்று கிறான். பாறைகள் பொடியாகின்றன. வெளியே வருகி றான். வருகின்றவன்,

எவரும் அஞ்சுறச் சீறினன்.

கிட்கிந்தையை நோக்கி விரைந்து இப்போது வரு வது கோபத் தீ உமிழும் அகங்கார வடிவம். 'என் ஆக்ஞையை மீற இந்தச் சுக்ரீவனுக்கு அவ்வளவு ஆணவமா?' என்ற ஒரே கேள்விதான் வாலியின் சின நெருப்புக்குத் தீராத எரி சுள்ளியாக அமைகிறது.

சுக்ரீவன் வந்து பணிகிறான். 'ஐயனே. உன் கட்டளையை மீற நான் விரும்பவில்லை; நீ பிலத்திலிருந்து நெடு நாள் வராமல் இருந்ததால் வருந்தி, உன்னைத் தேடி, நீ சென்ற வழியே நானும் போகலாம் என்றிருந் தேன். ஆனால், என் கருத்தை ஏற்பார் இல்லை. நானும் போய்விட்டால் கிட்கிந்தை அரசுப் பொறுப்பை ஏற்க ஒருவரும் இல்லாமற் போய்விடும் என்றும், அரசை நான் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும் வானரத்

தலைவர்கள் வற்புறுத்தினார்கள். நல்ல வேளையாக நீ வந்துவிட்டாய். என் பாரம் நீங்கியது. இனி உன் அரசு, உன் மக்கள்.

உன்னுடைக்
கணங்கள் காவல் உன் கடமை'

என்கிறான் சுக்ரீவன். தம்பியின் வார்த்தை அண்ணன் காதில் ஏறவில்லை. அகங்காரப் பேய்க்கு அண்ணனாவது தம்பியாவது! அந்தப் பேயின் ஆட்சியிலே உள்ள வாலி,

கடல் கடைந்த அக் கரதலங்களால்
உடல் கடைந்தனன் இவன் உலைந்தனன்.

கடல்கடந்த பேராற்றல் அகங்காரத்தின் கருவியாகி இப்போது தம்பியின் உடலைக் கடையும் உன்மத்தமாகி விடுகிறது.

சுக்ரீவன் உயிருக்கு மன்றாடி ஓடுகிறான். மதங்க முனிவர் சாபத்தால் வாலி புகமுடியாத மலைச்சாரல் அவனுக்குப் புகலிடமாகிறது. ஆனால், வாலியின் கோபம் தணியவில்லை. அவன் அகங்காரமும் மழுங்கவில்லை. கிட்கிந்தைக்குத் திரும்பியதும் சுக்ரீவனைத் தொலைக்கவில்லையே என்ற ஏமாற்றத்தை, அவன் மனைவியை அபகரித்து ஒருவாறு ஆற்றிக்கொள்ளுகிறான்.

இதுவே அனுமன் சொன்ன கதை. இக்கதையின் மூலமாக வாலியின் அஞ்சா நெஞ்சும், அவனுடைய மனத்திலே மலையாகத் திரண்டிருந்த அகங்காரமும் பளிச் சென்று புலப்படுகின்றன. அனுமன் கூறியது உண்மை தானா என்பதை வாலியைச் சந்தித்துப் பழகியல்லவா [illegible] ண்டும்? அதைச் செய்வோம்.

## வீரத்தில் விரிசல்

கிட்கிந்தை அரண்மனையில் வானர அரசன் வாலி சயனித்திருக்கிறான். இந்த நிலையில்தான் முதலில் அவனை நாம் காண்கிறோம். வெளியிலிருந்து போருக்கு அழைக்கும் சுக்ரீவனுடைய சிங்கநாதம் அதிர்ந்து வருகிறது. வாலி விழித்துக்கொள்ளுகிறான். அண்டத்தை

எல்லாம் விழுங்கி நின்று, அச்சத்தை நமது நெஞ்சிலே விதைக்கும் சிங்கநாதம் வாலியின் காதில் விழுகிறது. ஆனால் அவன் சிரிக்கிறான். அந்தச் சிரிப்பின் கம்பீரத்தில்தான் எவ்வளவு தன்னம்பிக்கை, எவ்வளவு அலட்சியம்! அதன் அடித்தலத்தில் கோபம் புரளுகிறது. 'வந்தனன், வந்தனன்' என்று சொல்லிக்கொண்டு வாலி போருக்குப் புறப்படுகிறான். 'இதோ வந்துவிட்டேன், போருக்கா அழைக்கிறாய்?' என்று வாலி சீறியதாக வைத்துக் கொள்ளலாம். 'வந்துவிட்டான் தப்பிச் சென்ற சுக்ரீவன். இப்போது கைக்குள்ளே சிக்கிவிட்டான். இன்று அவனைத் தொலைத்து விடுகிறேன்' என்று வாலி உறுமியதாயும் வைத்துக் கொள்ளலாம். எப்படி வைத்துக் கொண்டாலும், போர் என்றவுடன் துள்ளி விம்மும் வாலியின் அஞ்சா நெஞ்சம் தெளிவாகத் தெரிகிறது. இதன் உள்ளே கோபமும், ஆத்திரமும், பகைமையும் கொழுந்துவிட்டு எரிகின்றன. ஆகவே, இப்போது வாலியைக் காணும்போது பிரளய காலத்தில் எல்லாவற்றையும் சுட்டெரிக்கும் ஊழி நெருப்பும் ஆல கால விஷமுமே ஞாபகத்திற்கு வருகின்றன:

முடிவில் நீக்குறும்
காலமும் ஒத்தனன் கடலின் தான் கடை
ஆலமும் ஒத்தனன் எவரும் அஞ்சவே.

இப்படிப் புறப்படுகின்ற வாலியை அவன் மனைவி தாரை தடுத்துநிறுத்த முயல்கிறாள். வாலியோ போருக்குச் செல்லத் துடிக்கிறான்:

'விலக்கலை விடுவிடு விளித்துளான் உரம்
கலக்கி அக்கடல் கடைந்து அமுது கண்டென
உலக்குவித்து உயிர் குடித்து ஒல்லை மீள்குவன்.'

தாரை நிதானமாகப் பேசுகிறாள். 'முன்னே தோற்று ஓடிய சுக்ரீவன் இப்போது மறுபடியும் புதிய வலிமையைப் பெற்றுவிட்டானா? அப்படி ஒன்றும் இராது. போர் செய்யும் நோக்கத்தோடு அவன் இப்போது வந்

திருக்கிருன் என்ருல் அதற்குக் காரணம் ஒன்றுதான் : அவனுக்குத் துணை கிடைத்திருக்கிறது' என்று சொல்லி வரும் தாரை பேச்சை முடிப்பதற்குள் வாலி குறுக்கிடு கிருன். 'இதைக் கேள். மூன்று உலகமும் ஒன்ருகத் திரண்டு என்னை எதிர்த்த போதிலும் அவை தோற்று ஓடத்தான் நேரும்' என்று தன் பிரதாபத்தைத் தானே சொல்லிக் கொள்ளுகிருன். வாலி கடல் கடைந்தது தாரைக்குத் தெரியாதா ? தெரியும். என்ருலும் வாலி அதை இப்போது சொல்லிக் காட்டி மார் தட்டுகிருன், அந்தக் கதையைத்தான் எப்படிச் சொல்லுகிருன், பாருங்கள். தேவர்கள் மந்தர மலையைப் புரட்டிப் பாற் கடலைக் கடைவதற்கு வலிமையில்லாமல் உடைந்து போனூர்களாம். அதைக் கண்டு வாலி உதவி செய்து கடலைக் கலக்கி அமுதம் எடுத்தானும்:

> பேர்வுற வலிக்கவும்
> மிடுக்கில் பெற்றியர்
> நோவுற உலந்தனர்
> அதனை நோக்கி யான்
> ஆர்கலிதனைக் கடைந்து
> அமுது கொண்டனன்.

எப்படி இருக்கிறது? இந்தப் பேச்சில் தற்பெருமை யும் அகங்காரமும் முனைப்பாக நிற்கின்றன. இதோடு நில்லாமல், தான் பெற்றுள்ள வரத்தின் மகிமையை வேறு வாலி எடுத்துச் சொல்லுகிருன். 'என்னை எதிர்க் கத் துணிந்து வருகின்றவர் பேதைகள், அப்படி எவனு வது வந்தால் அவனுடைய பலத்தில் பாதி என்னுடைய தாகிவிடும். ஆமாம். நீ ஏன் கவலைப்படுகிருய்?' என்று வாலி பேசும்போது, தாரையிடம் இதையெல்லாம் ஏன் சொல்லவேண்டும்? அவளுக்குத் தெரியாதா? பிறந்த வீட்டுப் பெருமை உடன் பிறந்தானிடமா அளப்பது என்று நமக்குத் தோன்றுகிறது. அகங்காரத்தில் பயி ரான வாலியின் தற்பெருமை நமக்குத் தெளிவாகிறது.

சிறந்த வீரன் ஒருவனிடம் இருக்க வேண்டிய அடக் கத்தை இவனிடம் காணுேமே என்று எண்ணுகிருேம். பாரதியின் 'பாஞ்சாலி சபத'த்தில் துரியோதனன் சபை

யில் பாஞ்சாலி அவமதிக்கப் பெற்றுத் துடிக்கும்போது அர்ஜுனன் பேசியதாகப் பாரதி கற்பனை செய்துள்ள வீர வாசகம் உங்களுக்கு ஞாபகமிருக்கும்.

'தனுவுண்டு காண்டீவம் அதன் பேர்'

என்கிறான் அர்ஜுனன். அந்தச் சந்தர்ப்பத்தில் இதைவிட அதிகமாகத் தன் வலிமையைப் பற்றி அர்ஜுனன் பேசி இருந்தாலும் பொருத்தமாக இருந்திருக்கும். ஆனால் பேசவில்லை. அர்ஜுனன் பேச்சில் உள்ள அடக்கமே அவன் சொற்களுக்கு எல்லை யற்ற அழுத்தம் தருகிறது. அவனுடைய வீரத்தைப் பளிச்சென்று காட்டுவதோடல்லாமல் அதற்கு மெருகும் தருகிறது. ஆனால், இங்கேயோ, தன்னைப்பற்றி நன்றாக அறிந்துள்ள தன் மனைவியிடமே வாலி தன் பெருமையைக் கொட்டி அளக்கிறான். மேலெழுந்தவா ருகப் பார்த்தால் வாலியின் சொற்களில் கம்பீரம் இருப்ப தாகத் தோன்றும். ஆனால், சந்தர்ப்பத்தை ஒட்டிப் பார்க்கும் போது, அவை அனுவசியம் என்பதோ டல்லாமல், வீரத்திற்குக் குறை உண்டாக்கும் டாம்பீகம் நிறைந்தவை என்பதும் புரியும்.

தாரை விடவில்லை. சுக்ரீவனுக்குத் துணைவனாக இராமன் வந்திருக்கிறான் என்பதைத் தான் அறிந்திருப்ப தாகத் தெரிவிக்கிறாள். 'அடாடா, இராமன் தருமமூர்த்தி யல்லவா ? அவனைப் பற்றி என்னவெல்லாமோ பேசிவிட் டாயே? என்ன தவறு? பெண்புத்தி பின்புத்தி யல்லவா? அதுதான் இப்படி யெல்லாம் இராமனைப் பற்றிக் கண்டபடி தூற்றிவிட்டாய்.

'அறத்தின் ஆறு எலாம்
இறைத்தவற்கு இயல் பல இயம்பி என் செய்தாய்
பிழைத்தனை பாவி உன் பெண்மையால்'

என்று வாலி பதில் சொல்லும்போது 'போகட்டும், இராம னுடைய பெருமையையாவது ஒப்புக்கொள்கிறானே, அந்தமட்டில் நல்லவன்தான்' என்று நினைக்கிறோம். 'இராமனா? போயும் போயும் அவன் சுக்ரீவனைத் துணை

வனைக் கொள்ளவேண்டுமா ? உலகமெல்லாம் எதிர்த்தா லும் தன் ஒரு வில்லின் துணையால் வெற்றியை நிலை நாட்டக் கூடியவன் அல்லவா ? அவன் இந்தக் குரங்கின் நட்பை நாடவா வேண்டும் ?

நின்ற பேர் உலகெலாம்
நெருங்கி நேரினும்
வென்றி வெம் சிலையலால்
பிறிது வேண்டுமோ
தன் துணை ஒருவரும்
தன்னில் வேறு இலான்
புன் தொழில் குரங்கொடும்
புணரும் நட்பு'

என்று வாலி சொன்னதும் 'பேஷ், வாலி! வீரனுக்குத் தானே இன்னொரு வீரன் பெருமை தெரியும் ? நன்றாகச் சொன்னாய்' என்று வாலியைத் தட்டிக்கொடுக்கத் தோன்றுகிறது.

ஆனால், வாலியின் கடைசி வார்த்தைகள் வேறு எங்கேயோ நம்மை அழைத்துச் சென்று விடுகின்றன. அப்படி அவன் என்ன சொல்லுகிறான் ? 'தம்பியரைத் தவிரத் தனக்கு வேறு உயிர் இருப்பதாக எண்ணாத அந்த இராமன், நானும் என் தம்பியும் ஈடுபடும் போரில், இந்தச் சகோதரச் சச்சரவில் தலையிட்டு அம்பு தொடுப் பானா ? அவன் கருணைக் கடல் அல்லவா ?

தம்பியர் அல்லது
தனக்கு வேறு உயிர்
இம்பரில் இல்லென
எண்ணி ஏய்ந்தவன்
எம்பியும் யானும் உற்று
எதிர்ந்த போரினில்
அம்பு இடை தொடுக்குமோ
அருளின் ஆழியான் ?'

இப்படிப் பேசுகிறான் வாலி. பார்ப்பதற்கு நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால், வாலி ஒன்றை மறந்து விடுகிறான். இராமனைத் தருமத்தின் வடிவம் என்றும், தருமத்தின் பாதையை உலகுக்கு எடுத்துக் காட்டுகின்றவன் என்றும்

பேசிய வாலி, தான் தம்பியோடு பகைத்து அவன் உயி ரைக் குடிக்க எண்ணுவதை இராமன் ஒப்புக்கொள்ள மாட்டான் என்பதை ஏன் உணரவில்லை? இராமனுக்குத் தம்பியர் என்றால் உயிர் என்பதுதான் வாலிக்குத் தெரிந் திருக்கிறதே? தம்பியரை அன்போடு நடத்துவதுதான் இராமனுடைய நோக்கில் தருமமானால், வாலியின் போக்கை அதர்மமாகவே அவன் கருதுவான் என்பது இந்த வாலிக்கு ஏன் புலப்படவில்லை?

காரணம் வேறொன்றுமில்லை. இராமனைப் பற்றிய செய்தியெல்லாம் வாலிக்குத் தெரிந்திருந்தபோதிலும், தனக்குத் தெரிந்ததைத் தன் வாழ்க்கையோடு ஒட்டிப் பார்த்துத் தன் குற்றத்தை உணர்ந்துகொள்ளும் நிதான மும், அடக்கமும் வாலியிடம் இல்லை. இராமன் பெரிய வன், சகோதரர்களைத் தன் உயிராகக் கருதுகின்றவன், தருமமூர்த்தி—இவையெல்லாம் வாலிக்குத் தெரிந்தது தான். ஆனால், இதைப்பயன்படுத்திக்கொண்டு தன்னைத் திருத்திக்கொள்ள அவன் முயலவில்லை. தருமம் இன்னது என்று தெரிந்தும் தாம்மாத்திரம் அதற்கு விதிவிலக்காக இருப்பதுபோன்ற பாவனையோடு தங்கள் உணர்ச்சியின் வழியே செல்கின்ற மனிதர்களை நாம் கண்டதில்லையா? இவர்களில் ஒருவன் வாலி. அவன் மனத்திலே உள்ள வெறுப்பும், கொடுமையும் அவன் போகிற போக்கை நியா யமானதாகவே அவனுக்குக் காட்டுகின்றன. அகங்காரம் அவன் கண்ணை மறைத்துவிடுகிறது. இந்தக் குருடனே போர்க்களத்தை நோக்கி இப்போது மிடுக்கோடு விரைந்து செல்கிறான். அகங்காரத்தால் வாலியின் வீரத்தில் விரிசல் தோன்றிவிட்டது. இனி அது உடைய வேண்டியதுதான்.

## அகங்காரத்தின் கடைசி மூச்சு

அணையும்போதுதான் விளக்கு படர்ந்து எரியும். இராமபாணம் உடம்பிலே தைத்துக் கீழே சாய்கின்றான் வாலி. உயிருக்கு மன்றாடித் துடிக்கும் இந்த நிலையில் தான் அவன் இயல்பு பூரணமாகத் துலங்குகிறது.

முதலில் புலப்படுவது அவனுடைய அஞ்சா நெஞ்சம். உடம்பைத் தொளைத்துக்கொண்டு பாயும் அம்பைத் தன் கைகளால் பற்றி வெளியே இழுத்து எறிந்துவிட முயல்கிறான். பலிக்கவில்லை. வேதனையிலும், ஏமாற்றத்திலும் புரளுகிறான். ஆனால், அப்போதும் அவனுடைய வீர உள்ளம் அம்பை எய்தவனுடைய பராக்கிரமத்தைப் பாராட்டுகிறது. 'தேவர்கள் இந்த அம்பை ஏவி இருப்பார்களா? இராது. அவர்களுக்கு இவ்வளவு வலிமை ஏது? இந்த அம்புதான் எவ்வளவு வேகத்தோடு உள்ளே பாய்ந்து செல்கிறது! என்னுடைய பலத்தாற்கூட இதைத் தடுக்க முடியவில்லையே' என்று வியந்து பேசுகிறான்; சிரிக்கிறான்.

> தேவரோ என அயிர்க்கும் அத்தேவர் இச் செயலுக்கு
> ஆவரோ அவர்க்கு ஆற்றல் உண்டோ எனும் அயலோர்
> ஏவரோ என நகை செயும்.

ஆமாம், வாலி நகைக்கிறான். தன் உயிரைக் குடிக்கும் யமனுடைய வலிமையைப் பார்த்து நகைப்பதென்றால் அது சாமானியமான காரியமா? வாலியின் வயிரம் பாய்ந்த நெஞ்சால்தான் அது முடிகிறது.

'அம்பை வெளியே இழுத்து எறிந்துவிடத்தான் முடியவில்லை. அதைச் சிறிது நிறுத்தி, அதில் பொறித்திருக்கும் பெயரையாவது பார்க்கலாம். எய்தவன் யாவன் என்று அப்போது தெரியுமே' என்று எண்ணி, வற்றிக்கொண்டிருக்கும் தன் பலம் முழுதையும் திரட்டி, அந்த அம்பை நிறுத்தி, அதைப் பார்க்கிறான் வாலி. இந்த வீரத்தை உலகமெல்லாம் பார்த்துப் பிரமிக்கிறது.

அம்பிலே பொறித்துள்ள பெயரைக் கண்டதும் 'இராமனா இதைச் செய்தது?' என்று எண்ணும் வாலியை ஆச்சரியம், வெட்கம், ஆத்திரம், கோபம் இவையெல்லாம் வந்து பற்றிக் கொள்ளுகின்றன. 'அடாடா, தருமமே, தொலைந்துவிட்டதே' என்ற எண்ணம் 'இப்படி என்னை அடித்துத் தள்ளியதும் தருமந்தானோ என்னவோ' என்ற பரிகாசமாக மாறுகிறது.

வளைகுமு மகுடம் சாய்க்கும்
வெடிபடச் சிரிக்கும் மீட்டும்
உள்கிடும் இதுவுந்தான் எவ்
ஒங்கு அறமோ என்று உன்னும்

இராமனைப் பற்றி என்ன வெல்லாமோ, பெருமையாக எண்ணியிருந்தோமே, இப்படிச் செய்து விட்டானே, என்ன அக்கிரமம்' என்று நோகின்ற வாலியின் எதிரே, இராமன் தோன்றுகிறான்.

அவனைக் கண்டானோ இல்லையோ, வாலியின் ஆத்திரம் முழுதும் கனல் வெள்ளமாகப் பாய்ந்து சீறுகிறது. வாலி பேசுகிறான். எடுத்த எடுப்பிலேயே கசப்பின் எல்லையைத்தொட்டு விடுகிறது அவன் பேச்சு. 'உண்மைக்காக உயிர் துறந்த தசரதன் மகனாகப் பிறந்தாயே, பரதனுக்கு அண்ணனாகவும் தோன்றினாயே, நீதானா அந்த இராமன்? பேஷ் பேஷ். தாயைப்போல் அருளோடு பிறருக்கு உதவுவது, வேதத்தைக் கடைப்பிடிப்பது, நட்பின் கடமை தவறாமல் நிற்பது, தருமநெறியில் செல்வது-இவையல்லவா உன் இலட்சியங்கள்? இவற்றை மிக அழகாகத்தான் நிறைவேற்றி இருக்கிறாய்! மற்றவர்கள் செய்தால் தீமை, தான் செய்தால் அதுவே புண்ணியம், இல்லையா?

வாய்மையும் மரபும் காத்து
மன்னுயிர் துறந்த வள்ளல்
தூயவன் மைந்தனே நீ
பரதன் முன் தோன்றினாயே
தீமைதான் பிறரைக் காத்துத்
தான் செய்தால் தீது அன்று ஆமோ
தாய்மையும் மறையும் நட்பும்
தருமமும் தழுவி நின்றாய்'

இராமனைப்பற்றி எவ்வளவோ பெருமையாகத் தாரையிடம் வாலி பேசியது நமக்குத் தெரியும். இப்போது இராமன் என்ற அந்தப் புகழ் வடிவத்தில் கறை ஏற்பட்டு விட்டதே, தர்ம விக்கிரகம் மூளியாகி விட்டதே என்ற அங்கலாய்ப்பிலா வாலி பேசுகிறான்? அதுதான் இல்லை. மகன் ஏதோ தவறு செய்து விடுகிறான். அதைக் கண்டு

'அப்பா இப்படிச் செய்யப்படாது. இது உனக்குக் கெடுதியல்லவா?' என்று புத்திமதி கூறிவிட்டு, தவறு செய்து கலங்கும் மகனுடைய துயரத்தில் தானும் பங் கெடுத்துக்கொண்டு அவனைத் தேற்ற முயல்கிறான் தந்தை. இது உண்மையான அன்பின் காரியம். இதல் லாமல் 'நாசமாய்ப் போகிறவனே. நீ எனக்கு மகனாய் முளைத்தாயே! ஊரிலே என்ன சொல்வார்கள்? என் மானம் போய்விட்டதே' என்று தகப்பன் பேசினால், அவ னுக்கு மகனிடத்தில் அவ்வளவாக அன்பு இல்லை, தன் பெருமையிலும் ஊரார் தன்னைப்பற்றிப் பேசுவதிலுந் தான் கண் என்று சொல்லவா வேண்டும்? உண்மை யான அன்பானால் அது தன்னைப் பற்றி எண்ணாது. தன்னை உதைக்கின்ற காலைத் தடவிக்கொடுத்து 'ஐயோ வலிக்குமே' என்று கவலைப்படும். இதையெல்லாம் உணர்ந்துதான் வர்ட்ஸ்வர்த் என்ற ஆங்கிலக் கவிஞன், 'அன்பின் சகிப்புத் திறன் மற்றவர்களால் தாங்கமுடியாத ஏமாற்றத்தையும் தாங்கும் வலிமை உடையது' என்று சொன்னான். நமது வள்ளுவரோ, 'அன்புடையார் என் பும் உரியர் பிறர்க்கு' என்று பேசிப் போனார்.

வாலி இராமனைப் பற்றிப் பெருமையாக எண்ணி னானே யல்லாமல் இராமனிடத்தில் அன்போ பக்தியோ வைக்கவில்லை. இராமனைப் பற்றித் தாரையிடம் பேசும் போது, வாலியின் எண்ணமெல்லாம் தன்னைப் பற்றித் தான் இருக்கிறது. இராமன் தம்பியரை உயிரினும் அதிகமாக நேசிப்பவன்; தருமவான்; ஆசவே சுக்ரீவ னோடு சேர்ந்து கொண்டு தனக்கு விரோதமாக ஒன்றும் செய்யமாட்டான் என்பது வாலி குடிக்கின்ற மனப்பால். இது அவனுடைய அகங்காரத்தில் விளைகின்ற பிரமை.

இந்தப் பிரமை இராம பாணத்தால் உடைந்ததும், அதன் அடித்தலமாக நின்ற அகங்காரம் சீறிக்கொண்டு புறப்படுகிறது. இதைத்தான் வாலியின் கோபாவேசத்தில் நாம் காண்கிறோம். 'மனைவியை அரக்கன் கொண்டு போய்விட்டான்என்றால் அதற்குக் குரக்கினத்தலைவனை நானா பிணை? என்னைக் கொலவது தான் மனு நீதியா?

அரக்கர் ஓர் அழிவு செய்து
கழிவரேல் அவர்க்கு மாறோர்
குரக்கரசு அதனைக் கொல்ல
மனு நெறி கூறிற்று உண்டோ'

என்று இராமனைத்தன் சொல்லால் குத்துகிறான். 'அங்கே அயோத்தியில் தம்பிக்கு அரசைக் கொடுத்து வந்தாய், இங்கேயும் அதே முறைப்படி தம்பிக்கு அரசுரிமையைப் பெற்றுத் தருவதற்காக அண்ணனை அடித்து வீழ்த்தினாயோ? அருமைதான்.

பெற்ற தாதை
பூட்டிய செல்வம் ஆங்கோர்
தம்பிக்குக் கொடுத்துப் போந்து
நாட்டொரு கருமம் செய்தாய்
எம்பிக்கு இவ்வரசை நல்கிக்
காட்டொரு கருமம் செய்தாய்
கருமந்தான் இதன்மேல் உண்டோ'

என்று கேட்கிறான். 'தருமத்தை நிலை நாட்டுகின்ற லக்ஷணத்தைப் பார்க்கவில்லையா? இதுதான் தருமமோ?

ஒருவர் மேல் கருணை தூண்டி
ஒருவர் மேல் ஒளிந்து நின்று
வரசிலை குழைய வாங்கி வாய்
அம்பு மருமத்து எய்தல்
தருமமோ'

என்று சொல்லை விஷத்திலே தோய்த்து வீசுகிறான். 'சந்திரனுக்குத்தான் களங்கம் உண்டு. சூரியனுக்குக் களங்கம் இல்லையே என்ற குறையை, சூரியன் மரபுக்குப் பழியை உண்டாக்கிப் போக்கிக் கொண்டாயா?

கார் இயன்ற நிறத்த களங்கம் ஒன்று
ஊர் இயன்ற மதிக்கு உளதாம் என
சூரியன் மரபுக்கும் ஓர் தொன் மறு
ஆரியன் பிறந்து ஆக்கினையாம் அரோ'

என்று சொற் சவுக்கால் சாடுகிறான்.

ஆனால், வாலிக்கு மனுநெறியைப் பற்றியோ, தருமத்தைப் பற்றியோ, இக்ஷ்வாகு வம்சம் களங்கமில்லாமல் இருப்பதைப் பற்றியோ கவலை இல்லை. இராமனுடைய வீரத்திற்குக் குறைவு வந்துவிட்டதே என்றும் அவன் கலங்கவில்லை.

அவன் உணர்ச்சியெல்லாம் இராமன் தன்னை வீழ்த்திவிட்டானே என்ற ஆத்திரம் ஒன்றுதான். அந்த ஆத்திரத்தில் இராமனுடைய வீரத்தையும், புகழையும். பழித்துப் பேசுகிறான். அவற்றைத் தன்னுடைய தற்காப்பாக எண்ணினான் அல்லவா, அந்த எண்ணம் சிதைந்ததால் உண்டான ஏமாற்றம் கோபமாகவும் கசப்பாகவும் மாறுகிறது. ஏதோ வீரத்தையும், சத்தியத்தையும் காப்பாற்ற முயன்றவன் போல்,

'வீரமன்று விதியன்று மெய்ம்மைமேல்
வாரமன்று'

என்று தொடங்குகிறான். என்றாலும் உடனேயே

'நின் மண்ணினுக்கு என் உடல்
பாரமன்று பகையன்று'

என்று தன்னைப் பற்றியே எண்ணும் அகங்காரக் கோட்டைக்குத் திரும்பிவிடுகிறான். அந்த இருளில் இருந்து கொண்டு, தான் சுக்ரீவனிடம் காட்டாத இரக்கத்தை இராமன் தனக்குக் காட்டவில்லையே என்று தடுமாறிக் கலங்குகிறான்:

'இரக்கம் எங்கு உகுத்தாய்
என்பால் எப்பிழை கண்டாய் அப்பா'
'ஈரமன்றி இது என் செய்தவாறு அரோ'

வாலியின் ஆவேசப் பேச்சு இராமனுக்கு உண்டான தீராத வசையை அழுத்தமாக, மறுக்க முடியாத வகையில் எடுத்துக் காட்டும் குற்றச்சாட்டு என்று பலர் எண்ணுகிறார்கள். அது அப்படித்தானா என்று பிறகு பார்க்கலாம். ஆனால், வாலியின் இயல்பை ஆராய்ந்து செல்லும் நமக்கு இந்தப் பேச்சில் புகையும் வாலியின் அகங்காரந்தான் தென்படுகிறது. எதைச் சாடுகிறோம் என்பது

தெரியாமல் பக்கத்தில் உள்ளதையெல்லாம் உடைத்தெறியும் குருடனைப்போல, அகங்காரத்தால் பார்வையிழந்து வாலி தத்தளிக்கிறான். அப்போது அவனுக்குச் சரேலென்று ஞானோதயம் உண்டாகிறது. அந்த அற்புதத்தைப் பார்க்கலாம்.

## அமைதி

அம்பினால் அடிபட்டு விழுந்து மரண வேதனையில் புரளும் வாலி, இராமனைப் பார்த்துப் பேசும் வார்த்தைகளில் உள்ள கசப்பே, அவை அகங்காரத்தின் கடைசி மூச்சு என்பதைக் காட்டுகிறது. இராமனுடைய பெருமை குறைந்து விட்டதே, இக்ஷ்வாகு வம்சத்தின் புகழ் மங்கி விட்டதே, தருமம் சிதைந்து விட்டதே என்றெல்லாம் வாலி பேசிய போதிலும், உண்மையில் அவன் இவை ஒன்றையும் பற்றிக் கவலை கொள்ளவில்லை. 'என்னையா கொன்றாய்? இல்லை; தருமத்தின் வேலியையல்லவா பிரித்து விட்டாய்?

வாலியைப் படுத்தாயலை மன் அற
வேலியைப் பிரித்தாய் விறல் வீரனே'

என்று பேசும் வாலி, தரும வேலி பிரிந்ததில்அன்று, தன்னை இராமன் அடித்து வீழ்த்தியதில்தான் மனத்தைச் செலுத்துகிறான். இல்லாவிட்டால்,

'தாரம் மற்றொருவன் கொள தன் கையில்
பார வெம் சிலை வல்லோய் பழியன்றோ
நேரும் என்று மறைந்து நிராயுதர்
மார்பில் எய்யவோ வில்லிகள் வல்லரே'

என்றும் இராமனைப் பார்த்துப் பேசுவானா?

வாலியின் கேள்விகளுக்கு இராமன் தருகின்ற சமாதானம் வாலியின் பேரில் இரு குற்றங்களைச்சாட்டுகிறது. ஒன்று சுக்ரீவன் பேரில் தவறில்லை என்று உணர்ந்தும், அவனை வாலி கொல்ல முற்பட்டது.

கொல்லல் உற்றனை கோது அவற்கு
என்பது உணர்ந்தும் இரங்கலை.

இதற்குக் காரணம் வாலியின் அகங்காரந்தான். குற்றம் இல்லை என்பது தெரிந்தும், தான் சொன்னபடி கேட்கச் சுக்ரீவன் தவறிவிட்டான் என்பதே வாலியின் நெஞ்சை உறுத்துகிறது. அதை அவனால் மறக்க முடிய வில்லை; அதாவது, தன்னை மறக்க முடியவில்லை. சுக்ரீ வன் தம்பியல்லவா என்ற எண்ணமாவது வந்ததா? அதுவுமில்லை.

பின்னவன் எனப் பேர்ந்து ஒன்று நோக்கலை.

அதுதான் போகட்டும். வாலியின் சீற்றத்தைத் தாங்க முடியாமல், உயிரைக் காத்துக்கொள்ள எண்ணி சுக்ரீவன்தான் ஓடிவிட்டானே, அப்போதாவது வாலி பேசாமல் இருந்தானா? இல்லை. பகைவனாக இருந்தா லும், தோற்று ஓடிப்போனவனை விடாமல் துரத்திச் செல்வது வீரத்திற்கு அழகா? ஓடினவனும் 'அபயம், அபயம், என்னை ஒன்றும் செய்யாதே' என்று கதறிக் கொண்டுதான் ஓடுகிறான். ஆனால் வாலியின் கோபம் அப்போதும் தணியவில்லை.

'அல்லல் செய்யல் உனக்கு அபயம் பிழை
புல்லல் என்னவும் புல்லலை பொங்கினாய்'

ஆகவே நீதிக்கும், சகோதரத்துவத்திற்கும். வீரத் திற்கும் மாறான காரியத்தை வாலி செய்தான் என்பதே இராமனுடைய தீர்மானம்.

இதைவிடக் கொடுமையான குற்றம் ஒன்றையும் வாலி இழைத்ததாக இராமன் கருதுகிறான். இன்னொரு வன் மனைவியை அபகரித்தல் என்ற குற்றம், எவ்வித மான பெருமை ஒருவனுக்கு இருந்தபோதிலும் அதை யெல்லாம் அழித்துவிடும் என்பது இராமனுடைய கருத்து.

ஈரம் ஆவதும் இற்பிறப்பு ஆவதும்
வீரம் ஆவதும் கல்வியின் மெய்ந்நெறி
வாரம் ஆவதும் மற்றொருவன் புணர்
தாரம் ஆவதைத் தாங்கும் தருக்கரோ!

இந்த இலட்சிய அளவுகோலைக் கொண்டு பார்த்தால் சுக்ரீவன் மனைவியை வாலி அபகரித்தது மன்னிக்க முடியாத பெருங் குற்றமாகி விடுகிறது.

முதற் குற்றச்சாட்டுக்கு வாலி பதிலொன்றும் சொல்லவில்லை. அது நியாயமானதுதானே என்ற சந்தேகமாவது அவன் மனத்தில் உதித்திருக்க வேண்டும். அப்படியானால் தன்னுடைய அகங்காரத்தைப் பற்றிய உணர்வு அவன் மனத்தில் தலைதூக்கியது என்று கொள்ளலாம். இந்த நிலையில் இரண்டாவது குற்றச்சாட்டுக்கு வாலி ஏதோ சமாதானம் சொல்ல முயல்கிறான். 'ஆமாம். ஆனால் சுக்ரீவன் மனைவியை நான் கொண்டது தவறில்லை. குரங்குகளாகிய எங்களுக்கு மனிதர்களுக்கு உள்ளதைப்போல் கட்டுப்பாடு கிடையாது. எங்களுக்கு,

மணமுமில்லை மறை நெறி வந்தன
குணமுமில்லை குண முதற்கு ஒத்தன.

வேதம் விதித்த முறைப்படி கலியாணம் என்பது கிடையாது: அடிப்படையான இலட்சிய ஒழுக்கத்தை ஒட்டிய பண்பும் இல்லை. மனம் போனபடி எங்கள் உறவு அமையும்.

உணர்வு சென்றுழிச் செல்லும் ஒழுக்கலால்

வேறு ஒழுக்கம் எதுவும் கிடையாது. மனிதர்களுடைய சட்டத்தைக் கொண்டு எங்கள் செயலை ஆராய்வது பொருத்தமன்று' என்று பேசுகிறான் வாலி.

நியாயமாகத்தான் தோன்றுகிறது. ஆனால், இந்த நியாயத்தை எடுத்துக் காட்டக்கூடிய அளவுக்கு அறிவும் உணர்வும் பெற்ற ஓர் உயிரை, அதன் வடிவம் குரங்கு என்பதற்காக, குரங்காகக் கருதிவிடலாமா? இதைத்தான் இராமன் சொல்லுகிறான்: ' உடலின் அமைப்பைக் கொண்டு தருமத்தை நிர்ணயிப்பது தவறு. சேற்றில் புரளும் பன்றிக்கு நன்மை எது, தீமை எது என்பது தெரியாது. இந்த நிலையில் அதன் காரியங்களுக்கு அது பொறுப்பாளி இல்லை. பாவ புண்ணிய வேறுபாடும

அதற்கு இல்லை. ஆனால் எது நன்மை, எது தீமை என்ற உணர்வு அதற்கு எப்படியோ உண்டாகிவிட்டால், அதன் பிறகும் 'நான் பன்றிதானே, எதைச் செய்தால் என்ன' என்று கேவலம் மிருக உணர்ச்சியின் வசப்பட்டு நிற்பதற்கு அதற்கு உரிமை இல்லை. உடலின் வடிவத்தையும் தன்மையையும் வைத்து அன்று; உணர்வின் நிலையை வைத்தே ஓர் உயிரின் ஒழுக்கத்தை வரையறுக்க வேண்டும். இந்த வகையில் மனித வடிவம் பெற்றவர்கள் பலர் விலங்குகளாகவே இருக்கலாம்; விலங்கு உடல் பெற்ற உயிர்கள் தெய்வ நிலைக்கு உயர்ந்து விடலாம்.

தக்க இன்ன தகாதன இன்ன என்று
ஒக்க உன்னலர் ஆகில் உயர்ந்து உள
மக்களும் விலங்கே மனுவின் நெறி
புக்கவேல் அவ் விலங்கும் புத்தேளிரே.

வாலியைக் குரங்காக இராமன் மதிக்கவில்லை. வாலியும் தன்னை அப்படி எண்ணவில்லை. 'நான் குரங்கு' என்ற எண்ணங்கூட குரங்குக்கு வருவதில்லை. தன்னைப் பற்றியும், தனக்கும் மற்றவர்களுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமை பற்றியும் எண்ணுகின்றவன் மனிதன் தான். அவன் ஒருவன்தான் தன்னுணர்வு என்பதைப் பெற்று நிற்கின்ற உயிர். வாலியின் நிலை மனிதனுடைய நிலை. இல்லாவிட்டால் இராமன் தருமமூர்த்தி என்பதை உணரவோ, ஒப்புக்கொள்ளவோ, எதிர்க்கவோ அவனால் முடிந்திருக்குமா ?

இந்த உண்மை பளிச்சென்று வாலிக்குப் புலப்படுகிறது. பொறிகள் கலங்கி ஒடுங்குகின்ற கடைசிக் காலத்தில் புலன்களும் அவனுக்கு ஒடுங்கத் தலைப்படுகின்றன. இராமனுடையவார்த்தைகளை அவன்மனத்திலே வாங்கிக் கொள்கிறான். அந்த மனமும் அவியத் தொடங்குகிறது. தன்னுடைய அகங்காரத்தின் சிறுமை மிகத் தெளிவாக அவனுக்குத் தெரிகிறது. உயிரின் அகங்காரத்தை அழித்து, அதனை ஆட்கொள்ளும் இறைவனுடைய தள்ளரிய பெரு நீதியின் மனித வடிவமாக, அவன் இராம

ளேக் காண்கிறான். அவன் உள்ளத்தில் சஞ்சலமும், போராட்டமும் அணைகின்றன. அமைதி பொங்குகிறது. ஒரு கணத்தில் அவன் சத்தியப்பொருளோடு ஒட்டும் நிலைக்கு உயர்ந்து விடுகிறான். கிட்கிந்தைக்கு அரசனாக இருந்து, தம்பியைப் பகைத்து, உணர்ச்சியால் உந்தப் பெற்ற அகங்காரப் பொம்மையாகத் திரிந்த அந்த வாலி நின்ற இடத்திலே, பேரின்பத்தைத் தொட்டுக்கொண்டு புதிய வாலி ஒருவன் நிற்கிறான்.

## புதிய வாலி

அழியும் நிலையில் உள்ள உடல், அடங்கும் நிலையில் உள்ள மனம்—இவற்றிலிருந்து இப்புதிய வாலி தோன்றுகிறான். பொறிகளும், புலன்களும், மனமும், சித்தமும் தேய்ந்துவிட்டன. அகங்காரம் வீசிய புயலும் ஒடுங்கியது. உலக இச்சைகளும் பாசங்களும் மறைகின்றன. அவன் 'சிறியன சிந்தியாதான்' ஆகிறான்.

அவன் சிந்தை முழுதும், பிரபஞ்சத்தின் மூலமந்திரமாய் நின்று 'தருமமும், தகவும், சால்புமாய்' பரிணமிக்கும் பரம்பொருளைச் சார்ந்து நிற்கிறது. தன் அகங்காரத்தின் சிறுமை முழுதையும் வாலி உணர்கிறான். அதை அழித்த பெருங் கருணையை எண்ணி எண்ணிப் பரவசம் அடைகிறான் ;

தாயென உயிர்க்கு நல்கித்
தருமமும் தகவும் சால்பும்
நீயென நின்ற நம்ப நெடிது நீ
நோக்கு நோன்மை
நாயென நின்ற எம்பால்
நவையற உணரலாமோ ?

எவ்வளவு சிந்தித்தும் என்ன, அந்தக் கருணையை 'நவையற'—அதாவது குறைவில்லாமல் - உணர்ந்து விட முடியுமா? ஒன்று மட்டும் தெரிகிறது. கூரிய அம்பினாலே அகங்காரத்திற்கு உரமாக இருந்த உடம்பையும் அதன் வலிமையையும் அது அழித்தது.

ஏவு கூர் வாளியால்
எய்து நாய் அடியனேன்
ஆவி போம் வேலையில்
அறிவு தந்து அருளினாய்.

இந்த அறிவின் ஒளியிலே இராமனைப் பரம்பொருளாகக் காண்கிறான் வாலி.

மூவர் நீ முதல்வன் நீ
முற்றும் நீ மற்றும் நீ
பாவம் நீ தருமம் நீ
பகையும் நீ உறவும் நீ

என்று பேசுகின்ற வாலிக்கு, அண்ட சராசரங்களை ஊடுருவி நிற்கும் சத்தியத்தின் தரிசனம் கிடைத்து விட்டது. காலத்தைக் கடந்து நிற்கின்ற பொருள், காலகதியின் ஓட்டத்திலே நிழலாடும்போது பகையாக வும், உறவாகவும், பாவமாகவும், தருமமாகவும், காலச் சுழலில் அகப்பட்ட துரும்பான தனி உயிருக்குத் தோன்றுகிறது. ஆனால் அதன் பகைமையே உறவு; அதன் பாவமே தருமம். பகையாக நின்றுதானே வாலி யின் அகங்காரத்தைக் தேய்த்து, அது விடுதலையை — பகையும் உறவும் கடந்த நிலையை — வாலிக்குத் தந்தது? இதையும் வாலி காண்கிறான்:

வரம் எலாம் உருவி என் வகையின்
ஆர் வலிமைசால்
உரம் எலாம் உருவி வந்து
உயிர் எலாம் நுகரும்நின்
சரம் அலால் பிறிது வேறு
உளதரோ தருமமே?

தான் பெற்றிருந்த வரங்களின் பலத்தையும், வீரம் நிறைந்த ஆற்றலையும், தன் உயிரையும் ஒரே கணத்தில் பருகிய அந்த அம்பைத் தருமமாகவே வாலி கருதுகிறான். 'தான்' என்ற சிறுமையைத் தகர்த்த அந்த அம்பை, வேறு எந்த வகையிலே உய்ந்த உயிர் எண்ண முடியும்? வாளால் அறுத்துச் சுடுகிறான் மருத்துவன். அதற்காக நோயாளி மருத்துவனை நொந்து

கொள்ளுகிருனு? இல்லை. அதற்கு மாருக அவனிடம் 'மாளாத காதல்' அல்லவா கொள்கிருன்? பிறவி நோய்க்கு மருந்தாக, தன் பேதைமையை மாற்றிய அமுதமாக இராமனை வணங்குகிருன் வாலி.

> 'அரந்தை வெம் பிறவி நோய்க்கு
> அருமருந்தான ஐயா'

என்று வாய்குளிர, மனங்குளிர அழைக்கிருன். 'இனி எனக்குக் குறைவில்லை. ஞானியர் எந்தப் பொருளை யாவரும் எவையுமாய் இருக்கிறது என்று பாராட்டுகிருர்களோ, எந்தப் பொருள் காலமும் பயனுமாய் உள்ளது என்கிருர்களோ, எது பூவின் மணத்தைப்போல விசுவ வெளி எங்கணும், பொருள் அனைத்தும், தோய்ந்து நிற்கிறது என்று குறிப்பிடுகிருர்களோ, அந்தப் பொருளின் தன்மையோடு ஒன்றி நிற்கும் பரமபதம் இனி எனக்குக் கிடைப்பது அரிதா? கிடைத்தே விட்டது. உயர்வு தாழ்வு என்ற தத்துவம் அற்றுப் போகும்படிக்கு ஒரு தனிப் பொருளாய் நிற்கும் தனிமையனை உன்னைத்தான் கண்டு விட்டேனே! இனிக் காண்பதற்கு என்ன உளது?

> யாவரும் எவையுமாய் இருதுவும் பயனும்மென்
> பூவும் கல்வெறியும் ஒத்து ஒருவரும் பொதுமையாய்
> ஆவ நீ யாவதென்று அறிவினர் அருளினர்
> தாவரும் பதம் எனக்கு அருமையோ தனிமையோய்'

என்று பேசும் வாலியின் சொற்களில் ஜீவன் முக்தன் ஒருவனுடைய ஞானம் பேசுகிறது.

இந்த நிலையை அடைந்த ஒருவனுக்கு ஆசாபாசங்கள் இல்லை. தன்னை உய்வித்த பெருங்கருணை மற்றவர்களையும் ஆட்கொள்ள வேண்டும் என்ற ஒரே ஆசை தான் வாலிக்கு இருக்கிறது. பக்கத்திலே நிற்கின்ற சுக்ரீவனைப் பார்க்கிருன். தனக்குக் கிடைத்த செல்வம் அவனுக்கும் கிடைக்க வேண்டும் என்று எண்ணுகிருன். ஆனல் அது வேறு விதமாக வரட்டும். தன்னைக் கடிந்து ஆட்கொண்டபேரருள் அவனையும் கடிந்துகொள்ளாமல், அணைத்துத் திருத்தலாகாதா என்று நினைக்கிருன். சிறியன சிந்திக்க மறந்த வாலியின் உள்ளத்தில்தான்

எவ்வளவு பரிவு! தனக்குத் தீங்கு இழைத்தவன் என்று சுக்ரீவனை எண்ணவில்லை. தீங்கா? இதுவா தீங்கு? இதைவிடச் சிறந்த உபகாரம் யாரால் செய்ய முடியும்? தன் கண்ணை மறைத்த ஆணவத் திரையை விலக்கி, தன்னை ஆட்கொள்வதற்குத் தருமத்தையே அழைத்து வந்தது தீங்காகுமா? இந்த உதவிக்கு என்ன கைம்மாறு செய்ய முடியும்? சுக்ரீவனுக்குக் கிடைக்கப் போவதெல்லாம் கிட்கிந்தை அரசு. தனக்கோ? விடுதலையல்லவா கிடைத்துவிட்டது?

வெற்று அரசு எய்தி எம்பி வீட்டரசு எனக்கு விட்டான்.

ஆனால், இந்த அரச போகத்தில் அழுந்தி சுக்ரீவனும் தன்னைப்போல் குருடனாகிவிட்டால்? தருமம் அவனையும் அழிக்குமே! இந்த எண்ணம் வந்ததும் இராமனைப் பார்த்து, 'அரச வாழ்க்கை என்ற கள்ளை யுண்டு, இந்தச் சுக்ரீவன் தவறு செய்தால், அவனை அணைத்துத் திருத்து. என்மேல் ஏவிய பகழியை அவன் மேலும் ஏவாதே' என்று வேண்டுகிறான்:

'பூவியல் நறவம் மாந்தி புந்தி
வேறு உற்ற போழ்தில்
தீவினை இயற்று மேனும்
எம்பியைச் சீறி என்மேல்
ஏவிய பகழி என்னும்
கூற்றினை ஏவல்'.

என்றாலும் அவனுக்குத் தெரியும். தன் வேண்டுகோளைப் பொறுத்ததன்று தருமத்தின் தளராக்கதி என்பது அவனுக்கு இப்போது நன்றாகத் தெரியும். தன்னோடு ஒட்டி நிற்போருக்குத் தன்னையே அடிமையாகத் தந்துவிடும் அந்தச் சக்தி, எதிர்ப்போரை அழித்தும் விடும் என்பதை அவன் இப்போதுதானே உணர்ந்திருக்கிறான்? ஆகவே சுக்ரீவனைப் பார்த்து 'இறைவனுடைய கருவியாக நில். என்னைப்போல் அகங்காரத்திற்கு இடம் தந்து ஏமாந்து போகாதே. அவன் பணி

யாற்றி இம்மை மறுமை நலன்களை எல்லாம் பெற்று வாழ்.

> திரு மறுமார்வன் ஏவல்
> சென்னியில் சேர்த்திச் சிந்தை
> ஒருமையில் நிறுவி மும்மை
> உலகினும் உயர்தி'

என்று புத்திமதி கூறி, வாழ்த்துகிறான். தன் தம்பியின் பக்கம் நின்று தனக்கு விரோதம் செய்தவன் என்று அனுமனை எண்ணவில்லை. 'உன் கை வில்லைப்போல் உன் கருவியாக நிற்பான் இவன்' என்று பேசி அனுமனுக்கு இராமன் கருணையில் இடந்தேடுகிறான். தன் மகன் அங்கதனை அழைத்து அவனுக்கு ஞானத் தந்தையாகவும் விளங்குகிறான். 'சாவது பெரிய காரியமில்லை. பிறப்பதும் இறப்பதும் இயற்கையின் நியதியிலே உள்ள அம்சங்கள். ஆனால் இத்தகைய சாவு எனக்கு வந்தது என் பாக்யம். இது சாவேயன்று; முடிவற்ற விடுதலைக்கு வழியாக அமைந்தது. அழிவை அமர வாழ்வாக மாற்றிய மெய்ப்பொருள், இதோ இராமனாக வந்து கால் தரைதோய நின்று, கண்முன்னே காட்சி தருகின்றது. அதை வணங்கு' என்று அறிவு புகட்டுகிறான். இராமனைப் பார்த்து 'என்னைப்போலவே இவனையும் உன் அடைக்கலப் பொருளாக ஏற்றுக் கொள்' என்று ஞானாசிரியன் கடமையைச் செலுத்துகிறான். அவ்வளவுதான். இதோடு வாலியின் உயிர் பிரிகிறது.

முடிவடையும் தருணத்தில்தான் வாலியின் வாழ்க்கை வீரமாகப் பொலிகிறது. அவன் உடலையும் அகங்காரத்தையும் ஒருங்கே வீழ்த்திய இராமன் வாளி, அவன் வீரத்தைப் பழுதற்றதாகச் செய்தது. வீரத்தில் இருந்த விரிசல் மறைந்தது. ஞான ஒளி வீசும் ஆன்ம வீரமாக அது கணப்பொழுதில் வளர்ந்தது. இறைவனுடைய நீதிக்கும் கருணைக்கும் சான்றாகக் கம்பனுடைய காவியத்தில் என்றும் விளங்கும் இடத்தையும் பெற்றது.